ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# திருமாலின் வண்ணமிகு திருக்கோலங்கள்

*Author*

**J. RENGARAJAN**

21, N.G.O. Colony,
Pudukkottai - 622 001.
Tamilnadu. Ph : 04322-265406






ஸ்ரீமதே ராமாநுஜாய நம: - நித்யஸ்ரீ - நித்யமங்களம்

**ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமி**

**50வது பட்டம்,**

**ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி மடம்**

128, வடக்கு உத்திர வீதி, ஸ்ரீரங்கம் – 620 006.

**SRIRANGA NARAYANA JIYAR SWAMI**

Sriranga Narayana Jiyar Swami Matam

*128, North Uthra Street, Srirangam - 620 006.*

ஸ்ரீமதுபயவேதாந்த ப்ரவர்த்தகராயும் ஸ்ரீஸம்யமி ஸார்வபௌமராயும், சாஸநாதிகத ஸ்ரீரங்கநாத ஸகலவித கைங்கர்ய நிர்வாஹகராயும், ஸ்ரீரங்கம் ஸ்தலத்தார்களின் முதல்வராயும் எழுந்தருளியிருக்கும்

**ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி**

**ஸ்ரீ ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி**

போன்: 2432810 ......................200


"திருமாலின் வண்ணமிகு திருக்கோலங்கள்" என்ற தலைப்பில் எழுதப்பட்டிருக்கும் இப்புத்தகத்தில் நம் பழமை மிகு பாரத தேசத்தில் அமைந்துள்ள 108 திவ்ய தேசங்களைப்பற்றி விவரமாக எழுதப்பட்டுள்ளது. யாத்ரீகர்கள் எளிதில் செல்வதற்காக இத்திருத்தலங்கள் எங்கெங்கே அமைந்துள்ளது என்பதை பற்றிய விவரங்கள் எழுதப்பட்டுள்ளன. திவ்ய தேசங்களைப் பற்றி ஆழ்வார்கள் பாடியுள்ள முக்கியப் பாசுரங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. திவ்யதேசங்களைப் பற்றி விவரமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இந்தப் புத்தகத்தைப் படிக்கும்போதே அந்தந்த திவ்யதேசங்களை நேரில் சென்று பார்ப்பது போன்ற எண்ணம் மனதில் தோன்றுகின்றது. மிகுந்த சிரமங்களோடு பல விஷயங்களை க்ரஹித்து இந்தப் புத்தகம் எழுதப்பட்டது பாராட்டத்தக்க செயலாகும். இப்புத்தகம் ஒவ்வொரு இல்லத்திலும் இருக்கவேண்டிய புத்தகமாகும். இப்புத்தகத்தை சிறந்த முறையில் வெளியிட்டிருக்கும் ஆசிரியர் திரு. **J.ரெங்கராஜன்** அவர்கள் நல்ல மேன்மை அடைந்து தீர்க்க ஆயுளுடன் க்ஷேமத்தை அடைய வேணுமாய் பெரிய பெருமாளையும் பெரியபிராட்டியாரையும் ப்ரார்த்தித்து மங்களாசாஸனம் செய்கிறேன்.

ஸ்ரீ ரங்கநாராயண ஜீயர்

ஸ்ரீரங்கம்,
7.9.2006.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி
ஸ்ரீரங்கநாராயண ஜீயர்

Sri:

(Registration No 513 of 1992)



# SRI VAISHNAVA SRI

www.srivaishnavasri.com

**Founder : Late R.Ananthachari**

**Secretary & Course Director : SriVaishnavaSri A. Krishnamachari M.A.(Triple), B.Sc.,**

H.O 214, East Uthara Street, Srirangam, Trichy- 620 006. ☎. 0431-2434398

B.O Old No 36 A, New No 28, Amudham Flats, Govindan Road, Near Srinivasa Theatre, West Mambalam, Chennai - 33 ☎ 044-24715120

★ Pioneers in conducting Distance Education on SriVaishnavism and Higher Studies on Eedu

★ Publishers of books on Srivaishnavaite Literature ★ Institute of Research on Indology

★ Publishers of the monthly magazine "Pancnajanyam" ★ Epigraphic studies on "Koil, Thirumalai, Perumal Koil"

Date 21-06-2006

## அணிந்துரை

நம் தேசத்திலுள்ள வைஷ்ணவ திவ்யக்ஷேத்திரங்களைப் பற்றி அனைவரும் அறிந்துகொள்ளும்படி எளிமையான நடையில் விளக்கமாக உள்ள நூல்கள் மிகச் சிலவே உள்ளன. இக்குறையைப் போக்கும் வண்ணம் ஸ்ரீ உ.வே. ரங்கராஜன் ஸ்வாமியின் "திருமாலின் வண்ணமிகு திருக்கோலங்கள்" நூல் அமைந்துள்ளது.

ஒவ்வொரு திவ்யக்ஷேத்திரத்திற்கும் ஒரு பாசுரத்தை மேற்கோள் காட்டி அந்த க்ஷேத்திரத்தின் சிறப்பு, மங்களாசாஸனம் செய்த ஆழ்வார்கள், மூலவர், உத்ஸவர், விமானம், அந்த திவ்யக்ஷேத்திரத்திற்கு செல்லும் வழி போன்ற செய்திகள் சுருக்கமாகவும், எளிமையாகவும் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது.

ஆசிரியரின் வைணவப்பணி மேலும் சிறக்க ஸ்ரீபெரியபெருமாள் பெரிய பிராட்டியார் திருவடிகளில் ப்ரார்த்தித்து நிற்கின்றேன்.

அடியேன் ராமாநுஜ தாஸன்

AKchn

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர்

**ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர்**



Srimathe Ramanujaya Nama:

Srimad Vara Vara Munaye Nama: Sri Vishnu Chitha Guravе Nama:

# ஸுதர்சனர் சதாபிஷேக வைபவக் கமிட்டி

## SUDARSANAR SATHABHISHEKA VAIBHAVA COMMITTEE

3-B (New No. 5,), Puthur Agraharam, Puthur, Tiruchirapalli-620 017.

Date..............200

Sudarsanar
S.Krishna Swamy Iyengar

புத்தூர், திருச்சி - 17
18.06.2005

இந்நூலின் ஆசிரியரான ஸ்ரீமான் J.**ரெங்கராஜன்** அவர்கள் புதுக்கோட்டையில் 33 வருடங்கள் கல்வித்துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். வைணவத்தில் ஈடுபாடு கொண்டவர். ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேசங்களில் மிகவும் ஈடுபாடு கொண்டு அத்திவ்ய தேசங்களைப் பற்றி **'திருமாலின் வண்ணமிகு திருக்கோலங்கள்'** என்ற நூலை எழுதியுள்ளார். இந்நூலில் திவ்ய தேசங்களைப் பற்றி பல விஷயங்கள் தரப்பட்டுள்ளன. சோழ, பாண்டிய முதலான நாடுகளில் அமைந்துள்ள திவ்ய தேசங்களை விளக்கும்போது எம்பெருமான் நின்ற, அமர்ந்த, கிடந்த திருக்கோல ஸ்தலங்களை வரிசைப்படுத்தியும், எம்பெருமானின் திருமுக மண்டலங்கள் திசைகள் வாரியாக கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு திசைகள் நோக்கிய ஸ்தலங்கள் வாரியாகவும் வரிசைப்படுத்தி எழுதியுள்ளது அவரது சீரிய முயற்சியை உணர்த்துகிறது.

இத்திவ்ய தேசங்களில் ஈடுபாடு கொண்டவர்கள் அனைவரும் படித்து பயன்பெறக் கூடிய நல்ல நூலாகும். பல திவ்ய தேசங்களில் உள்ள எம்பெருமானின் படங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூல் ஆசிரியர் முயற்சிக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள்.

(S. Krishnaswamy Iyengar)

மேதாவியணி, கம்பீரவாக்வர்ஷீ
**Dr. M.A. வேங்கடகிருஷ்ணன்**
M.A., M.Phil., Ph.D., D.Litt.
பேராசிரியர், வைணவத் துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்.

ஆசிரியர்
**கீதாசார்யன்,**
7, தெற்கு மாட வீதி,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005

---

श्रीमते रामानुजाय नमः
श्रीमते अनन्तार्यमहागुरवे नमः
श्रीमते वरवरमुनये नमः
श्रीमते वानाचलमहामुनये नमः

## அணிந்துரை

திருமகள் கேள்வனான எம்பெருமானாலே மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் திவ்யசூரிகள் என்று அழைக்கப்பெறுகின்றனர். அவர்கள் அருளிச்செய்த பாசுரங்கள் திவ்யப்ரபந்தங்கள் என்று அழைக்கப் பெறுகின்றன. அப்பாசுரங்களில் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திருத்தலங்கள் திவ்யதேசங்கள் என்று அழைக்கப் பெறுகின்றன. அப்படி ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்யதேசங்கள் எண்ணிக்கையில் நூற்றெட்டு என்று நம்முடைய பெரியோர்கள் கணக்கெடுத்துக் கூறியுள்ளனர். இந்த திவ்யதேசங்களைப் பற்றிய விவரங்களைத் தெரிவிக்கும் வகையில் இதுகாறும் பல புத்தகங்கள் பலரால் வெளியிடப்பெற்றுள்ளன. தற்போது ஸ்ரீமான் **J.ரங்கராஜன்** அவர்கள் 'திருமாலின் வண்ணமிகு திருக்கோலங்கள்' என்றொரு புத்தகத்தை எழுதியுள்ளார். நூற்றெட்டு திவ்யதேசங்களைப் பற்றிய குறிப்புகள் அனைத்தும் இந்நூலில் சுருக்கமாகத் தரப்பட்டிருப்பதோடு, மிகவும் எளிய முறையில் யாவரும் அறிந்து கொள்ளும் வகையில் எழுதப்பட்டுள்ளது. குறிப்பாக, எம்பெருமான்களின் நின்ற திருக்கோலங்கள், இருந்த திருக்கோலங்கள், கிடந்த திருக்கோலங்கள் என்று வரிசைப் படுத்தியும், கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்ற திசைகளைநோக்கித் திருமுகமண்டலங்கள் கொண்டுள்ள எம்பெருமான்களை வரிசைப்படுத்தியும் அமைத்திருப்பது மிகவும் பயனுள்ள முறையாகும். ஆழ்வார் ஒருவர் மங்களாசாஸனம் செய்த திருத்தலம் 67, இருவர் - 21, மூவர் - 5, நால்வர் - 3, ஐவர் - 6, அறுவர் - 1, எழுவர் - 1, எண்மர் - 1, பதின்மர் - 2, பதினொருவர் - 1, ஆகமொத்தம் 108 என்று கணக்குக் காட்டியுள்ளார். (அவை எவையெவை என்ற பட்டியலையும் தந்திருக்கலாம்.) அதேபோல் ஒவ்வொரு ஆழ்வாரும் மங்களாசாஸனம் செய்துள்ள திவ்யதேசங்கள் எத்தனை என்றும் காட்டியுள்ளார். பல உபயோகமான தகவல்களை அனைத்தையும் திரட்டிக் கொடுத்துள்ள நூலாசிரியர் பாராட்டிற்குரியவர். இதுபோல் மேலும் பல நூல்களை எழுதும்வகையில் திரு. ரங்கராஜன் அவர்களுக்கு ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம் ஆகியவற்றை வழங்கும்படி கீதாசார்யன் திருவடிகளில் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

அன்பன்,

(வேங்கடகிருஷ்ணன்)

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# முன்னுரை

அடியேன் தாஸஸ்ய விக்ஞாபனம்.

அடியேன் ஸ்ரீ வைணவத்திருக்குலத்தில் பிறக்கும் பேறு பெற்று இருந்த போதிலும், ஆசிரியராகப் பணிபுரிந்து ஆன்மீகத்தில் பற்றின்றி லௌகிக வாழ்க்கையிலேயே ஈடுபட்டு இருந்த காரணத்தினால், வைணவத் திருமறைகள் பற்றியும், நமது மகத்தான ஆழ்வார்கள், ஆசாரியர்கள் பற்றியும் விரிவாக அறிந்து கொள்ள வாய்ப்பு இல்லாமல் போய் விடடது. அக்காலம் என் ஆயுளில் பேரிழப்பே. இருப்பினும் என் பெற்றோர்தம் ஆசிகளால் எம்பெருமான் திருவருளினால் அடியேன் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின், திருவரங்கம் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ என்ற நிறுவனத்தினரால் வெளியிடப்பெற்ற நூல்கள் வாயிலாகவும், அவர்களால் நடத்தப்பெற்ற வைணவம் குறித்த அஞ்சல்வழிக் கல்வியினாலும் மற்றும் பல வைணவச் சிறப்பு நூல்களின் வாயிலாகவும், வைணவம் பற்றியும், வைணவப் பெரியோர்கள் பற்றியும், ஆன்மீக வழியில் பற்று மிகக்கொண்டு, அறிந்து கொண்டேன் என்பது சூரிய ஒளி போன்று மெய்யென்றால் மிகையாகாது.

மேலும், ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ ஆசிரியர் ஸ்ரீ உ.வே.அ.கிருஷ்ண மாச்சார்யர் ஸ்வாமி அவர்களிடமும் மற்ற பல சீரிய பெரியவர்களிடமும் கேட்டறிந்த விஷயங்களும் விளக்கங்களும் அடியேனுக்கு முடவன் கைக்கம்பு போல் மிகவும் உதவியது.

எனவே, அடியேன் ஓய்வு பெற்ற பின் ஆன்மீகம்பால் ஏற்பட்ட ஈர்ப்பினாலும், பெற்றோர்கள் ஆசியினாலும், ஆசார்யன் கிருபா கடாக்ஷத்தினாலும், பெரிய பெருமாள் பெரிய பிராட்டியார் திருவருளினாலும், ஸ்ரீ உ.வே. கிருஷ்ணமாச்சாரியர் ஸ்வாமியின் வழிகாட்டலினாலும், இன்னும் பல நண்பர்களின் உதவியினாலும் பல நூல்களைப் படித்து அறிந்ததால் "திருமாலின் வண்ணமிகு திருக்கோலங்கள்" என்ற இந்நூலை மிக எளிமையான முறையில் தயார் செய்து உள்ளேன். எம்பெருமானின் 108 திவ்ய திருப்பதிகள் குறித்து பல நூல்கள் வெளி வந்துள்ள நிலையிலும் அடியேனின் ஆர்வத்தினால் முதல் முயற்சியாக இந்நூலை எழுதியுள்ளேன்.

இந்நூலின் தனிச்சிறப்பாக, சோழநாடு, பாண்டியநாடு, நடுநாடு மற்றும் மலைநாட்டுத் திருப்பதிகளில் நின்ற, அமர்ந்த, கிடந்த திருக்கோலங்கள் தனிப்பகுதிகளாகப் பகுத்துக் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக, சோழநாட்டுத் திருப்பதி ஸ்தலங்கள் மொத்தம் 40 என்றால், அவைகளில் நின்ற திருக்கோலத் தலங்கள் 21; இதில் கிழக்கு நோக்கிய திருமுகஸ்தலங்கள் 19, மேற்கு நோக்கியது 1 மற்றும் வடக்கு நோக்கியது 1 என இவ்வாறாக எழுதப்பட்டுள்ளன. அதேபோல அமர்ந்த திருக்கோல ஸ்தலங்கள் மொத்தம் 6 என்றால், அவைகளில் கிழக்கு நோக்கிய ஸ்தலங்கள் நான்கும், மேற்கு நோக்கிய ஸதலங்கள் இரண்டும் எழுதப்பட்டுள்ளன. கடைசியாக, கிடந்த திருக்கோலஸ்தலங்கள் 13ல், கிழக்கு நோக்கிய ஸ்தலங்கள் 10ம், மேற்கில் ஒன்றும், தெற்கில் இரண்டும் எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு திருத்தலத்திற்குண்டான ஆழ்வார்களின் பாசுரங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூலைக் காண்பவர்கள் என் முதல் முயற்சிக்கு அன்புடன் ஆதரவு நல்கி மேலும் பல நூல்கள் எழுத வாழ்த்திடக் கோருகிறேன்.

வைணவத்தில் அடியேனுக்கு மிக ஆர்வம் ஏற்படுத்தக் காரணமாக அடியேனுக்குக் கலங்கரை விளக்காகத் திகழும் ஸ்ரீ உ.வே.கிருஷ்ணமாச்சாரியர் ஸ்வாமியின் ஊக்கமும் பல ஆன்றோர்களின் ஆசிகளும் அடியேன் இந்நூல் வெளியிடக் காரணம் என்றால் அது வெள்ளிடைமலை போன்றது என்பதே உண்மை.

அடியேனுடைய இந்நூலில் குறைகள் தென்பட்டால் அவை அடியேனுடைய அறியாமையால் ஏற்பட்டதெனக் கருதிப் பொறுத்தருளப் பிரார்த்திக்கிறேன். மேலும் குறைகளைச் சுட்டிக்காட்டினால் அடுத்த பிற நூல்களில் நிவர்த்தி செய்ய இயலும் என்பதையும் பணிவுடன் கூறுகிறேன். மேலும், இதில் பாராட்டும்படியான அம்சங்கள் தென்பட்டால் அவை எல்லாம் வல்ல எம்பெருமானைச் சேர்ந்தவை என்று கூறிப் பணிவுடன் முடிக்கிறேன்.

தாஸன்

**ஜெ. ரெங்கராஜன்**

## க்ருதஜ்ஞதை

அடியேனுடைய ப்ரார்த்தனையையும், விண்ணப்பத்தையும் திருச்செவி சாற்றி இப்புத்தகத்திற்கு அனுக்ரஹ ஸ்ரீமுகம் ஸாதித்தருளிச் செய்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி ஸன்னதியில் அடியேனுடைய அனந்த ப்ரணாம பூர்வமான க்ருதஜ்ஞதையை விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகத்திற்கு அணிந்துரை அருளிச் செய்த சென்னைப் பல்கலைக் கழக வைணவத்துறைப் பேராசிரியர் டாக்டர். M.A.வேங்கடகிருஷ்ணன் ஸ்வாமி M.A., M.Phil., Ph.D., D Litt., அவர்களுக்கும், சுதர்சனர் புத்தூர் ஸ்ரீ உ.வே. கிருஷ்ண ஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி அவர்களுக்கும் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ உ.வே.அ.கிருஷ்ணமாச்சார்யர் ஸ்வாமி அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினை தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் வெளியிட எனக்கு ஆசிகள் வழங்கி ஊக்குவித்த புதுக்கோட்டை பிரகஸ்பதி ஸ்ரீ உ.வே. ராமபத்ராச்சாரியர் ஸ்வாமிகளுக்கும் அடியேன் இருகரம் கூப்பி நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் இப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ள சில செய்திகள் கீழ்க்கண்ட எழுத்தாளப் பெருமக்களால் அன்னார்கள் எழுதி வெளியிட்ட புத்தகங்களிலிருந்து எடுத்து இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. அதற்காக அன்னார்கள் அடியேனை அருள்கூர்ந்து க்ஷமிக்கும்படி பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

1. ஸ்ரீமான் டாக்டர் அ.எதிராஜன் அவர்கள், காரைக்குடி.
2. ஸ்ரீமதி ப்ரியா கல்யாணராமன் அவர்கள், சென்னை
3. லிப்கோ பதிப்பகத்தார், சென்னை
4. ஸ்ரீ வேங்கடாத்ரி க்ருபா - மாத இதழ் ஆசிரியர், கோவை
5. பாஞ்சசன்யம் - மாத இதழ் ஆசிரியர், ஸ்ரீரங்கம்.

இப்பெரியோர்களுக்கும் அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் வரைவுப்படியினைச் சரிபார்த்துக்கொடுத்தும், சிற்சில ஆலோசனைகள் நல்கியும் உதவிய புதுக்கோட்டை மாவட்ட நீதிபதியின் நேர்முக உதவியாளர் (ஓய்வு) திரு. ஸ்ரீ.கண்ணன் அவர்களுக்கும், இந்நூலை உருவாக்குவதில் எனக்கு ஊக்கமும், ஆக்கமும் நல்கிய எனது வாழ்க்கைத் துணைநலம் திருமதி. R.வசந்தாவிற்கும் எனது இதய பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த ஆர்.என்.ஆர். நிறுவனத்திற்கும் அடியேனின் நன்றி கலந்த வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளியிட நிதி உதவி வழங்கிய திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினருக்கும், இதற்கு ஊக்கமளித்து ஆர்வமூட்டிய புதுக்கோட்டை இலக்கியப் பேரவைத் தலைவர் ஸ்ரீமான் முத்துஸ்ரீநிவாஸன் அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தாஸன்

J. **ரெங்கராஜன்**

# பொருளடக்கம்

**ஸ்ரீ:**



**ஸ்ரீமதே ராமாநுஜாய நம:**

**ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:**

ஆழ்வார், எம்பெருமானார் ஆசார்யன் திருவடிகளே சரணம்

## பொதுத் தனியன்கள்

*ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞான வைராக்ய பூஷணம்!*
*ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்!!*

*ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்!*
*யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜா மாதரம் முனிம்!!*

*லக்ஷ்மிநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம்!*
*அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்!!*

*யோ நித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம -*
*வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே!*
*அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:*
*ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே!!*

*மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:*
*ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்!*
*ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்*
*ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா!!*

*பூதம் ஸரஸ்ய மஹதாஹ்வய பட்டநாத*
*ஸ்ரீ பக்திஸார குலசேகர யோகிவாஹாந்!*
*பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஸ்ராந்*
*ஸ்ரீமத் பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்!!*

## "ஆழ்வார்கள் அவதாரத் திருத்தலங்கள் நக்ஷத்திரங்கள் மற்றும் அம்சம்"

| வ. எண் | ஆழ்வார் | அவதார ஸ்தலம் | திருநக்ஷத்திரம் | அம்சம் |
|---|---|---|---|---|
| 1. | பொய்கையாழ்வார் | திருவெஃகா, காஞ்சி | ஐப்பசி திருவோணம் | பாஞ்சஜன்னியம் |
| 2. | பூதத்தாழ்வார் | திருக்கடல் மல்லை | ஐப்பசி அவிட்டம் | கதை |
| 3. | பேயாழ்வார் | திருமயிலை | ஐப்பசி சதயம் | வாள் |
| 4. | திருமழிசை யாழ்வார் | திருமழிசை | தை - மகம் | ஸ்ரீசுதர்சனர் |
| 5. | நம்மாழ்வார் | திருக்குருகூர் | வைகாசி விசாகம் | சேனை முதலியார் (விஷ்வக்சேனர்) |
| 6. | மதுரகவியாழ்வார் | திருக்கோளூர் | சித்திரை சித்திரை | பெரியதிருவடி |
| 7. | குலசேகராழ்வார் | திருவஞ்சிக்களம் | மாசி - புனர்வஸு | கௌஸ்துபம் |
| 8. | பெரியாழ்வார் | ஸ்ரீவில்லிப் புத்தூர் | ஆனி - ஸ்வாதி | ஸ்ரீகருடன் |
| 9. | ஸ்ரீஆண்டாள் | ஸ்ரீ வில்லிப் புத்தூர் | ஆடி - பூரம | பூமிப்பிராட்டி |
| 10. | தொண்டரடிப் பொடி ஆழ்வார் | திருமண்டங்குடி | மார்கழி கேட்டை | வனமாலை |
| 11. | திருப்பாணாழ்வார் | உறையூர் | கார்த்திகை ரோஹிணி | ஸ்ரீவத்ஸம் |
| 12. | திருமங்கையாழ்வார் | திருவாலி திருநகரி | கார்த்திகை கிருத்திகை | சார்ங்கம் |

# பன்னிரு ஆழ்வார்கள்



ஸ்ரீ பொய்கையாழ்வார்



ஸ்ரீ பூதத்தாழ்வார்



ஸ்ரீ பேயாழ்வார்



திருமழிசையாழ்வார்



ஸ்ரீ நம்மாழ்வார்



ஸ்ரீ மதுரகவியாழ்வார்



ஸ்ரீ குலசேகராழ்வார்



ஸ்ரீ பெரியாழ்வார்



ஸ்ரீ ஆண்டாள்



ஸ்ரீ தொண்டரடிப



திருப்பாணாழ்வார்



திருமங்கையாழ்வார்

**ஸ்ரீராமஜெயம்**

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிர திவ்யப் பிரபந்தம்

| வ. எண் | ஆழ்வார்கள் | பிரபந்தம் | பாசுரங்கள் |
|---|---|---|---|
| **முதலாயிரம்** | | | |
| 1 | பெரியாழ்வார் | திருப்பல்லாண்டு | 12 |
| 2 | பெரியாழ்வார் | பெரியாழ்வார் திருமொழி | 461 |
| 3 | ஸ்ரீஆண்டாள் | திருப்பாவை | 30 |
| 4 | ஸ்ரீஆண்டாள் | நாச்சியார் திருமொழி | 143 |
| 5 | குலசேகரப் பெருமான் | பெருமாள் திருமொழி | 105 |
| 6 | திருமழிசைப் பிரான் | திருச்சந்த விருத்தம் | 120 |
| 7 | தொண்டரடிப் பொடியாழ்வார் | திருப்பள்ளியெழுச்சி<br>திருமாலை | 10<br>45 |
| 9 | திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் | 10 |
| 10 | மதுரகவியாழ்வார் | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| | | மொத்தம் | 947 |
| **இரண்டாமாயிரம்** | | | |
| 1 | திருமங்கை யாழ்வார் | பெரிய திருமொழி | 1084 |
| 2 | திருமங்கை யாழ்வார் | திருக்குறுந்தாண்டகம் | 20 |
| 3 | திருமங்கை யாழ்வார் | திருநெடுந்தாண்டகம் | 30 |
| | | மொத்தம் | 1134 |

| வ. எண் | ஆழ்வார்கள் | பிரபந்தம் | பாசுரங்கள் |
|---|---|---|---|
| **மூன்றாமாயிரம்** | | | |
| 1 | பொய்கை யாழ்வார் | முதல் திருவந்தாதி | 100 |
| 2 | பூதத்தாழ்வார் | இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 3 | பேயாழ்வார் | மூன்றாம் திருவந்தாதி | 100 |
| 4 | திருமழிசைப் பிரான் | நான்முகன் திருவந்தாதி | 096 |
| 5 | நம்மாழ்வார் | திருவிருத்தம் | 100 |
| 6 | நம்மாழ்வார் | திருவாசிரியம் | 007 |
| 7 | நம்மாழ்வார் | பெரியதிருவந்தாதி | 087 |
| 8 | திருமங்கை யாழ்வார் | திருவெழுக்கூற்றிருக்கை | 001 |
| 9 | திருமங்கை யாழ்வார் | சிறிய திருமடல் | 001 |
| 10 | திருமங்கை யாழ்வார் | பெரிய திருமடல் | 001 |
| | | மொத்தம் | 593 |
| **நான்காமாயிரம்** | | | |
| 11 | நம்மாழ்வார் | திருவாய்மொழி | 1102 |

இவை தவிர எம்பெருமானார் குறித்து அவர் வாழ்ந்த காலக் கட்டத்தில் அவரது திருவடி வாசியான திருவரங்கத்தமுதனரால் அருளிச் செய்யப்பெற்று ஸ்ரீராமாநுஜர் திரு முன்பு அரங்கேற்றம் செய்த ஸ்ரீராமானுஜ நூற்றந்தாதி 108 பாசுரங்களும் திவ்ய பரபந்தத்தில் இணைக்கப்பெற்று உள்ளது.

**இப்படியும் கூறலாம்**

| பாசுரங்களின் எண்ணிக்கை | | பாசுரங்களின் எண்ணிக்கை | |
|---|---|---|---|
| முதலாயிரம் | 947 | முதலாயிரம் | 947 |
| இரண்டாமாயிரம் | 1134 | இரண்டாமாயிரம் | 1134 |
| மூன்றாமாயிரம் | 593 | மூன்றாமாயிரம் | 709* (591+40+78) |
| நான்காமாயிரம் | 1102 | நான்காமாயிரம் | 1102 |
| மொத்தம் | 3776 | மொத்தம் | 3892 |
| இராமானுஜ நூற்றந்தாதி | 108 | இராமானுஜ நூற்றந்தாதி | 108 |
| மொத்தம் | 3884 | மொத்தம் | 4000 |

ஸ்ரீ வேதாந்த தேசிகரின் ப்ரபந்த ஸாரத்தில்

*"சிறிய மடற்பாட்டு முப்பத்தெட்டிரண்டும்*
*சீர் பெரிய மடல் தனிற் பாட் டெழுபத்தெட்டும்"*

- பாசுரம் எண் 13

என்றும் பாசுரப்படி, *சிறிய திருமடலை 40 பாட்டாகவும், பெரிய திருமடலை 78 பாட்டாகவும் கொண்டு பார்த்தால் மூன்றாமாயிரத்தில் மொத்த பாசுரங்கள் எண்ணிக்கை 709 ஆகும்.

**இப்படியும் கூறலாம்**

| | | |
|---|---|---|
| முதலாமாயிரம் | 947 | பாசுரங்கள் |
| இரண்டாமாயிரம் | 1134 | பாசுரங்கள் |
| மூன்றாமாயிரம் | 593 | பாசுரங்கள் |
| நான்காமாயிரம் | 1102 | பாசுரங்கள் |
| மொத்தம் | 3776 | பாசுரங்கள் |
| இராமானுஜ நூற்றந்தாதி | 108 | பாசுரங்கள் |
| உபதேச ரெத்தினமாலை | 74 | பாசுரங்கள் |
| திருவாய்மொழி நூற்றந்தாதி | 100 | பாசுரங்கள் |
| மொத்தம் | 4058 | பாசுரங்கள் |

## திவ்ய தேச விளக்கம்

**!! ஓம் நமோ நாராயணாய !!**

எம்பெருமான்- மஹாவிஷ்ணு - இவனே இறைவன். உலகங்களைப் படைத்து, காத்து, அழிக்கின்ற எம்பெருமான் ஐந்து நிலைகளில் எழுந்தருளியுள்ளான். அவையாவன:- பரம், வ்யூகம், விபவம், அந்தர் யாமித்வம், அர்ச்சாவதாரம்.

**1. பரம்:**

பரமபதத்தில் எம்பெருமான், ஸ்ரீதேவி, பூமாதேவி, நீளாதேவி என்ற மூன்று தேவியருடன் எழுந்தருளியிருக்கிறார். இப்பூவுலகில் இல்லாத ஸ்தலம் - 108-வது திவ்யதேசம் - மோக்ஷம் பெற்ற ஜீவாத்மாக்கள் அவனுக்கு கைங்கர்யம் செய்து அவனை மகிழ்விக்கும் இடம்.

**2. வ்யூகம்:**

திருப்பாற்கடல் - 107-வது திவ்யதேசம் இந்த மானிட சரீரத்தோடு போகமுடியாத திவ்யதேசம் - ஸ்ரீமந்நாராயணன் பரமபதத்திலிருந்து புறப்பட்டு, க்ஷீராப்தி என்ற பாற்கடலில் பக்தர்களின் தர்சனத்திற்காக தன்னை வ்யூஹமாக விரிவுபடுத்திக் கொண்டு ஆதிசேடனாகிய படுக்கையில் யோக நித்திரை செய்து காட்சி தரும் இடம்.

| | | |
|---|---|---|
| வாஸுதேவன் | - | கிழக்கு திசை திருமுகம் |
| சங்கர்ஷணன் | - | தெற்கு திசை திருமுகம் |
| ப்ரத்யும்னன் | - | வடக்கு திசை திருமுகம் |
| அநிருத்தன் | - | மேற்கு திசை திருமுகம் |

தேவர்கள் தமக்கு துன்பம் நேரிடும் போதெல்லாம், இந்தப் பாற்கடலின் கரையில் வந்து ஸ்ரீமந் நாராயணனிடம் முறையிடுவார்கள் என்பது மறை கூறும் செய்தி.

### 3. விபவம்:

அடியார்தனை வாழ்விக்கவும், தீயவர்களை அழிக்கவும், தர்மத்தை நிலை நாட்டவும் எம்பெருமான் மேற்கொண்ட அவதாரங்களேவிபவம் ஆகும். விபவத்தின் முக்கிய பத்து அவதாரங்களாவன -

1. மத்ஸ்யாவதாரம் 2. கூர்மாவதாரம்
3. வராஹாவதாரம் 4. ந்ருஸிம்மாவதாரம்
5 வாமனாவதாரம் 6. பரசுராமாவதாரம்
7. ஸ்ரீராமாவதாரம் 8. பலராமாவதாரம்
9. ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் 10. கல்கி அவதாரம்

### 4. அந்தர்யாமித்வம்:

ஒவ்வொரு ஜீவாத்மாவின் உள்ளேயும் அதை தாங்கி நிற்பதாக ஐதீகம். மனிதர்கள், ஞானிகள், மற்றும் பக்தர்கள் உள்ளத்தில் உணர்வாய், உணர்வில் உயிராய் இறைவன் நிலைத்திருக்கும் நிலை. அனைத்து உயிரினங்களிலும் பரவி நிற்கும் நிலை.

### 5. அர்ச்சாவதாரம்:

பக்தர்களின் வேண்டுகோளுக்காக எம்பெருமானே தானே யுகந்து அர்ச்சாவதார மூர்த்தியாக எழுந்தருளி, பக்தர்கள் விரும்பும் உருவங்களில் இந்த அர்ச்சா வடிவங்களில் தன்னை வெளிக்காட்டியதுண்டு.

வேதம் தமிழ் செய்த மாறனான நம்மாழ்வார் இந்த அர்ச்சாவதாரமே நமக்கு எளிது என்று அருளினார் என்கிறார் ஸ்ரீமணவாள மாமுனிகள் -

செய்ய பரத்துவமாய் சீரார் வ்யூகமாய்
துய்ய விபவமுமாய்த் தோன்றியிவற்றுள் - எய்துமவர்க்கு
இந்நிலத்தில் அர்ச்சாவதாரம் எளிதென்றான்
பன்னு தமிழ்மாறன் பயின்று.

எம்பெருமானின் அம்சங்களே ஆழ்வாராக அவதரித்தார்கள். அதாவது எம்பெருமானின் சார்ங்கம் என்னும் வில்லே ஒரு ஆழ்வாராக அவதாரம். பிராட்டியே ஸ்ரீ ஆண்டாளாக அவதாரம் செய்தார். பெருமாளின் துளிகளே ஆழ்வார்களாக அவதரித்ததால், அவர்களால் பாடப்பட்ட ஆலயங்கள் திவ்ய தேசங்களாக ஆயின. திவ்யம் என்ற சொல்லுக்கு தெய்வத்தன்மை பொலிந்தது என்று பொருள். ஆழ்வார்களின் பாசுரங்கள் பெறப்பட்ட ஸ்தலங்களில் எம்பெருமான் நித்ய ஸாந்நித்யம் கொண்டுள்ளான். அதாவது அங்கேயே வாழ்கிறான் என்று பொருள்.

ஆழ்வார்களால் பாடப்பட்ட, மங்களாசாசனம் செய்யப்பட்ட ஆலயங்கள் எல்லாம் திவ்ய தேசம் என வழங்கப்படும். இவ்விதம் இந்தியாவில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திவ்ய தேசங்கள் 108 ஆகும். இந்த 108 திவ்ய தேசங்களில் இரண்டு ஸ்தலங்கள் பார்க்க முடியாதவை - ஒன்று பரமபதம், மற்றொன்று திருப்பாற்கடல்.

எஞ்சிய 106 திவ்ய தேசங்களில், வடநாட்டுத் தலங்கள் 12 ஆகும். இதில் திருமலையும், அஹோபிலமும் விந்தியமலைக்கு இப்பக்கம் தென்னாட்டிலேயே அமைந்துள்ளதால், தென்னாட்டில் மட்டும் 96 திவ்ய தேசங்கள் உள்ளன. இவைகள் தென்னாட்டில் அவதரித்தற்கான காரணத்தை தஞ்சை ஸ்ரீ.உ.வே. தாத்தாச்சார்யாரின்“திருநறையூர் ஸ்தல வரலாற்று நூலில்” காணப்படும் கருத்தை டாக்டர் வைணவச் சுடராழி அ.எதிராஜன் அவர்கள் தமது நூலில் தந்துள்ளார். அது.

“முற்காலத்தில் புண்ணிய ஸ்தலங்களை மனிதர்கள் தாங்கள் நினைத்த இடத்தில் ஏற்படுத்தினார்களில்லை. பூமியின் உள்ளே மனித ஜீவாதார சக்திக்குத் தேவையான ஒரு நரம்பு குறிப்பிட்ட இடத்தில் மட்டும் குறுக்கே ஓடி இருக்குமாம். அதற்கு தரீத்ரீசாரம் என்று பெயர். அது நியூட்டன் கண்டுபிடித்த புவியீர்ப்பு சக்தியின் பெரும் பகுதியாகும். இத்தகைய இடம் நம் இந்தியாவில், சிறப்பாகத் தென்பகுதியில் அதிகமாக இருப்பதால்தான், இந்தியாவையே உண்மையான ப்ருத்வி (பூமி) என்று மகாகவி காளிதாசனும்

கூறினார். ஆகவேதான் அந்த நரம்பு இழையோடும் தென்னாட்டின் பகுதியில் ஆலயங்கள் பல தோன்றின".

அந்த 108 திவ்ய தேசங்கள் கீழ் கண்டவாறு அமைந்துள்ளன.

| | | |
|---|---|---|
| சோழநாட்டில் | - | 40 திவ்ய தேசங்கள் |
| பாண்டிய நாட்டில் | - | 18 திவ்ய தேசங்கள் |
| மலைநாட்டில் | - | 13 திவ்ய தேசங்கள் |
| நடு நாட்டில் | - | 02 திவ்ய தேசங்கள் |
| தொண்டை நாட்டில் | - | 22 திவ்ய தேசங்கள் |
| வடநாட்டில் | - | 11 திவ்ய தேசங்கள் |
| திருப்பாற்கடல் | - | 01 திவ்ய தேசங்கள் |
| பரமபதம் | - | 01 திவ்ய தேசங்கள் |

**108 திவ்ய தேசங்கள்**

இவற்றில் 106 திவ்ய தேசங்களை ஸேவித்தவர்களை அவர்கள் காலம் முடிவுற்றதும், எம்பெருமான் கடைசி இரண்டு திவ்ய தேசங்கட்கும் அழைத்துச்சென்று, காட்சி தருகிறார் என்பது உறுதியான நம்பிக்கை.

12 ஆழ்வார்களில், மதுரகவியாழ்வார் திவ்ய தேசங்கள் எதனையும் மங்களாசாசனம் செய்யவில்லை. அவர் நம்மாழ்வாரைப் பற்றி மட்டும் ஒரு பதிகம் அருளிச் செய்தார். "வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த மாறன்" என்று நம்மாழ்வாரிடம் மட்டும் ஆழங்கால் பட்டு அவர் ஆழ்வார் ஆனார். மற்ற 11 ஆழ்வார்களும் கீழ்க்கண்டவாறு திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பொய்கையாழ்வார் | - | 06 திவ்யதேசங்கள் |
| 2. | பூதத்தாழ்வார் | - | 13 திவ்யதேசங்கள் |
| 3. | பேயாழ்வார் | - | 15 திவ்யதேசங்கள் |
| 4. | திருமழிசையாழ்வார் | - | 17 திவ்யதேசங்கள் |
| 5. | நம்மாழ்வார் | - | 37 திவ்யதேசங்கள் |
| 6. | குலசேகராழ்வார் | - | 09 திவ்யதேசங்கள் |
| 7. | பெரியாழ்வார் | - | 18 திவ்யதேசங்கள் |

| | | | |
|---|---|---|---|
| 8. | ஸ்ரீ ஆண்டாள் | - | 11 திவ்யதேசங்கள் |
| 9. | தொண்டரடிப் பொடியாழ்வார் | - | 01 திவ்யதேசங்கள் |
| 10. | திருப்பாணாழ்வார் | - | 03 திவ்யதேசங்கள் |
| 11. | திருமங்கையாழ்வார் | - | 86 திவ்யதேசங்கள் |

இந்த ஆழ்வார்களில்

| | | | |
|---|---|---|---|
| 11. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 01 |
| 10. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 02 |
| 09. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 00 |
| 08. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 01 |
| 07. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 01 |
| 06. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 01 |
| 05. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 06 |
| 04. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 03 |
| 03. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 05 |
| 02. | ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 21 |
| | ஒரு ஆழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம் | - | 67 |
| | மொத்தம் | - | 108 |

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களிலேயே எப்பொழுதும் ஆழ்ந்து இருந்ததால், இவர்களுக்கு ஆழ்வார்கள் என்ற பெயர் ஏற்பட்டது. நம்மைப் போன்ற ஜீவாத்மாக்களை நல்வழியில் செலுத்துவதற்காக எம்பெருமான் பத்து அவதாரங்கள் எடுத்தார். அதுவே தசாவதாரம் எனப்படும்.

எம்பெருமானுக்கு ஐந்து ஆயுதங்கள் உண்டு. அவை 1. ஸுதர்ஸனம் என்ற சக்கரம், 2. பாஞ்சஜன்யம் என்ற சங்கு, 3. நந்தகம் என்னும் கத்தி, 4. கௌமோதகீ என்னும் கதை, 5. சார்ங்கம் என்னும் வில், இந்த ஐந்து ஆயுதங்கள், விஷ்வக்ஸேனர், பகவானுடைய திருமார்பில் இருக்கும் ஸ்ரீவத்சம் என்னும் மறு, கௌஸ்துபம் என்னும் ரத்னம், பெரிய திருவடி எனப்படும் கருடன், வைஜயந்தி என்னும் மாலை, இவற்றின் சிறப்பு அம்சங்களாக ஆழ்வார்கள் அவதரித்தார்கள் என்றும் சொல்வதுண்டு.

ஆழ்வார்களுடைய அவதாரத்தைப் பற்றி வ்யாஸ மஹரிஷியும் பாகவதத்தில் "நாராயணனையே பரம் பொருளாகத் துதிக்கும் மஹான்கள் கலியுகத்தில் தாமிரபரணி, வைகை, பாலாறு, காவேரி, மஹாநதி இவற்றின் கரையில், அவதாரம் செய்வார்கள் என்று கூறியுள்ளார். அதன்படியே, தாமிரபரணி நதியின் கரையில் நம்மாழ்வாரும், மதுரகவிகளும் அவதாரம் செய்தனர். வைகை ஆற்றின் சமீபம் பெரியாழ்வாரும், ஆண்டாளும் அவதரித்தனர். பாலாற்றின் கரையில் பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வாரும், காவேரிக்கரையில் தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை யாழ்வாரும், மஹாநதியின் கரையில் குலசேகர ஆழ்வாரும் அவதாரம் செய்துள்ளனர்.

ப்ரபந்தம் என்றால் கவிகளால் ஆன நூல் அவை சத்புருஷனான எம்பெருமான் மேல் அவன் தன் அம்ஸங்களாக அவதரித்த ஆழ்வார்கள் அருளிச் செய்ததால் திவ்ய ப்ரபந்தங்கள் தமிழ் வேதம் என்று போற்றப்படுகின்றன. இவை எம்பெருமானையும் அவனுடைய திருக்கல்யாண குணங்களையும், நன்றாக, முழுவதும் விவரித்துப் பேசுகின்றன. எம்பெருமானை இப்படி உணர்ந்து பேசும் பெருமையை உடையதால் தான், எம்பெருமான் திருவீதிகளில் உலாவரும் போது திவ்யப்ரபந்த சேவை தான் அவனுக்கு முன்னதாக அணிவகுக்கின்றது. முதுமறைகளாகிய ரிக், யஜுர், சாம வேதங்கள் எம்பெருமானுக்கு பின்பாக ஸேவிக்கப்பட்டு வருகின்றன.

மேற்கூறப்பட்ட 108 திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் மூன்று நிலைகளில் பக்தர்களுக்கு காட்சி அளிக்கிறார். அவை 1. நின்ற திருக்கோலம், 2. அமர்ந்த திருக்கோலம், 3. கிடந்த திருக்கோலம் இந்த 108 திவ்ய தேசங்களில்,

| | | |
|---|---|---|
| நின்ற திருக்கோலம் | - | 65 திவ்ய தேசங்கள் |
| அமர்ந்த திருக்கோலம் | - | 19 திவ்ய தேசங்கள் |
| கிடந்த திருக்கோலம் | - | 24 திவ்ய தேசங்கள் |

**வண்ணமிகு திருக்கோலங்கள் - திசைவாரியாக:**

a. **நின்ற திருக்கோலம் : 65**

| | | |
|---|---|---|
| கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 48 ஸ்தலங்கள் |
| மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 12 ஸ்தலங்கள் |
| தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 03 ஸ்தலங்கள் |
| வடக்கு நோக்கி நின்ற திருக்கோலம் | - | 02 ஸ்தலங்கள் |

b. **அமர்ந்த திருக்கோலம் : 19**

| | | |
|---|---|---|
| கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | - | 14 ஸ்தலங்கள் |
| மேற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | - | 03 ஸ்தலங்கள் |
| தெற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | - | 01 ஸ்தலங்கள் |
| வடக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | - | 01 ஸ்தலங்கள் |

c. **கிடந்த திருக்கோலம் : 24**

| | | |
|---|---|---|
| கிழக்கு நோக்கி கிடந்த திருக்கோலம் | - | 18 ஸ்தலங்கள் |
| மேற்கு நோக்கி கிடந்த திருக்கோலம் | - | 03 ஸ்தலங்கள் |
| தெற்கு நோக்கி கிடந்த திருக்கோலம் | - | 03 ஸ்தலங்கள் |
| வடக்கு நோக்கி கிடந்த திருக்கோலம் | - | - |

திருமாலின் கிடந்த திருக்கோலம் (சயனம்) பத்து வகைப்படும். அவையாவன.

1. ஜல சயனம
2. தல சயனம்
3. புஜங்க சயனம்
4. உத்யோக சயனம்
5. வீர சயனம்
6. போக சயனம்
7. தர்ப்ப சயனம்
8. பத்ர சயனம்
9. மாணிக்க சயனம்
10. உத்தான சயனம்

மேற்குறிப்பிட்ட 24 கிடந்த (சயன) திருக்கோல ஸ்தலங்களில், சயன வகைகள் வருமாறு -

| | | | |
|---|---|---|---|
| 1. | புஜங்க சயனம் | - | 20 ஸ்தலங்கள் |
| 2. | வீர சயனம் | - | 01 ஸ்தலங்கள் |
| 3. | போக சயனம் | - | 01 ஸ்தலம் |
| 4. | தர்ப்ப சயனம் | - | 01 ஸ்தலம் |
| 5. | உத்தான சயனம் | - | 01 ஸ்தலம் |

ஒரே சன்னிதியில் நின்ற, அமர்ந்த, கிடந்த என்று மூன்று திருக்கோலங்கள் உடைய ஸ்தலங்களும் உள்ளன.

உதாரணம்: திருநீர்மலை, திருக்கோஷ்டியூர், திருவல்லிக்கேணி.

அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள பெருமாள் ஒரு கரத்தை மேல் நோக்கி வைத்துள்ளதற்கு அபயஹஸ்தம் என்று பெயர். மற்றொரு கரத்தை கீழ்நோக்கி வைத்திருப்பதற்கு தன்னைச் சரணடைந்து உய்யுங்கள்என்று பொருள்.

## ABSTRACT

| | | நின்ற | அமர்ந்த | கிடந்த | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 1. | சோழநாடு | 21 | 06 | 13 | 40 |
| 2. | பாண்டியநாடு | 10 | 04 | 04 | 18 |
| 3. | மலைநாடு | 10 | 01 | 02 | 13 |
| 4. | நடுநாடு | 02 | - | - | 02 |
| 5. | தொண்டை நாடு | 15 | 04 | 03 | 22 |
| 6. | வடநாடு | 07 | 03 | 01 | 11 |
| 7. | பார்க்க முடியாத ஸ்தலங்கள் | - | 01 | 01 | 02 |
| | மொத்தம் | 65 | 19 | 24 | 108 |

# சோழ நாட்டுத் திருப்பதிகள் - 40

## திருக்கோல ஸ்தலங்கள் 1 - 40

| நின்ற கோலம் | அமர்ந்த கோலம் | கிடந்த கோலம் |
|---|---|---|
| கிழக்கு | கிழக்கு | தெற்கு |
| 14. திருவெள்ளரை | 35.திருத்தஞ்சை மாமணிக்கோவில் (திருநாங்கூர்) | 1. திருவரங்கம் (பெரியகோயில்) |
| 15. திருவழுந்தூர் (தேரழுந்தூர்) | 36.திருமணிமாடக்கோவில் (திருநாங்கூர்) | 2. திருச்சிறுப்புலியூர் |
| | | மேற்கு |
| 16. திருச்சேறை | 37.திருவைகுந்த விண்ணகரம் (திருநாங்கூர்) | 3. திருப்பேர்நகர் (கோயிலடி) |
| 17. திருத்தலைச்சங்கநாண்மதியம் (தலைச்சங்காடு) | 38. திரு அரிமேயவிண்ணகரம் (திருநாங்கூர்) | கிழக்கு |
| 18. திருக்கண்டியூர் | மேற்கு | 4.திரு அன்பில் |
| 19. திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன்கோயில்) | 39.திருநந்திபுரவிண்ணகாம் (நாதன்கோயில்) | 5.திருக்கரம்பனூர் |
| 20.திருக்கண்ணபுரம் | 40.திருவாலி திருநகரி | 6.திருப்புள்ளம்பூதங்குடி |
| 21. திருநாகை நாகப்பட்டினம் | | 7.திரு ஆதனூர் |
| 22.திருநறையூர் (நாச்சியார்கோவில்) | | 8.திருக்கவித்தலம் (கபிஸ்தலம்) |



ஸ்ரீ ரங்கநாச்சியார் ஸமேத ஸ்ரீ அழகிய மணவாளன் - ஸ்ரீரங்கம்



பூமிதேவித்தாயார் ஸமேத உப்பிலியப்பன் - திருவிண்ணகர்

| | | |
|---|---|---|
| 23.திருக்காழிச்சீராமவிண்ணகரம்<br>(சீர்காழி தாடாளன்கோயில்)<br>24.திருக்கூடலூர்<br>25.திருக்கண்ணங்குடி<br>26.திருக்கண்ணமங்கை<br>27.திருத்தேவனார்த்தொகை<br>28.திருவண்புருடோத்தமம்<br>(திருநாங்கூர்)<br>29.திருச்செம்பொன்செய்கோயில்<br>(திருநாங்கூர்)<br>30.திருமணிக்கூடம் (திருநாங்கூர்)<br>31. திருக்காவளம்பாடி (திருநாங்கூர்)<br>32.திருவெள்ளக்குளம்<br>(அண்ணன்கோயில்) | | 9.திருவெள்ளியங்குடி<br>10.திருத்தெற்றியம்பலம்<br>(திருநாங்கூர்)<br>11. திருக்குடந்தை (கும்பகோணம்)<br>12.திரு இந்தளூர்<br>13. திருச்சித்ரகூடம் |
| மேற்கு | | |
| 33.திருப்பார்த்தன்பள்ளி<br>(திருநாங்கூர்) | | |
| வடக்கு | | |
| 34.திருஉறையூர் (திருக்கோழியூர்) | | |

## சோழ நாட்டுத் திருப்பதிகள் 40

### 1. ஸ்ரீரங்கம்

ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேசங்களிலே முதன்மையானதாக "கோயில்" என்ற சிறப்புப் பெயருடன் விளங்குவதும், காவிரி - கொள்ளிட நதிகளின் நடுவே அமைந்திருப்பதுமான இவ்வூர் திருச்சி நகரம் பேருந்து நிலையத்திற்கு வடக்கே சுமார் 10 கி.மீ தொலைவில் உள்ளது. பெரிய கோயில் என்றும் இத்தலத்தைக் கூறுவர்.

*ஆராத அருள முதம் பொதிந்த கோயில்*
*அம்புயத்தோன் அயோத்தி மன்னற்களித்த கோயில்*
*தோலாத தனிவீரன் தொழுத கோயில்*
*துணையான வீடணற்குத் துணையாங் கோயில்*
*சேராத பயனெல்லாம் சேர்க்கும் கோயில்*
*செழு மறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்*
*தீராத வினையனைத்தும் தீர்க்கும் கோயில்*
*திருவரங்கமெனத் திகழும் கோயில்தானே*

**(ஸ்ரீ தேசிகப் பிரபந்தம்)**

ஆழ்வார்கள் மொத்தம் 12 பேர். அதில் 11 ஆழ்வார்களின் மங்களாசாசனத்தைப் பெற்ற திவ்ய தேசம் ஸ்ரீரங்கம். மதுரகவியாழ்வார் தவிர்த்த மற்ற எல்லா ஆழ்வார்களாலும் பாடப்பட்டதால் ரங்கநாதருக்கு "ஆழ்வார்களுக்கு உகந்த எம்பெருமான்" என்ற பெயரும் உண்டு. அனைத்து வைணவ ஆசார்யர்களாலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற பெருமை உடைய திருக்கோயில்.

**தொண்டரடிப் பொடியாழ்வார்**

*பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்*
*அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தேயென்னும்*
*இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகமாளும்*
*அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே!*

கோயிலுக்கே பெரிய கோயில் என்றுதான் பெயர். ரங்கநாதருக்கும் பெரிய பெருமாள் என்று திருநாமம். தாயாரின் பெயரும் பெரிய பிராட்டி. பிராகாரங்களும் பெரிய பிராகாரம். தளிகைக்குக் கூட பெரிய

அவசரம் என்று தான் பெயர். வாத்யம் கூட இங்கே பெரிய மேளம் தான். மிக நீண்ட 7 பிராகாரங்களையும் சுற்றித்தான் பெருமாளைக் காணவேண்டும்.

பிரம்மதேவனுக்கு எம்பெருமானால் அளிக்கப்பட்டு ஆராதனம் செய்து, இக்ஷ்வாகு என்ற பூவுலக மன்னனுக்கு அளிக்கப் பெற்று அவர் குலத்தில் ஆராதனம் செய்த மூர்த்தியான ஸ்ரீரெங்கநாதனை, தன் பிரிவைத் தாழமாட்டாது வருந்தின, விபீஷணனுக்கு ஸ்ரீராமர் தந்தருளினார். இராமனிடமிருந்து பெற்றுக் கொண்ட இக்ஷ்வாகு குலதனமான ஸ்ரீரெங்கநாதன், ஸ்ரீரங்கவிமானம், பூஜா பாத்திரங்கள் அனைத்தையும் எடுத்துக் கொண்டு விபீஷணன் இலங்கைக்குப் புறப்பட்டுச் சென்றார். நடுப்பகல் நேரத்தில், காவேரி தீர்த்தத்தில் சந்த்ர புஷ்கரணிக் கரையில் தன் சிரசு மீது தாங்கி வந்த பெருமாளை இறக்கி வைத்து, நித்ய அனுஷ்டானங்களை செய்து முடித்து, பிறகு ஸ்ரீரங்க விமானத்தை எடுத்துக் கொண்டு இலங்கைக்கு புறப்பட ஆயத்தமானார். அவரால் ரங்க விமானத்தை சிறிதளவு கூட அசைக்க முடியவில்லை. விபீஷணன் மிகவும் வருத்தப்படுவதைக் கண்ட பெருமாள் அவரைத் தேற்றினார். "கலங்காதே விபீஷணா! எல்லாம் என் விருப்பப்படியே நிகழ்கிறது. கங்கையை விட காவேரியை சிறப்புடையவள் ஆக்குவேன் என்று வரம் தந்திருந்தேன். அதை நிறைவேற்றவே இங்கு வந்தேன். காவேரியை நான் மாலையாக அணிந்து கொள்வேன். இந்த இடமும் என் பெயரால் "அரங்கம்" என்று வழங்கப்படும். நான் இங்கேயே தங்கிக்கொண்டு உலகத்திலுள்ள எல்லா ஜீவராசிகள், மனிதர்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள் அனைவரையும் காத்து வருவதாக முடிவு செய்துவிட்டேன். நான் இங்கிருந்தாலும் தெற்குப் பக்கமுள்ள உன் நாட்டையே பார்த்தபடி சயனித்துக் கொண்டிருப்பேன். போய்வா" என்றருளினார் இதைத்தான் தொண்டரடிப் பொடி ஆழ்வார். -

*குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி*
*வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி*
*கடல் நிறக் கடவுளெந்தை அரவணைத்துயிலுமா கண்டு*
*உடல் எனக்கு உருகுமாலோ என் செய்கேன் உலகத்தீரே''*

*என்பார்.*

சோழ மன்னன் தர்ம வர்மா பெருமாளுக்கு பல ஆராதனைகளைச் செய்தான். மண்டபங்களைக் கட்டினான். கோபுரங்களை எழுப்பினான். காவேரியாற்றின் வெள்ளப்பெருக்கால், சிதலமடைந்து, மண் அரித்துக் காடு சூழ்ந்து யாருக்கும் தெரியா வண்ணம் மறைந்தது. பிறகு தர்மவர்மாவின் மரபில் வந்த கிள்ளி வளவன் வேட்டையாட வந்த போது, கிளி ஒன்று அவனுக்கு ரெங்கநாதர் இருககும் உண்மையைக் கூறிற்று. பூமி தோண்டப்பட்டது. ரங்கநாதர், ரங்க விமானத்தில் மீண்டும் காட்சியளித்தார். கோவில் பெரிதானது. ஆழ்வார்கள் வந்தார்கள். பக்தர்கள் வந்தார்கள். எல்லோருடைய தொடர் பணியால் இன்றுள்ள அளவு உயர்ந்தோங்கி செம்மாந்து நிற்கிறது திருவரங்கம்.

| | |
|---|---|
| **மூலவர்** | : ஸ்ரீ ரெங்கநாதன், பெரிய பெருமாள் - ஆதிசேஷன் மீது புஜங்க சயனத்துடன் தெற்கே திருமுக மண்டலத்துடன் ஸேவை சாதிக்கிறார். நம் பெருமாள், அழகிய மணவாளன் எனவும் திருநாமங்கள் உண்டு. |
| **உதசவர்** | நம் பெருமாள், நினற திருக்கோலம் |
| **தாயார்** | ஸ்ரீரங்க நாச்சியார், ஸ்ரீ ரங்கநாயகி |
| **தீர்த்தம்** | சந்திர புஷ்கரிணி காவேரி, கொள்ளிடம், வேதச்ருங்கம் |
| **ஸ்தலவ்ருக்ஷம்** | புன்னை |
| **விமானம்** | ப்ரணவாக்ருதி (ஓங்காரம்) |
| **ப்ரத்யக்ஷம்** | தர்மவர்மா, விபீஷணன், சந்திரன், ரவிதர்மன் |

**சிறப்புக்கள்:**

1. தானாகவே உண்டான ஸ்தலங்களாகக் கருதப்படும் எட்டு ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்களில், இந்த க்ஷேத்திரமே ப்ரதானமானது.
2. பெரியநம்பி, பட்டர், வடக்கு திருவீதிப் பிளளை, பிள்ளை லோகாசார்யார் இவர்களின் அவதாரஸ்தலம்.
3. தொண்டரடிப் பொடி ஆழ்வார் நந்தவன கைங்கர்யமும், திருமங்கை ஆழ்வார் திருமதில் கைங்கர்யமும் செய்த இடம்

4. ஸ்ரீமந்நாத முனிகளால் திவ்யப்ரபந்தத்தை ராக தாளங்களுடன் பாடும் முறை" அரையர் ஸேவை" என்ற பெயரில் நடைபெற்று வருகிறது. மார்கழி மாதத்து வைகுண்ட ஏகாதசியின் போது நடைபெறும் அபிநயங்களுடன் கூடிய அரையர் சேவை செவிக்கு மட்டுமின்றி கண்களுக்கும் ஒரு விருந்தாகும்.

5. ஸ்ரீ ஸ்வாமிதேசிகனுக்கு பெரிய பெருமாள் "கவிதார்க்கிக ஸிம்ஹம்" என்றும், தாயார் அவருக்கு, "ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரர்" என்றும் விருதுகள் வழங்கிய ஸ்தலம்.

6 இப்பெருமானின் பாதுகைகள் மீதுதான் "பாதுகா ஸஹஸ்ரம்" என்ற உயர்ந்த காவியத்தை ஸ்ரீதேசிகன் இயற்றினார்.

7. நம் பெருமானின் திவ்யாக்ஞையின் படி, ஸ்ரீமணவாள மாமுனிகள் இந்த சந்நிதியில் திருவாய்மொழி காலக்ஷேபம் செய்தார். நம்பெருமாள், பகவத் விஷய சாற்று மறையன்று குழந்தையாக வந்து நின்று "ஸ்ரீசைலேச தயாபாத்ர" தனியனை அருளிச் செய்து மணவாள மாமுனிவருக்கு பஹுமானமாக அளித்தார். இந்த ஸ்தலத்தை "பூலோக வைகுண்டம்" என்றும் அழைப்பார்கள்.

8. ஸ்ரீ அஹோபில மடம் 44-வது பட்டம் ஜீயரின் பெருமுயற்சியால் ராய கோபுரம் என்ற மொட்டை கோபுரத்தின் மேல் 13 நிலைகளையும், 13 கலசங்களையும் கொண்ட 236 அடி உயர கோபுரம் கட்டி முடிக்கப்பட்டு ராஜகோபுரமாக 1987ஆம் ஆண்டு மகாசம்ப்ரோக்ஷணம் நடைபெற்றது. இது தென்கிழக்கு ஆசியாவிலேயே உயரமான கோபுரமாகும்.

9 உலகு போற்றும் காவியமான கம்பராமாயணத்தை கம்பர் இங்குதான் அரங்கேற்றினார். அதுவே "கம்பர் மண்டபம்" எனப்படுகிறது. தாயார் சன்னதியின் நேரில் உள்ளது.

10. கம்பராமாயண அரங்கேற்றத்தின் போது சிரக்கம்பம் செய்து ஆமோதித்த "மேட்டு அழகிய சிங்கர்" என்னும் ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தி இங்கு கோயில் கொண்டுள்ளார்.

11. இவை தவிர தாயார் சந்நிதி, ஸ்ரீதன்வந்தரி சந்நிதி, சக்கரத் தாழ்வார் சந்நிதி, கருடாழ்வார் சந்நிதி, ஸ்ரீஉடையவர் ஸ்ரீ தேசிகன் சந்நிதி - இவ்வாறு எல்லா சந்நிதிகளும் சேவிக்க வேண்டியவை.

12. ஸ்ரீரங்கநாதரை கைகூப்பி வணங்கும் மிகப்பெரிய கருடாழ்வார் சன்னதி உள்ளது.

13. ஓம்கார வடிவத்தில் அமைந்த விமானத்தில், ஆதிசேஷனாகிய அரவணையில், சயனத்திருக்கோலத்தில், 21 அடி அளவில் இரண்டு திருக்கரங்களுடன், ஒரு கை தலையைத்தாங்க மற்றொரு கை முழங்கால் வரை நீண்டுள்ளது. அகன்ற மார்பிலே முத்தாரம், கௌஸ்துபம், வனமாலை எல்லாம் புரள்கின்றன. பெரியக்ரீடம், புனுகுத்தலக் காப்புபோட்டதால் பெருமாள் தகதகவென நிஜமாகவே சயனித்திருப்பது போல் ஒளிருகிறார். கீழே உத்சவர் அழகிய மணவாளர் நம்பெருமாள் ஸ்ரீதேவி, பூதேவியோடு காட்சி தருகிறார்.

கருவறையின் மேலே பொன்மயமான விமானம், தாமரையின் இதழ்களிலிருந்து வெளிவரும் நிலையிலுள்ள நான்கு பொற்கலசங்கள் கட்டப்பட்டுள்ளன. விமானத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் மகர வடிவில், உள்ள பலகணியில தெற்கே பரவாசுதேவர், மேற்கில் அச்சுதர், வடக்கில் அனந்தர், கிழக்கில் வேணுகோபால கிருஷ்ணர் ஆகிய திருமாலின் திருவுருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

14. மதுரகவியாழ்வார் தவிர, மற்ற 11 ஆழ்வார்களால் 247 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

1. **பொய்கையாழ்வார்**

ஒன்றும் மறந்தறியேன் ஓதநீர் வண்ணனை நான்
இன்று மறப்பனோ? ஏழைகள்! - அன்று
கருவரங்கத்துள் கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்கமேயான் திசை.

முதல் திருவந்தாதி 1-6

2. **பூதத்தாழ்வார்**

திறம்பிற்று இனியறிந்தேன் தென்னரங்கத்தெந்தை
திறம்பா வழி சென்றார்க் கல்லால் - திறம்பாச்
செடிநரகை நீக்கித் தாம் செல்வதன் முன் வானோர்
கடிநகர வாசற் கதவு.

இரண்டாம் திருவந்தாதி 88

3. **பேயாழ்வார்**

விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை - மண்ணகத்த
தென் குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி
தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு

மூன்றாம் திருவந்தாதி 62

4. **திருமழிசையாழ்வார்**

ஆட்பார்த்துழி தருவாய் கண்டுகொளென்றும் நின்
தாட்பார்த்துழி தருவேன் தன்மையை - கேட்பார்க்கு
அரும்பொருளாய் நின்ற அரங்கனே - உன்னை
விரும்புவதே விள்ளேன் மனம்.

நான்முகன் திருவந்தாதி - 60

5. **நம்மாழ்வார்**

தண்ணந்துழாய் வளைகொள்வது யாமிழப்போம் நடுவே
வண்ணந்துழாவி ஓர் வாடையுலாவும் வள்வாயலகால்
புள்நந்துழாமே பொருநீர்த்திருவரங்கா அருளாய்
எண்ணந்துழாவுமிடத்து உளவோ பண்டும் இன்னன்னவே?

திருவிருத்தம் 28

## 6. குலசேகராழ்வார்

தேவரையும் அசுரரையும் திசைகளையும் படைத்தவனே!
யாவரும் வந்து அடிவணங்க அரங்கநகர்த் துயின்றவனே!
காவிரிநல் நதிபாயும் கணபுரத்து என் கருமணியே!
ஏவரிவெஞ்சிலைவலவா! இராகவனே! தாலேலோ.

பெருமாள் திருமொழி 8 -10

## 7. பெரியாழ்வார்

மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல் வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தானூர்
தோதவத்தித்தூய் மறையோர் துறைபடியத் துளும்பி எங்கும்
போதில் வைத்ததேன் சொரியும் புனலரங்க மென்பதுவே.

பெரியாழ்வார் திருமொழி 4 -8-1

## 8. ஸ்ரீஆண்டாள்

செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும் சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர் இனியே?

நாச்சியார் திருமொழி 11-10

## 9. தொண்டரடிப்பொடி ஆழ்வார்

கங்கையிற் புனிதமாய காவிரி நடுவு பாட்டு
பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள்
எங்கள் மால் இறைவன் ஈசன் கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன்? ஏழையேன்ஏழையேனே.

திருமாலை 23

## 10. திருப்பாணாழ்வார்

ஆலமாமரத்தினிலை மேல் ஒரு பாலகனாய்
ஞாலமேழும் உண்டான் அரங்கத் தரவினணையான்
கோல மாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில்
நீலமேனி ஐயோ! நிறைகொண்டது என் நெஞ்சினையே.

அமலனாதிபிரான் 9

## 11. திருமங்கையாழ்வார்

பொய்வண்ணம் மனத்தகற்றிப் புலனைந்தும் செலவைத்து
மெய்வண்ணம் நினைந்தவர்க்கு மெய்ந்நின்ற வித்தகனை
மை வண்ணம் கருமுகில் போல் திகழ்வண்ணமரதகத்தின்
அவ்வண்ண வண்ணனை யான்கண்டது தென்னரங்கத்தே

பெரிய திருமொழி 5-6-9

## 2. திருச்சிறுப்புலியூர் (சிறு புலியூர்)

கருமா முகிலுருவா, கனலுருவா, புனலுருவா,
பெருமாள் வரையுருவா, பிறவுருவா, நினதுருவா,
திருமாமகள் மருவும் சிறுபுலியூர்ச் சலசயனத்து
அருமா கடலமுதே உனதடியே சரணாமே.

பெரிய திருமொழி 7-9-9

இத்தலம் மாயூரம் அருகே கொல்லுமாங்குடியிலிருந்து 3 கி.மீ கிழக்கே உள்ளது.

வ்யாக்ரபாதர் புலிக்கால்களையும், கைகளையும், கண்களையும் சிவபெருமாளைத் தவம் செய்து பெற்று, சிவன் ஆக்ஞைப்படி இவ்விடத்தில் பெருமாளைப் பூஜித்து வைகுண்டம் அடைந்ததால், இத்தலத்திற்கு "சிறுபுலியூர்" என்று பெயர் ஏற்பட்டது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | சலசயனப் பெருமாள் - புஜங்க சயனம் - தெற்கே திருமுக மண்டலம். |
| **உத்சவர்** | : | அருள் மா கடல், க்ருபா ஸமுத்ரப் பெருமாள் |
| **தாயார்** | : | திருமாமகள் நாச்சியார். |
| **உத்சவர்** | : | தயாநாயகி |
| **தீர்த்தம்** | : | மானஸ புஷ்கரிணி |
| **விமானம்** | : | நந்த வர்த்தன விமானம |
| **ப்ரத்யக்ஷம்** | : | வ்யாஸ முனி, வ்யாக்ர பாதர் |

**சிறப்புக்கள்:**

1. கருடனுக்கு அபயமளித்த இடம்.
2. திருமங்கையாழ்வாரால் மட்டும் 10 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது

## 3. திருப்பேர்நகர் - கோவிலடி

*கொண்டல் வண்ணா! இங்கே போதராயே கோயிற் பிள்ளாய்!*
*இங்கே போதராயே*
*தென்திரை சூழ்திருப்பேர்க் கிடந்த திருநாரணா! இங்கே போதராயே*
*உண்டுவந்தேன் அம்மமென்று சொல்லிஓடி அகம்புக ஆய்ச்சிதானும்*
*கண்டெதிரே சென்றெடுத்துக் கொள்ள கண்ணபிரான் கற்ற*
*கல்விதானே!*

**பெரியாழ்வார் திருமொழி 2-9-4**

இத்தலம் திருச்சியிலிருந்து 24 கி.மீ தொலைவிலும், கொள்ளிடத்திற்கு அக்கரையில் 5 கி.மீ தொலைவிலும் உள்ளது கோவிலடி என்று சொன்னால்தான் எல்லோருக்கும் தெரியும். காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையில் பெரிதாக அமைந்திருக்கிறது இவ்வாலயம். இரண்டு ப்ராகாரங்கள். மேற்கு நோக்கிய மூன்று நிலை ராஜகோபுரம்.

**மூலவர்** : அப்பக்குடத்தான், அப்பால ரெங்கநாதன் புஜங்க சயனம் - மேற்கே திருமுக மண்டலம். அருகில் அமர்ந்திருக்கும் உபமன்யு முனிவருக்கு ஆசி கூறும் பெருமாளின் வலதுகரம் ஓர் அப்பக்குடத்தையும் அணைத்திருக்கிறது.

**தாயார்** : இந்திரா தேவி, கமலவல்லி

**தீர்த்தம்** : இந்த்ர தீர்த்தம்

**விமானம்** : இந்த்ர விமானம்

**ப்ரத்யக்ஷம்** : உபமன்யு, பராசரர்

**சிறப்புக்கள்:**

1. இந்த இடத்திலிருந்து தான் நம்மாழ்வார் மோக்ஷத்துக்குப் புறப்பட்டுச் சென்றதாக ஐதீகம். பெருமாளுக்கு தினந்தோறும் மாலையில் அரவணையாக "அப்பம்" அமுது செய்விக்கப்படுகிறது. உட்ப்ரகாரத்தில் விநாயகர், நம்மாழ்வார், ராமானுஜர், ஆழ்வார்கள், கருடன், லக்ஷ்மி நாராயணர், வேணுகோபாலன் ஆகியோர் தர்சனம் தருகிறார்கள.

2. அப்பாலுக்கு அப்பாலால் எங்கும் நிறைந்திருக்கும் பெருமாள் இந்தக் கோவிலடியில் அப்பத்துடன் பாலாய்ப் பக்தனுக்கு வழங்கி, அப்பாலா ரெங்கநாதனாக, அப்பக் குடத்தானாக அற்புதமாக காட்சியளிக்கிறார்.

3. பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் 33 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## 4. திரு அன்பில்

*நாகத்தணைக் குடந்தை வெஃகா திருவெவ்வுள்*
*நாகத்தணை யரங்கம் பேரன்பில் - நாகத்*
*தணைப் பாற்கடல் கிடக்கும் ஆதி நெடுமால்*
*அணைப்பார் கருத்தனாவான்.*

**- நான்முகன் திருவந்தாதி** - 36.

திருச்சி மாவட்டம் லால்குடி அருகே 15 கி.மீ தொலைவில் இத்தலம் உள்ளது.

பிரம்ம தேவனுக்கும், சிவபெருமானுக்கும் ஐந்து தலைகள் இருந்தன. ஒரு சமயம் பார்வதி நிஷ்டையில் இருந்த சமயம், அவ்வழியாகச் சென்ற பிரம்மனை தனது பர்த்தா என்று எண்ணி, அவரது பாதங்களைக் கழுவி பணிவிடை செய்தாள். பிரம்ம தேவனுக்கும் எதுவும் சொல்லத் தோன்றவில்லை தற்செயலாக அங்கு வந்த சிவபெருமான் இதைக் கண்டு சினந்து, பிரம்ம தேவனின் ஐந்து தலைகளில் ஒனறை கிள்ளி எறிந்து விட்டார். இதனால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டு, கிள்ளப்பட்ட தலை சிவனின் கையிலேயே ஒட்டிக் கொண்டது. சாப நிவர்ததிக்காக கையில் பிச்சைப் பாத்திரமான கபாலத்துடன் புறப்பட்டார். கடைசியில் உத்தமர் கோயிலுக்கு வந்து, அங்கு மஹாலக்ஷ்மி இட்ட பிச்சையில் கபாலம் நிறையப்பெறறது. சிவனின் கையில் ஒட்டியிருந்த ஐந்தாவது தலையும் தோஷமும் காணாமல் போயிற்று. அதனால் சந்தோஷமாக, உற்சாகமாக விலங்கு உடைப்பட்ட நிறைவுடன் சிவபெருமான சென்று வழிபட்ட முதல் ஊர் அன்பில். அன்புடன் சென்ற ஊர் அனபில் பிரம்மபுரி என்று சொல்வதும் உண்டு.

மண்டுக மஹரிஷி இவ்விடத்தில் தவமிருந்து, மஹாவிஷ்ணு ப்ரத்யக்ஷமாகி, துர்வாச முனிவரின் சாபத்தை நீக்கியதால், இவ்விடத்திற்கு மண்டூகபுரி என்ற பெயரும் உண்டு.

**மூலவர்** : வடிவழகிய நம்பி - புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்சவர்** : சுந்தரராஜன்

**தாயார்** : அழகியவல்லி நாச்சியார்

**விமானம்** : தாரக விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பிரம்மா, வால்மீகி

**சிறப்புக்கள்:**

1. திருமழிசை யாழ்வார் மட்டுமே மங்களாசாசனம் செய்துள்ளார். ஒரே ஒரு பாடலில் மங்களாசாசனம்.

2. ஒவ்வொரு முறை போருக்குச் செல்லும் போதும், சுந்தர சோழன் இவ்வாலயத்தில்தான் தன்னுடைய உடைவாளை வைத்து பெருமாளை வணங்கிவிட்டுச் சென்று, போரில் வெற்றி வாகை சூடினான் என்றுகூறுவர்.

3. வால்மீகியின் அவதாரஸ்தலம் என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது.

திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி போன்ற நூல்களை எழுதிய திருமழிசை யாழ்வார் ஒவ்வோர் ஊராகச் சென்று பெருமாளைச் சேவித்து பாடி வந்தார். ஒருமுறை அவரை சிலர் அளவுக்கு மீறி இழித்துப் பேசினார்கள். பாடம் புகட்ட விரும்பிய ஆழ்வார், பெருமாளை நோக்கி ஒரு பாடல் பாடினார்.

*"அக்கரங்கள் அக்கரங்கள் என்றுமாவது தன்கொலோ?*
*இக்குறும்மை நீக்கி என்னை ஈசனாக்க வல்லயேல்*
*சக்கரம் கொள்கையானே சடங்கர் வாயடங்கிட*
*உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே"*

இப்பாடலை பாடி முடித்ததும், பெருமாள் பாற்கடலில் பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டிருக்கும் காட்சியை அனைவரும் காணுமாறு திருமழிசையாரின் உடல்மீது காட்டினார். அந்த அற்புதத்தை அனைவரும் கண்டனர். உள்ளத்தில் இருக்கும் பரந்தாமனையே வெளியில் வரவழைத்துக் காட்டியவர் திருமழிசை யாழ்வார்.

## 5. திருக்கரம்பனூர் என்ற உத்தமர் கோயில்

*பேரானைக் குறுங்குடியெம் பெருமானை திருத்தண்கா*
*லூரானைக் கரம்பனூர் உத்தமனை முத்திலங்கு*
*காரார்திண் கடலேழும் மலையேழிவ் வுலகேழுண்டும்*
*ஆராதென்றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே.*

- **பெரிய திருமொழி 5-6-2**

இத்தலம் திருச்சி அருகில் திருச்சி - சென்னை ரயில்வே கார்டு லைனில் உள்ள ஒரு சிறிய ஸ்டேஷன் அருகில் அமைந்துள்ளது. திருச்சி, ஸ்ரீரங்கத்திலிருந்தும் பஸ் வசதிகள் உண்டு.

பிரம்மனின் பக்தியை சோதிக்க விரும்பிய திருமால், இத்தலத்தில் ஓர் கதம்ப மரமாக உருக்கொண்டு நிற்க, இதை உணர்ந்த பிரம்மனும் இவ்விடத்தே வந்து தம் கமண்டல நீரால் கதம்ப மரத்திற்கு திருமஞ்சனம் செய்து திருமாலைத் துதிக்க, பிரம்மனுக்கு காட்சியளித்த திருமால் இதுபோலவே எந்நாளும் என்னைத் துதித்து இவ்விடத்தே வழிபடவும் என்று கூறியதால் பிரம்மனும் இங்கு கோவில் கொண்டார்.

பிரம்மனின் தலை தன் கையில் ஒட்டிக் கொள்ள, அத்துடன் தீர்த்த யாத்திரை செய்த சிவன், இங்கு வந்ததும், சிவனுடைய பிக்ஷா பாத்திரத்தில் பிச்சையிடுமாறு மஹாலக்ஷ்மியை பெருமாள் கேட்டுக் கொண்டதால், மஹாலக்ஷ்மி பிச்சையிட்டதும், கபாலம் நிரம்பி பாபவிமோசனம் பெற்றார். பிரம்மஹத்தி தோஷமும் நீங்கியது.

ஜனகர் இங்குள்ள கதம்ப தீர்த்தக்கரையில் ஒரு யாகம் செய்தார். ஆனால் யாகப்பொருட்களை ஒரு நாய் புசித்து மாசுபடுத்தி விட்டதால், அத்தோஷம் நீங்க அங்குள்ள கதம்ப மரத்தை பூஜிக்குமாறு முனிவர்கள் கூற, ஜனகரும் மீண்டும் புதிதாக யாகத்தைத் துவக்கி, கதம்ப மரத்தை பக்தி சிரத்தையோடு வழிபட, கதம்பமரம் இரண்டாகப் பிளந்து அதிலிருந்து ஸ்ரீமந்நாராயணன் புருஷோத்தமனாக வெளிப்பட்டார். ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டபடி அவர் இருக்க உந்தித் தாமரை மலரில் பிரும்மா வீற்றிருக்க பககததில் பிக்ஷாடண உருவத்தில் சிவபெருமானும் இருக்க , பகவான காட்சியளித்தார். ஜனகர் : பிரம்மா, விஷ்ணு, சிவன்

ஆகிய மூவருக்கும் அந்த கதம்ப வனத்திலேயே ஓர் ஆலயம் கட்டினார். விக்ரகங்களை பிரதிஷ்டை செய்தார். அந்த கதம்பவனம் தான் இன்றைய திருக்கரம்பனூர் என்னும உத்தமர் கோவிலாகும்.

சன்னதியின் இடதுபுறம் லக்ஷ்மி சந்நிதியும், தெற்குச் சுற்றில் பூரணவல்லித் தாயார் சந்நிதிகளும் உள்ளன. திருமால் கோயிலுக்கு பின்புறம் சிவன் கோயில் உள்ளது. இறைவன் பிக்ஷாடணர் - முன் மண்டபத்தில் அம்மன் சந்நிதி வடிவுடை நாயகி என்ற பெயருடன், தன் நான்கு கரங்களில் இரண்டில் தாமரை மலரும், மற்றதில் அபய, வரத முத்திரை தாங்கியும நின்ற கோலத்தில் காட்சி தருகிறாள். மேற்கு சுற்றில் பிரம்மாவிற்கும், சரஸ்வதிக்கும், தனித்தனி சந்நிதிகள் உள்ளன.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | புருஷோத்தமன் - புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | பூரணவல்லி |
| **தீர்த்தம்** | : | கதம்ப தீர்த்தம் |
| **தலமரம்** | : | கதமப மரம் |
| **விமானம்** | : | உத்யோக விமானம் |

**சிறப்புக்கள்**

1. பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரும் காட்சிதரும் திவ்யதேசம்
2. பக்தன் ஒருவனுக்கு மும்மூர்த்திகளும் காட்சி கொடுத்த ஸ்தலம்
3. திருமங்கை யாழ்வார் "உத்தமன்" என்று பெருமாளைப் பாடியதால் "உத்தமர் கோயில்" என்ற பெயர் உண்டாயிற்று.
4. பிக்ஷாடண மூர்த்தியாக சிவபெருமான் எழுந்தருளியுள்ளதால், "பிக்ஷாண்டார் கோயில்" என்ற மறுபெயரும் உண்டு.
5. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.
6. மும்மூர்த்திகளும் ஒரே திருத்தலத்தில் சேவை சாதிக்கும் திருத்தலம்.

## 6. திருப்புள்ளம் பூதங்குடி

*மேவாவரக்கர் தென்னிலங்கைவேந்தன் வீயச்சரம் துரந்து*
*மாவாய் பிளந்து மல்லடர்த்து மருதம் சாய்த்த மாலதிடம்*
*காவார் தெங்கின் பழம் வீழக் கயல்கள் பாயக்குருகிரியும்*
*பூவார் கழனியெழிலாரும் புள்ளம் பூதங்குடிதானே.*

- **பெரிய திருமொழி** 5-1-3

இத்தலம் குடந்தையிலிருந்து சுவாமி மலைக்குச் செல்லும் வழியில் மேற்கே 3 கி.மீ தொலைவில் உள்ளது. இங்கு பெருமாள் ஸ்ரீரங்கம போல்சயனக கோலத்தில் காட்சியளிக்கிறார் புள் என்றால் பறவை. ஸ்ரீராமர் ஜடாயுவாகிய பறவைக்கு மோக்ஷம் தருவதற்காக அதன் பூதஉடலுக்குச் செயய வேண்டிய இறுதிக் கடனைச் செய்ததால், "புள்ளம் பூதங்குடி" என்று பெயர் ஏற்பட்டது. ஜடாயுவுக்கு தீக்கடன், நீர்க்கடன் செய்ய ராமன் நினைக்கும் போது அதற்கு துணையாக அருகில் சீதாதேவி இல்லையே என்று மானசீகமாக ராமன் நினைக்க, சீதையைப் பிரிந்த ராமனுக்கு உதவ பூமி தேவியே பொற்றாமரையில் வந்து நின்று ஜடாயுவிற்கு வேண்டிய இறுதிக் காரியங்களைச் செய்து முடித்தார். தன் தந்தைக்குச் செய்யாத பித்ரு காரியககுறை ராமனை விட்டு நீங்கியது.

இறுதிக் காரியம் முடிந்ததும், களைப்படைந்த ராமர் அங்கேயே பள்ளி கொண்டார். திருமங்கையாழ்வார் இங்கு வந்தவர், யாரோ, இரண்டு கை தெய்வம் என கவனியாது செல்ல, திடீரென ஒருபெரிய ஜோதி வெள்ளம் தெரிய, திரும்பிப் பார்த்த ஆழ்வாருக்கு நான்கு கரங்களுடன், சங்கு, சக்ர தாரியாக ஸ்ரீராமர் காட்சி கொடுப்பதைக் கண்டார். மெய்சிலிர்த்துப் போன ஆழ்வார், "ராமர் இருப்பதை அறியாமல் சென்று விட்டேனே" என்று சொல்லும் முகமாக, "அறிவதறியான் அனைத்துலகும் உடையான்" என்று 10 பாசுரங்களைப் பாடி மங்களாசாசனம் செய்தார்.

**மூலவர்** : வலவில்ராமன் புஜங்க சயனம் கிழககே திருமுக மண்டலம

**தாயார்** : பொற்றாமரையாள்

**தீர்த்தம்** : ஜடாயு தீர்த்தம்

**விமானம்** : சோபன விமானம்

**ப்ரத்யக்ஷம்** : க்ருத்ரராஜன்

**சிறப்புக்கள்:**

1. சங்கு, சக்கரத்துடன் நான்கு கரங்களுடன் ராமன் சயனக் கோலத்தில் காட்சியளிக்கும் ஒரு திருப்பதி இத்தலம் தான்.

2. தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்த மண்டங்குடி இவ்வூருக்கு அருகில் உள்ளது.

3. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 7. திரு ஆதனூர்

*என்னை மனங்கவர்ந்த ஈசனை வானவர்தம்*
*முன்னவனை மூழிக்களத்து விளக்கினை*
*அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை*

- **பெரிய திருமடல்** 129, 130

இத்தலம் சுவாமி மலையிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது. மகாவிஷ்ணுவின் பாதங்களில் சரணடைய காமதேனு தவம் இருந்த ஊர். "ஆ" என்றால் பசு. "ஆ" வாகிய பசு தவமிருந்ததால் ஆதன்ஊர் என்பது ஆதனூர் என்றாயிற்று.

ஸ்ரீரெங்கநாதர் ஆலயத்திற்கு மதில் கட்டும் மாபெரும் பணியில் ஈடுபட்டிருந்த திருமங்கையாழ்வாருக்கு ஓர் நாள் பணி செய்த தொழிலாளர்களுக்கு கூலி கொடுக்க பணம் இல்லாத போது, அவர் பெருமாளிடம் வேண்ட, பெருமானோ ஒரு வணிகரைப் போன்று தலைப்பாகை அணிந்து, கையில் ஒரு எழுத்தாணி, மரக்காய் சகிதமாக வந்து, ஆழ்வாரிடம் மரக்காலில் பெருமாளை நினைத்து மண்ணை அள்ளிப் போட்டால் உழைத்தோர்க்கு பொன்னாகவும், ஏமாற்றியவர்களுக்கு மணலும்தான் கிடைக்கும் என்றார். அதன்படி பலருக்கு மண்தான் கிடைத்தது. ஆத்திரமடைந்த தொழிலாளர்கள் வணிகரை அடிக்கவர, வணிகர் மெல்ல நகர, ஆழ்வார் குதிரையில்

பின் தொடர, இவருக்கு காட்சியளிக்க நினைத்த எம்பெருமான் ஓடிவந்து திருமங்கைக்கு காடசி கொடுத்து மரக்கால், ஓலை, எழுத்தாணியோடு ஆதனூரில் புகுந்து கொண்டதாக வரலாறு.

மூன்று நிலை ராஜகோபுரத்துடன் அழகாக அமைந்திருக்கிறது கோஈயில். கர்ப்ப கிரகத்தினுள் மூலவர்ஆண்டளக்கும் ஐயன், தலையின் கீழே மரக்காலை வைத்துச் சயனித்திருக்கிறார். அவரது இடது கையில் ஓலையும், எழுத்தாணியும் உள்ளது. பெருமாளின் பாதத்திற்கு கீழே அக்னி பகவான் ஆண்டளக்கும் ஐயனை வழிபட்டு தனக்கு ஏற்பட்ட சாபத்தைப் போக்கிக்கொண்டதாக புராணம் சொல்கிறது. பெருமாளின் கீழே காமதேனுவும், திருமங்கையாழ்வாரும் இருக்கிறார்கள். மூலவரின் முன்னால், உற்சவர் அழகிய மணவாளன் தரிசனம் தருகிறார்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | ஆண்டளக்கும் ஐயன் - புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மணடலம். தலையின் கீழ் மரக்காலும், இடது கையில் ஓலை, எழுத்தாணியும் உள்ளன. |
| **தாயார்** | : | ஸ்ரீரங்கநாயகி |
| **உத்சவர்** | : | அழகிய மணவாளன் |
| **தீர்த்தம்** | : | ஸுர்ய புஷ்கரிணி |
| **விமானம்** | : | ப்ரணவ விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | காமதேனு, திருமங்கையாழ்வார். |

**சிறப்புக்கள்:**

1. காமதேனு இங்கு தவம் இருந்ததால், இத்தலத்தில் காமதேனுவுக்கும், அவள் புத்ரி நந்தினிக்கும் சிற்பங்கள் உண்டு.
2. ஆதனூரை ஆதிரங்கேஸ்வரம் என்று பிரம்மாண்ட புராணம் கூறுவதால், ஸ்ரீரங்கம் கோயிலை விட இது தொன்மையானது என்று குறிப்பிடப்படுகிறது.
3. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 8. திருக்கவித்தலம் (கபிஸ்தலம்)

*கூற்றமும் சாரா கொடுவினையும் சாரா - தீ*
*மாற்றமும் சாரா வகையறிந்தேன் - ஆற்றங்*
*கரைக்கிடக்கும் கண்ணன் கடல்கிடக்கும் மாயன்*
*உரைக்கிடக்கும் உள்ளத்து எனக்கு.*

**- நான்முகன் திருந்தாதி - 50**

*ஆதிமூலமே என்றழைத்த ஆனைக்கருளி முதலையை மாய்த்து*
*மோட்சம் நல்கிய முதுபெருந்தமைாம் திருக்கவித்தலத்தே*
*ஆதிசேடன் மேல் ஆற்றங்கரை கிடக்கும் கண்ணனை,*
*போற்றிப் புகழ்ந்து புது வாழ்வு பெற்று வாழ்வோம் வாரீர்!*

**- டாக்டர் வைணவச் சுடராழி ஆ.எதிராஜன்.**

இத்தலம் தஞ்சையிலிருந்து திருவையாறு வழியாகக் கும்பகோணம் செல்லும் வழியில் உள்ளது.

மன்னன் இந்திராஜும்னன் மகாவிஷ்ணு பக்தன். தம் தினத்தின் பெரும் பகுதியைப் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் அந்தப் பரந்தாமனை வழிபடுவதிலேயே கழித்து வந்தான். ஒருசமயம் அரசன் ஆழ்ந்த நிஷ்டையில் இருந்த போது துர்வாச முனிவர் அவனைக் காணவந்தார். மன்னன் நிஷ்டைகலையவே இல்லை. முனிவருக்கு கோபம் வந்து விட்டது. சினங்கொண்ட முனிவர், அரசன் அருகில் சென்று", இந்திராஜும்னா, அரசன் என்ற ஆணவத்தில் இருக்கிறாய். ஆணவம் என்ற மதம் உன்னைப் பிடித்திருக்கிறது. ஆதலால் விலங்குகளிலே மதம் பிடிக்கும் விலங்காக - யானையாக - நீ மாறக்கடவது என்று சபித்தார்.

கண்விழித்து, நிலைமையை உணர்ந்த மன்னன், தன் தவறு அறிந்து, மன்னிப்பும் கேட்டு சாப விமோசனம் வேண்டினான். முனிவர், "நீ யானையாக மாறினாலும் திருமால் மீது பக்தி கொண்ட கஜேந்திரனாகத் திகழ்வாய். ஒரு முதலை உன் காலைக் கவ்வ, நீ மஹாவிஷ்ணுவை அழைக்க, உனக்கு மோக்ஷமும், சாப விமோசனமும் உண்டாகும்" என்றார்.

இந்த கபிஸ்தலத்தில் உள்ள கோவிலின் முன்பு அமைந்துள்ள கபில தீர்த்தம் என்னும் குளத்தில் ஒருநாள் கஜேந்திரன் நீர் அருந்த இறங்கிய போது. ஒரு முதலை அதன் காலைக் கவ்வ, யானை பிளிர, கருட வாகனத்தில் வந்த மஹாவிஷ்ணு தன் சக்ராயுதத்தால் முதலையைக் கொன்று யானைக்கு மோக்ஷம் அளித்ததாக வரலாறு.

'கபி' என்றால் குரங்கு. கபி பெருமாளைத் தரிசித்த இடமாதலால் கபிஸ்தலம் என்ற பெயர் ஏற்பட்டது.

**மூலவர்** : கஜேந்திர வரதராஜப் பெருமாள் புஜங்க சயனம் ஆதிசேஷன் மேல் துயில் கொண்டு கிழக்கு நோக்கி தரிசனம்.

**தாயார்** : ரமாமணிவல்லி - பொற்றாமரையாள்

**விமானம்** : ககநாகருத விமானம்

**தீர்த்தம்** : கஜேந்திர புஷ்கரிணி

**ப்ரத்யக்ஷம்** : கஜேந்திரன், சிறிய திருவடி

**சிறப்புக்கள்:**

1. 108 திவ்ய தேசங்களில் இரண்டு விலங்கினங்களுக்கு - குரங்கு, யானை - காட்சியளித்தது இத்தலத்தில் தான்.
2. திருமழிசையாழ்வார் இவரை "ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்" என்று மங்களாசாசனம் செய்துள்ளார்
3. திருமழிசையாழ்வாரால் மட்டும் ஒரே ஒரு பாசுரத்தால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 9. திருவெள்ளியங்குடி

*குடி குடியாகக் கூடிநின்று அமரர் குணங்களே பிதற்றி நின்றேத்த*
*அடியவர்க்கு அருளி அரவணைத்துயின்ற ஆழியான் அமர்ந்துறை*
*கோயில்,*
*கடியுடைக் கமலம் அடியிடை மரைக்கரும்பொடு*
*பெருஞ்செந்நெல் அசைய,*
*வடிவுடை அன்னம் பெடையொடும் சேரும் வயல் வெள்ளியங்குடி*
*யதுவே.*

**- பெரிய திருமொழி 4-10-9**

இத்தலம் கும்பகோணம் - அணைக்கரை மார்க்கத்தில் சேங்கானூரிலிருந்து 1 கி.மீ தொலைவில் உள்ளது.

ஒரு சமயம் அசுரர்களுக்கு சிற்பியாகத் திகழ்ந்த மயன் கடுந்தவம் செய்தபோது, இறைவன் அவனுக்கு சங்கு, சக்கரதாரியாக, மஹாவிஷ்ணு கோலத்தில் காட்சி அளித்தார். ராமாவதார திருக்கோலத்தை தான் தரிசிக்க விரும்புவதாக மயன் கூறியதால், தம் கரத்திலிருந்த சங்கு, சக்கரங்களைக் கருடனுக்கு கொடுத்து விட்டு, வில், அம்புகளுடன் அலங்காரக் கோலத்துடன் கோவிலில் ராமனாக காட்சியளித்தார். எனவே தான் இப்பெருமானுக்கு கோலவில்லி ராமன் என்ற பெயர் உண்டாயிற்று.

இழந்த நேத்திரத்தை சுக்கிரன் இங்கு தவமிருந்து பெற்றதால் இவர் பெயராலேயே "வெள்ளியங்குடி" என அழைக்கப்படுகிறது. சுக்ரனுக்கு பெருமான் இவ்விடத்தில் அருளியதைத்தான் "வெள்ளியார் வணங்க விரைந்தருள் செய்வான்" என்றார் திருமங்கையாழ்வார்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | கோலவில்லி ராமன் - புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **உத்சவர்** | : | மரகதவல்லி |
| **தீர்த்தம்** | : | சுக்ர தீர்த்தம், ப்ரம்ம தீர்ததம், இந்த்ர தீர்த்தம், பரசுராம தீர்த்தம். |
| **ஸ்தல வ்ருக்ஷம்** | : | கதலீ (வாழை) |

விமானம் : புஷ்கலா வர்த்தக விமானம்.

ப்ரத்யக்ஷம் : சுக்ரன், பிரும்மா இந்திரன், பராசுரர், மயன்

**சிறப்புக்கள்:**

1. 108 திவ்ய தேசங்களில் இங்குதான் கருடாழ்வாருக்கு நானகு கரங்களுடன், கைகளில சங்கு, சக்கரங்களும் கொண்டதாக காட்சி உள்ளது..
2. நவக்ரகங்களில் சுக்ரனோடு தொடர்பு கொண்ட ஸ்தலம்.
3. திருமங்கையாழ்வார் மட்டும் மங்களாசாசனம் செய்துள்ளார்.

## 10. திருத்தெற்றியம்பலம் (திருநாங்கூர்)

*ஏழுலகும் தாழ்வரையும் எங்கும் மூடி*
*எண்திசையும் மண்டலமும் மண்டி அண்டம்*
*மோழையெழுந்து ஆழிமிகும் ஊழிவெள்ளம்*
*முன்னகட்டி லொடுக்கிய எம்மூர்த்தி கண்டீர்*
*ஊழிதொறும் ஊழிதொறும் உயர்ந்த செல்வத்து*
*ஓங்கிய நான் மறையனைத்தும் தாங்குநாவர்*
*சேழுயர்ந்த மணிமாடம் திகழும் நாங்கூர்த்*
*திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே.*

- **பெரிய திருமொழி 4.4.9**

இத்தலம் சீர்காழியிலிருந்து 8 கி.மீ தொலைவிலுள்ள திருநாங்கூருக்குள்ளேயே உள்ளது திருத்தெற்றியம்பலம் என்றால் பலருக்கும் தெரியாது. பள்ளிகொண்ட பெருமாள் சன்னதி என்றால் பிரசித்தம்.

மூலவர் : செங்கண்மால், ரங்கநாதன், லக்ஷ்மிரங்கர் - நான்கு புஜங்களுடன், புஜங்க சயனத் திருக்கோலம் கிழக்கே திருமுக மண்டலம்

தாயார் : செங்கமலவல்லி

தீர்த்தம் : சூர்ய புஷ்கரிணி

**விமானம்** : வேத விமானம்

**ப்ரத்யக்ஷம்** : நாச்சியார், அனந்தாழ்வார்

**சிறப்புக்கள்:**

1. நான்கு புஜங்களுடன் ஆதிசேஷன் மீது சயனத் திருக்கோலத்தில் இருக்கும் இப்பெருமாள் பார்ப்பதற்கு மிகவும் பேரழகு வாய்ந்தவர்;

2. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 11. திருக்குடந்தை (கும்பகோணம்)

*ஆரா அமுதே! அடியேன் உடலம், நின்பாலன்பாயே*
*நீராயலைந்து கரைய, உருக்குகின்ற நெடுமாலே!*
*சீரார் செந்நெல் கவரிவீசும், செழுநீர்த் திருக்குடந்தை*
*ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்! கண்டேன் எம்மானே!*

- **திருவாய் மொழி 5-8-1**

கோயில் நகரமான கும்பகோணத்தில் இந்த திருத்தலம் உள்ளது.

மும்மூர்த்திகளில் சாந்தம் நிறைந்தவர் யார் என்று அறியச்சென்ற ப்ருகு முனிவர், திருமாலின் நெஞ்சில் உதைக்க. இதனால் அவமானம் அடைந்த லக்ஷ்மி தன் மணாளனை விட்டுப்பிரிந்து, இப்பூவுலகிற்கு வந்து மறைந்திருக்கலானார். தனிமையில் வாடிய பெருமாள், இறுதியில் அவரும் லக்ஷ்மியைத் தேடி பூமிக்குக் கிளம்பினார். திருமலையில் பத்மாவதி என்னும் அலர்மேல்மங்கையைத் திருமணம் செய்துகொண்டார். இந்த பத்மாவதி தேவியே ராமாவதாரத்தில் வேதவதி என்னும் பெயர் பூண்டிருந்தாள்.

நாரதர் வாயிலாக பத்மாவதியை மணந்த செய்தியை அறிந்து, மிக்க சீற்றத்துடன் திருமலைக்குவர, லக்ஷ்மியின் கோபத்திற்கு பயந்து எம்பெருமான் திருமலையிலிருந்து ஓடிவந்து கும்பகோணத்தில் ஒரு

பாதாள குகையில் தம்மை மறைத்துக் கொண்டார். இன்னும் குடந்தை சாரங்கபாணி ஆலயத்தில் பாதாள ஸ்ரீநிவாசன் என்ற பெயரில் பூமிக்கடியில் ஒரு சந்நிதி உள்ளது.

எம்பெருமானைத் தொடர்ந்து இவ்விடத்திற்கு வந்த திருமகள், எங்கு தேடியும் அவரைக்காண முடியாததால், தவமிருந்து காண வேண்டும் என்று நினைத்து பொற்றாமரைக் குளத்தில் ஒரு பொன் தாமரையில் குழந்தையாக அவதரித்தாள். அங்கு வந்த ப்ருகு முனிவர் அக்குழந்தையை வாரி எடுத்து கோமளவல்லி என்று திருநாமம் சூட்டி வளர்த்து வந்தார்.

ராமாவதாரத்தில் ராமனால் கொடுக்கப்பட்ட தினந்தோறும் ஆராதிக்கப்பட்டு வந்த (ஆராதன விக்ரக) பெருமாளை விபீஷணன் ப்ரணாவாக்ருதி, வைதீக வாக்ருதி, என்ற இரண்டு விமானங்களில் ஒருங்கே அமைக்கப்பட்ட விமானத்தில் கொண்டு வரும்போது, காவேரிக் கரையில் கீழே வைத்ததால், அரங்கநாதனை அசைக்க முடியவில்லை. விபீஷணன் செய்வதறியாது மலைத்து நின்றான். பெருமாள் விபீஷணனை நோக்கி, "ப்ரணா வாக்ருதி" என்னும் விமானத்துடன் யாம் இங்கேயே பள்ளிகொள்ள விரும்புகிறேன். இன்னொரு பிரிவான வைதிக விமானத்துடன் நான் கும்பகோணம் செல்லவிருக்கிறேன். அங்கே ஹேம மஹாரிஷிக்கு அருள்புரிந்து, மஹாலக்ஷ்மியை மணக்கப் போகிறேன்" என்று கூறினார். அப்போதே பெருமாள், சார்ங்கம் என்னும் வில்லை ஏந்தி சார்ங்கபாணியாக வைதிக விமானத்துடன் கும்பகோணம் வந்து சேர்ந்து, கோமளவல்லியை மணம் செய்து கொண்டு ப்ருகு முனிவருக்கும் பேரருள் புரிந்தார்.

**மூலவர்** : சாரங்கபாணி - ஆராவமுதன் - உத்யோக சயனம் - கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம்

**தாயார்** : கோமளவல்லி

**தீர்த்தம்** : ஹேம புஷ்கரிணி

**விமானம்** : வைதிக விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ஹேம மஹரிஷி

**சிறப்புக்கள்:**

1. திருமழிசையாழ்வாருக்கு நேரில் காட்சி தந்து, அவரது வேண்டுகோளுக்கு இணங்கி, சயனித்திருந்த மூலவர் சற்று எழுந்திருக்கும் நிலையில் எழுந்தருளியுள்ளார். இந்த நிலைக்குத் தான் "உத்தான சாயி" (சாய்ந்து எழ முயலும் திருக்கோலம்) என்று பெயர்.

2. உற்சவர் நான்கு திருக்கைகளுடன் சங்கு, சக்கரம், கதை, சார்ங்கம், உடைவாள் என்ற 5 திவ்ய ஆயுதங்களுடன் வலது திருக்கை அபயமளிக்கும் முத்திரையுடன் காட்சியளிக்கிறார்.

3. 108 திவ்ய தேசங்களில், இத்தலத்திற்கு மட்டுமே உபய ப்ரதான திவ்யதேசம் என்ற பெயரும் உண்டு. மூலவருக்குள்ள சகல மரியாதைகளும், சிறப்புக்களும் உற்சவருக்கும் உண்டு.

4. இத்தலத்திலுள்ள சித்திரைத்தேர் தென்னிந்தியாவிலுள்ள மிகப்பெரிய தேர்களுள் ஒன்றாகும்.

5. 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை மகாமகம் என்னும் நீராடல் விழா கொண்டாடப்படுகிறது. இந்தியாவிலுள்ள புண்ணிய நதிகளான கங்கை, காவேரி, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நர்மதை, கிருஷ்ணா, சிந்து முதலிய ஒன்பது நதிகளும் இங்கு வந்து, இந்த மகாமகக் குளத்தில் நீராடி தங்கள் பாவங்களைப் போக்கி புனிதம் அடைவதாக ஐதீகம்.

6. நாத முனிகள் இப்பெருமானை தரிசிக்க வந்தபோது, ஆழ்வார்களின் பாடல்கள் 4000 என அறிந்து, அவற்றை எப்படியும் தொகுத்து விட வேண்டும் என்று எண்ணி, அங்கேயே துயின்றுவிட, அவரது கனவில் வந்த எம்பெருமான் அவரை ஆழ்வார் திருநகரிக்கு போக பணித்ததாகவும், ஆழ்வாரும் அங்கு சென்று, நம்மாழ்வாரை தரிசித்து, நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தைத் தொகுத்தார்.

7. இப்பெருமாள் மீது பக்தி கொண்ட லக்ஷ்மி நரசிம்ம சுவாமி என்ற பக்தர் மிக உயர்ந்த ராஜ கோபுரத்தைக் கட்டினார்.

8. தாயார் கோமளவல்லி ஒருபோதும் வெளியில் உலாவராது இறைவன் திருப்பணியில் ஈடுபட்டிருப்பதால், படிதாண்டாப் பத்தினி என்ற பெயரும் தாயாருக்கு உண்டு.

9. பெருமாள் சந்நிதியே தேர்ச்சக்கரங்களுடன் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளது.

10. ச்ருஷ்டிக்கு வேண்டிய மூலப்பொருட்கள் அமைந்துள்ள (அமிர்த கும்பம்) குடம் இங்கு தங்கியமையால், "திருக்குடந்தை" என்ற பெயர் ஏற்பட்டது.

11. பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், ஆண்டாள் முதலியவர்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 12. திரு இந்தளூர் (மயிலாடுதுறை)

*முன்னைவண்ணம் பாலின் வண்ணம் முழுதும் நிலைநின்ற*
*பின்னைவண்ணம் கொண்டல் வண்ணம் வண்ணம் எண்ணுங்கால்*
*பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையும் திருமேனி*
*இன்ன வண்ணமென்று காட்டீர் இந்த ளூரீரே!.*

**- பெரிய திருமொழி 4 9 8.**

இத்தலம் மயிலாடுதுறை நகராட்சிக்குள் உள்ளது. காவேரிக்கு அக்கரை - நவக்ரகங்களுள் ஒருவரான சந்திரன் தனக்கு ஏற்பட்ட ஒரு தோஷத்தைப் போக்குவதற்காக இத்தலத்தில் எம்பெருமானைக் குறித்து, தவமியற்றி தோஷம் நீங்கப் பெற்றதாக ஸ்தல வரலாறு.

சந்திரனுக்கு "இந்து" என்ற பெயரும் உண்டு. தனக்கு தோஷம் நீங்கப்பட்ட இத்தலம் தனது பெயராலேயே வழங்கப்பட வேண்டும் என சந்திரன் வேண்டிக்கொண்டதால் "இந்தளூர்" என ஆயிற்று.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | பரிமள ரங்கநாதன், சுகந்தவனநாதன், மருவினிய மைந்தன் - 4 புஜங்களுடன் ஆதிசேஷன் மீது வீர சயனம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | பரிமள ரங்கநாயகி, சந்த்ர சாப விமோசனவல்லி. |
| **தீர்த்தம்** | : | சந்த்ர புஷ்கரிணி |
| **விமானம்** | : | வேத சக்ர விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | | சந்த்ரன் |

**சிறப்புக்கள்:**

1. நான்கு கரங்களுடன் கூடிய இப்பெருமாளின் தலைமாட்டில் காவேரித் தாயாரும், கால்மாட்டில் கங்கைத்தாயாரும், அமர்ந்துள்ளனர். ஐப்பசி மாதம் முழுவதும் இங்கே விழாக்கோலம் பூண்டிருக்கும், காவேரியும், சமுத்திரமும் சங்கமமாகும் இடத்தில் கடைமுகஸ்நானம், "முடவன் முழுக்கு" ஸ்நானம் மிகவும் விசேஷம்.
2. முத்துசுவாமி தீக்ஷிதரும் இப்பெருமாள் பெயரில் கீர்த்தனைகள் இயற்றியுள்ளார்.
3. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 13. திருச்சித்ர கூடம் (சிதம்பரம்)

*மாவாயினங்கம் மதியாது கீறி*
*மழைமாமுது குன்றெடுத்து ஆயர் தங்கள்*
*கோவாய் நிரை மேய்த்து உலகுண்ட மாயன்*
*குரைமாகழல் கூடும் குறிப்புடையீர்!*
*மூவாயிரம் நான் மறையாளர் நாளும்*
*முறையால் வணங்க, அணங்காய சோதி*
*தேவாதி தேவன் திகழ்கின்ற தில்லைத்*
*திருச்சித்ர கூடம் சென்றுசேர் மின்களே!.*

- பெரிய திருமொழி 3-2-8

இத்தலம் சிதம்பரம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 2 கி.மீ தொலைவில் தில்லை நடராஜர் கோயிலுக்குள் உள்ளது. சிறு அம்பலம் (சிறு கோவில்) என்பதே சிற்றம்பலமாக இருக்கையால், நடராஜர் கோயில் சிறிதாகவும், சித்ர கூடம் எனப்பட்ட பெருமாள் கோயில் பெரிய கோயிலாகவும் இருந்திருக்கின்றன. இக்கோயில் நடராஜர் கோயிலுக்குள் இருந்தாலும், தனிக்கோயிலுக்கு உண்டான கர்ப்பக்ருஹம் ராஜகோபுரம், கொடிமரம், மடைப்பள்ளி எல்லாம் உள்ளன. மாசி மகத்திற்கு கிள்ளை சமுத்திரத்தில் தீர்த்தவாரி, நடராஜப் பெருமாள் உள்ளிட்ட தில்லை மூவாயிரவர் இவரைத் துதிக்க இங்கு வந்ததாகவும், தன்னெதிரே நடனமாடிய நடராஜப் பெருமானின் தாண்டவத்தை பெருமாள் ரஸித்ததாகவும் ஐதீகம்.

**மூலவர்** : கோவிந்தராஜன் - போகசயனம் - கிழக்கே திருமுக மண்டலம்

**உத்சவர்** : தேவாதி தேவன் - சித்ர கூடத்துள்ளான் என்ற ஒரு உற்சவரும் உண்டு.

**தாயார்** : புண்டரீக வல்லி.

**தீர்த்தம்** : புண்டரீக தீர்த்தம்

**விமானம்** : ஸாத்விக விமானம்

**ப்ரத்யக்ஷம்** : தில்லை மூவாயிரவர்,சிவன, வ்யாக்ர பாதர்.

**சிறப்புக்கள்:**

1. பாணினி சிவன் ஆடும் ஆனந்த தாண்டவத்தைக் கண்டு பரவசமடைந்து வ்யாகரணம் செய்த இடம்.
2. பரத முனிவர் நாட்டிய சாஸ்திரத்தை ஏற்படுத்திய ஸ்தலம்
3. கோயில் புஷ்கரிணியில், வடக்கே உள்ள புஷ்கரிணியில் உள்ளது போல மீன்கள் தரையில் வந்து யாத்ரீகர்களிடமிருந்து பொரி, கடலை வாங்கிச் சாப்பிடுவது கண்கொள்ளாக் காட்சியாகும்.
4. தில்லை அம்மனும் நடராஜருடன் தாண்டவம் ஆடியபடியால், "தில்லைநகர்" என்ற பெயரும் உண்டு.
5. குலசேகர ஆழ்வாரும், திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்த ஸ்தலமாகும்.

## 14. திருவெள்ளறை

*மூன் இவ்வேழுலகு உணர்வின்றி இருள் மிக உம்பர்கள்தொழுதேத்த*
*அன்னமாகி அன்றரு மறை பயந்தவனே! எனக்கு அருள்புரியே*
*மன்னுகேதகை சூதகம் என்றிவை வனத்திடைச் சுரும்பினங்கள்*
*தென்னவென்று வண்டு இன்னிசை முரல் திருவெள்ளறை நின்றானே.*

- **பெரிய திருமொழி** - 5-3-8

வெள்ளறை என்றால் வெண்மை நிறமுடைய பாறை. இந்த ஆலயம் வெண்மை நிறமான பாறைகள் மிகுந்த மேடான பகுதியில் அமைந்திருப்பதால் ஊரின் பெயரே "திருவெள்ளறை" என்று ஆகிவிட்டது. வடமொழியில் "ஸ்வேதகிரி" என்று பெயர்.

திருச்சியிலிருந்து சுமார் 20 கி.மீ தொலைவில் உள்ளது. சிபிச் சக்கரவர்த்திக்கு ச்வேத வராஹனாக (வெள்ளைப் பன்றி பெருமாள்) காட்சி தந்ததால் பெருமாளுக்கு "ச்வேத புரிநாதன்" என்று பெயர்.

**மூலவர்** : புண்டரீகாக்ஷன் (தாமரைக் கண்ணன்) நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : செண்பகவல்லி - பங்கயச்செல்வி உத்சவத் தாயாருக்கும் பங்கயச்செல்வி என்று பெயர்.

**தீர்த்தம்** : மதிலுக்குள்ளேயே 7 தீர்த்தங்கள உள்ளன. திவ்ய கந்தம், வராக, குசஹஸ்தி, சந்திர புஷ்கரணி, பத்மம், புஷ்கலம், மணிகர்ணிகா.

**விமானம்** : விமலாக்ருதி விமானம்.

**ப்ரத்யக்ஷம்** : சிபி, பூதேவி, மார்க்கண்டேயர், ப்ருஹ்மா, ருத்ரன்

**சிறப்புக்கள்:**

1. வராஹ அவதாரத்தை நினைவுபடுத்தும் ஸ்தலம்.

2. உத்தராயண வாசல் தக்ஷிணாயன வாசல் என இரண்டு வாசல்கள். தை முதல் ஆனி வரை உத்தராயண வாசல் வழியாகவும், ஆனி முதல் மார்கழி வரை தக்ஷிணாயன வாசல் வழியாகவும் பெருமாளை ஸேவிக்க செல்ல வேண்டும்.

3. இங்குள்ள ஸ்வஸ்தி குளத்தில், ஒரு துறையில் குளிப்பவர்களை இன்னொரு துறையில் குளிப்பவர்கள் பார்க்க முடியாத வண்ணம் அமைக்கப்பட்டுள்ளது.

4. திருமங்கையாழ்வாரும், பெரியாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

5. சக்கரத்தாழ்வார், உடையவர், ஆண்டாள் இவர்களுக்கு தனித்தனி சந்நிதிகள் உள்ளன.

## 15. திருவழுந்தூர் (தேரழுந்தூர்)

*தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட் கண்*
*வந்த எந்தை பெருமானார் மருவநின்ற ஊர்போலும்*
*முந்திவானம் மழைபொழியும் மூவாவுருவின் மறையாளர்*
*அந்திமூன்றும் அனலோம்பும் அணியார்வீதி அழுந்தூரே.*

**பெரிய திருமொழி** 7-5-1

இத்தலம் மாயவரத்திலிருந்து கும்பகோணம் செல்லும் பாதையில் இருக்கிறது

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | தேவாதிராஜன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **உற்சவர்** | : | ஆமருவியப்பன் |
| **தாயார்** | : | செங்கமலவல்லி |
| **தீர்த்தம்** | : | தர்சன புஷ்கரிணி, காவேரி |
| **விமானம்** | : | கருட விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | தர்மதேவதை, உபரிசிரவசு, காவேரி, கருடன், அகஸ்தியர் |

**சிறப்புக்கள்:**

1. கோபுரத்தின் உட்புறம் கம்பரும், அவர் மனைவியும் சிலை வடிவில் நிற்கின்றனர்.

2. கம்பன் அவதார ஸ்தலம்

3. இப்பெருமானை நோக்கி தவம் இருந்த நிலையில் காவேரித் தாயாரும் இச்சந்நிதியில் இடம் பெற்றுள்ளார். இடது புறம் கருடாழ்வாரும், வலது புறம் ப்ரஹ்லாதனும் இருக்கிறார்கள்.

4. "திருவுக்கும் திருவாகிய செல்வா" என்று திருமங்கையாழ்வாரால் போற்றப்பட்டுள்ளார். திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 16. திருச்சேறை

*வந்திக்கும் மற்றவர்க்கும் மாசுடம்பில் வல்லமணர் தமக்கும் அல்லேன்*
*முந்திச் சென்றரியுருவா யிரணியனை முரணழித்த முதல்வர்க் கல்லால்*
*சந்தப்பு மலர்ச்சோலைத் தண்சேறையெம் பெருமான்தாளை நாளும்*
*சிந்திப்பார்க் கென்னுள்ளம் தேனூறியெப்பொழுதும் தித்திக்குமே.*

**பெரிய திருமொழி 7-4-5**

*கள்ளத்தேன் பொய்யகத்தேனாதலால் போதொருகால் கவலையென்னும்*
*வெள்ளத்தேற்கு என்கொலோ? விளைவயலுள் கருநீலம்களைஞர்தாளால்*
*தள்ள தேன் மணநாறும் தண்சேறையெம் பெருமான்தாளை நாளும்*
*உள்ளத்தே வைப்பாருக்கு இது காணீர் என்னுள்ளம் உருகுமாறே.*

**- பெரிய திருமொழி 7-4-9**

கும்பகோணத்திலிருந்து குடவாசல் வழியாக திருவாரூர் செல்லும் எல்லாப் பேருந்துகளும் இத்தலம் வழியாகத் தான் செலலும் திருச்சேறை பெருமாளை வணங்கினால் வைகுண்டப் பதவி நிச்சயம் என்று புராணங்கள் கூறுகின்றன.

ப்ரளய காலத்தில் பிரம்மா, மஹா விஷ்ணுவின் கூற்றுப்படி இத்தலத்தில் - ஸார க்ஷேத்திரத்தில் - மண் எடுத்து கடம் செய்து அதில் வேதங்களை வைத்து காப்பாற்றியதாக ஐதீகம். மண் எடுத்த இடம் "ஸார புஷ்கரணி" ஆயிற்று காவிரியின் தவத்திற்கு மெச்சி, எம்பெருமான் குழந்தையாக தவழ்நது வந்து காட்சியளித்தார் காவேரி குழந்தைப் பெருமாளை வணங்கினாள். பெருமாள் தன் மழலை வேடத்தை விட்டு விலகி, கருடவாகனத்தில் ஸ்ரீதேவி, பூமாதேவி, நீளாதேவி, மகாலக்ஷ்மி, சாரநாயகி புடைசூழ 5 தேவிகளுடன் காவேரிக்கு காட்சி தந்தார்

**மூலவர்** : சாரநாதன் - கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். வடபுறம் காவேரித் தாயாரும், தென்புறம் மார்க்கண்டேயரும் காட்சி.

**உற்சவர்** : 5 தேவிகள் புடை சூழ தரிசனம்

**தாயார்** : சாரநாயகி

**தீர்த்தம்** : சார புஷ்கரிணி

**விமானம்** : சார விமானம்

**ப்ரத்யக்ஷம்** : காவேரி

**சிறப்புக்கள்:**

1. 108 திவ்ய தேசங்களில், இத்தலத்தில் மட்டுமே பெருமாள் 5 தேவியருடன் காட்சி தருகிறார்.
2. இங்குள்ள தேர் மிகப்பெரிய தேராகும்.
3. திருமங்கையாழ்வாரால் மட்டுமே மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.
4. புஷ்கரிணியின் மேற்குக் கரையில் ஒரு ஆஞ்சநேயர் கோயில் உள்ளது.

## 17. திருத்தலைச்சங்க நாண்மதியம் (தலைச்சங்காடு)

*கண்ணார் கண்ணபுரம் கடிகை கடிகமழும்*
*தண்ணார் தாமரைசூழ் தலைச்சங்க மேல்திசையுள்*
*விண்ணோர் நாண்மதியை விரிகின்ற வெஞ்சுடரை*
*கண்ணாரக் கண்டுகொண்டு களிக்கின்றது இங்குஎன்று கொலோ?*

- **பெரிய திருமொழி** 8-9-9

மயிலாடுதுறையிலிருந்து ஆக்கூர் சென்று, அங்கிருந்து சீர்காழி, செல்லும் பாதையில் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. தலைச்சங்காடு என்றால் தான் எல்லோருக்கும் தெரியும். சந்திரனுக்கு ஏற்பட்ட சாபம் தீர்ந்தமையால், இங்குள்ள பெருமாளுக்கு நாண்மதியப் பெருமாள் என்ற திருநாமம் ஏற்பட்டது. தலைச்சிறந்த

சங்குகள் விற்கப்பட்ட இடமும், காடும் சேர்ந்து தலைச்சங்காடு ஆயிற்று.

**மூலவர்** : நாண்மதியப் பெருமாள் - கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

**உற்சவர்** : வெண்சுடர்ப்பெருமாள்

**தாயார்** : தலைச்சங்க நாச்சியார் - செங்கமலவல்லி

**விமானம்** : சந்த்ர விமானம்

**தீர்த்தம்** : சந்த்ர புஷ்கரணி

**ப்ரத்யக்ஷம்** : சந்திரன், தேவர்கள், நித்ய ஸூரிகள்

**சிறப்புக்கள்:**

1. எம்பெருமானை கதிர்களுக்கு உவமைப்படுத்தி சந்திர முகமாக ஆழ்வார்கள் கொண்டாடின அழகை தனக்குப் பெயராகவே சூட்டிக் கொண்டு திகழ்கிறார் இந்த நாண்மதியார்.
2. பெருமானின் கையிலுள்ள சங்கு பேரழகு வாய்ந்தது.
3. திருமங்கையாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்டுள்ளது.
4. ஸ்ரீ ஸுந்தர ராமானுஜதாஸரின் முயற்சியால் இக்கோயில் புதுப்பிக்கப்பட்டு தாயார் ஸந்நிதியும் கட்டப்பட்டுள்ளது.

## 18. திருக்கண்டியூர்

*பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணும்*
*முண்டியான் சாபம் தீர்த்த ஒருவனூர் உலகமேத்தும்*
*கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று*
*மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே?*

**- திருக்குறுந்தாண்டகம் - 19**

தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் வழியில் 9-10 கி.மீ தொலைவில் உள்ளது.

பரமசிவன் ப்ரஹ்மனின் ஒரு தலையைக் கிள்ளியதால் அவர் கபாலம் கையில் ஒட்டிக் கொள்ள, அந்த சாபத்தைப் போக்க திருமாலை நினைத்து சிவன் வழிபட, திருமாலின் கூற்றுப்படி கண்டியூர் வந்து பத்ம தீர்த்தத்தில் நீராடி, பெருமாளையும், கமலவல்லி நாச்சியாரையும் வழிபட்டு, சாப விமோசனம் பெற்றார். கையில் ஒட்டியிருந்த கபாலம் அகன்றது சிவனுக்கு ப்ரஹ்மசிரக கண்டீச்வரர் என்று பெயர். அவர் சாபம் தீர்த்த நினைவாக "கண்டியூர்" என்றே இத்தலம் அழைக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | ஹரசாப விமோசனப் பெருமாள் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **உத்ஸவர்** | : | கமலநாதன் |
| **தாயார்** | : | கமலவல்லி நாச்சியார் |
| **விமானம்** | : | கமலாக்ருதி விமானம் |
| **தீர்த்தம்** | : | கபால மோக்ஷ புஷ்கரிணி, பத்ம தீர்த்தம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | அகஸ்தியர் |

**சிறப்புக்கள்:**

1. ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் மூவருக்கும் கோபுரங்களுடன் கூடிய தனிக் கோயில்கள் உள்ளன.
2. பெருமாள் கோயிலில் ஒரு ஸந்நிதியில் முன்புறம் சக்கரத் தாழ்வாரும், பின்புறம் நரஸிம்ஹனும் உள்ளனர்.
3. திருமங்கையாழ்வார் மட்டும் ஒரே ஒரு பாடலில் மங்களா சாசனம் செய்துள்ளார்.

## 19. திருவிண்ணகர் என்னும் ஒப்பிலியப்பன் கோவில்

a. *காண்மின்கள் உலகீர்! என்று கண்முகப்பே நிமிர்ந்த*
*தாளிணையன் தன்னைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன*
*ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும் வல்லார்*
*கோணையின்றி விண்ணோர்க்கு என்றுமாவர் குரவர்களே.*

**திருவாய்மொழி** - 6-3-11

b. *கையுமுரையுங் கருத்துமுனக்கேயடிமை*
*செய்யும்படி நீ திருத்தினாய் - ஐயா*
*திருவிண்ணகராளா சிந்தையிலுமெண்ணேன்*
*பெரு விண்ணகராளும் பேறு.*

**- பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் எழுதிய**
**108 திருப்பதி அந்தாதி.**

இத்தலம் கும்பகோணத்திலிருந்து 7 கி.மீ தொலைவில் உள்ளது. திருப்பதி போக இயலாதவர்கள், வேங்கடேசனுக்குச் செய்து கொண்ட பிரார்த்தனைகளை இங்கேயும் செலுத்தலாம். திருப்பதி ஸ்ரீனிவாசனுக்கு தமையனார் என்று ஐதீகம்.

மார்க்கண்டேய முனிவரின் மகளை கிழவர் வேடத்தில் வந்த பெருமாள் மணக்க விரும்பினார். ஆனால் மார்க்கண்டேயர், அவள் சிறிய பெண், உணவில் சுவையைக் கூட அறியாதவள். அவள் சமைத்தால் சாப்பாட்டில் சரியாக உப்பு கூட போடத் தெரியாது. எனவே இயலாத காரியம் என்று கூறினார். ஆனால் கிழவரோ தன் முடிவில் மாற்றமில்லை என்றார். மார்க்கண்டேயர் ஆபத்தில் உதவும் பரந்தாமனை வேண்டி நிஷ்டையில் அமர்ந்தார். நெடுநேரம் கழித்து கண்களைத் திறந்து பார்த்தபோது எம்பெருமான் சங்கு சக்கர தாரியாக காட்சியளித்தார். முனிவர் உடனே தண்டனிட்டு வணங்கி, தன் மகளை கன்னிகாதானம் செய்து கொடுத்து மாப்பிள்ளையாக ஏற்றுக் கொண்டார். உப்பில்லா பண்டத்தை உகந்து ஏற்போம் என்று பெருமாள் சொன்னதால், இன்றும் உப்பிலா நிவேதனமே பெருமாளுக்கு சமர்ப்பிக்கப்படுகிறது. இன்றும் உப்பு இல்லாத அப்பனாக, உப்பிலியப்பனாக, ஒப்பு இல்லாத அப்பனாக, ஒப்பிலியப்பனாக காட்சி தருகிறார் பெருமாள். கோயிலில் தயாராகும் எந்தப் பிரசாதத்திலும் உப்பு சேர்ப்பது கிடையாது.

**மூலவர்** : ஒப்பிலியப்பன் - உப்பிலியப்பன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : பூமி தேவி - பூமி நாச்சியார் - பெருமாளுக்கு வலதுபுறம் மண்டியிட்டு வணங்கும் திருக்கல்யாண கோலம்.

**தீர்த்தம்** : அஹோராத்ர புஷ்கரணி, ஆர்த்தி புஷ்கரணி

**விமானம்** : விஷ்ணு விமானம் - சுத்தானந்த விமானம்

**ப்ரத்யக்ஷம்** : மார்க்கண்டேயர், காவேரி, கருடன்

**சிறப்புக்கள்:**

1. 108 திவ்ய தேசங்களில் இங்கு மட்டும்தான் உப்பில்லா நிவேதனம்.

2. உப்பிலியப்பன் நம்மாழ்வாருக்கு 5 வடிவங்களுடன் காட்சியளித்துள்ளார். அவை 1. பொன்னப்பன், 2. மணியப்பன், 3. முத்தப்பன், 4. என்னப்பன், 5. விண்ணகரப்பன். அதனால் ஆழ்வார் இந்த ஐந்து வடிவையும் பாடியிருக்கிறார்.

*என்னப்பன் எனக்காயிகுளாய் என்னைப் பெற்றவளாய்*
*பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்*
*மின்னப்பொன்மதிள்சூழ் திருவிண்ணகர் சேர்ந்தஅப்பன்*
*தன்னொப் பாரில்லப்பன் தந்தனன் தனதாள் நிழலே.*

- **திருவாய்மொழி** 6 3 9

*வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத*
*பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் நான்கிடத்தும்*
*நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே*
*என்றால் கெடுமாம் இடர்.*

- **முதல் திருவந்தாதி** -77

திருவேங்கடமும், திருவிண்ணகரும், திருவெஃகாவும் குறையாத புஷ்பங்கள் நிறைந்த அகழியால் சூழப்பெற்ற திருக்கோவிலூரென்னும் அழகிய நகரும் ஆகிய இந்த நான்கு திவ்ய தேசங்களிலும் நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் சேவை சாதிக்கும் பெருமாளை வணங்கினால் பாவங்கள் எல்லாம் தீரும்.

4. இத்தலத்தை நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பேயாழ்வார், பொய்கையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

5. ஒவ்வொரு மாதமும் சிரவண நக்ஷத்திரத்தன்று சிரவண தீபம் எடுத்து குறி சொல்வது விசேஷம்.

6. பங்குனி மாதம் ப்ரம்மோதஸவமும், ஐப்பசி மாதம் கல்யாண உத்சவமும் குறிப்படத்தக்கவை.

7. தேசிகன் சன்னதி உள்ளது. உட்பிரகாரத்தை வலம் வரும் போது வெளி மண்டபத்தில் தென்புறத்தில் அனுமார் சன்னதியும், வடபுறத்தில் ஆழ்வார் சன்னதியும், அதன் கிழக்கே ராமர் சன்னதியும் உள்ளன.

8. ஆலயததின் சுவரெங்கும் திருப்பாவை பாசுரங்களும், தசாவதாரமும் சித்திரமாய் தீட்டப்பட்டிருப்பது கொள்ளையழகு.

9. வடமொழியில் இத்தலம் வைகுண்டத்திற்குச் சமமானதாகப் பேசப்படுகிறது எனவே இதனை "ஆகாச நகரி" என்று வடநூல்கள் கூறுகின்றன.

10. இத்திருக்கோயில் திருக்குளத்தில் மட்டுமே இரவில் ஸ்நானம் செய்யலாம். எனவே தான் அஹோராத்ரி புஷ்கரிணி எனப்பெயர்.

## 20. திருக்கண்ணபுரம்

*பாதம்நாளும், பணியத்தணியும் பிணி*
*ஏதம்சாரா எனக்கேல் இனியென்குறை?*
*வேதநாவர் விரும்பும் திருக்கண்ணபுரத்து*
*ஆதியானை அடைந்தார்க்கு அல்லலில்லையே.*

- **திருவாய்மொழி** - 9-10-9

இத்தலம் நன்னிலத்திலிருந்து 7 கி.மீ தொலைவில் உள்ளது. ரங்க பட்டர் என்கிற அர்ச்சகர் சோழ அரசனுக்கு பெருமாளுக்குக் கேசம் வளர்ந்ததைக் காட்டுவதாக வாக்களித்ததை காப்பாற்ற, பெருமான் திருமுடியில் திருகுழற்கற்றையை வளர்த்துக் கேசத்தைக் காட்டி அருளியதால் பெருமாளுக்கு சௌரிராஜன் என்ற பெயர் உண்டாயிற்று. பெருமாள் தன் சக்ராயுதத்தால் வீகாடக்ஷன் என்ற துஷ்ட அசுரனை நிக்ரகம் செய்து மஹரிஷிகள் பிரார்த்தனைப்படி சக்ர

ப்ரயோக அவசரமாக ஸேவை சாதிக்கும் ஸ்தலம். ஸ்ரீமந்நாராயணன் எல்லா அக்ஷரங்களிலும் இத்தலத்தில் ஸாந்நித்யம் செய்கிறபடியால் இது, "ஸ்ரீமதஷ்டாக்ஷர மஹா மந்த்ரஸித்தி க்ஷேத்திரம்" என்று பெயர் பெற்றது.

**மூலவர்** : நீலமேகப் பெருமாள் - சௌரிராஜன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்சவர்** : சௌரிராஜப் பெருமாள்

**தாயார்** : கண்ணபுரநாயகி

**தீர்த்தம்** : நித்ய புஷ்கரிணி

**விமானம்** : உத்பலாவதக விமானம்

**ப்ரத்யக்ஷம்** : கண்வ முனிவர், கருடன், தண்டக மஹரிஷி

**சிறப்புக்கள்:**

1. இத்தல பெருமாள் திருவஷ்டாக்ஷர எழுத்துக்களின் மொத்த ஸ்வரூபமாக விளங்குகிறார்.

2. விபீஷண ஆழ்வாருக்கு ஸ்ரீரெங்கநாதர் அருளியபடி அமாவாசை தினத்தன்று பகவாந் நடைஅழகை ஸாதித்த ஸ்தலம்.

3. அபய ஹஸ்தத்துக்கு பதிலாக வரதஹஸ்தம் விளங்குகின்றது. உத்சவப்பெருமாள் கன்யகாதானம் வாங்க கையேந்திய நிலையில் சேவையளிக்கிறார்.

4. திருமங்கையாழ்வாருக்கு திருமந்திர உபதேசம் செய்யப்பட்ட ஸ்தலம்.

5 அர்த்த சாமத்தில் பெருமாளுக்கு "முனியோதரம் பொங்கல்" வழங்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

6 நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், குலசேகர ஆழ்வார், ஆண்டாள் - மங்களாசாசனம் செய்துள்ளனர்.

7. 108 திவ்ய தேசங்களில் "கீழை வீடு" என்று இத்தலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 21. திருநாகை - நாகப்பட்டினம்

*பொன்னிவர் மேனி மரகதத்தின் பொங்கிளஞ்சோதிய கலத்துஆரம்*
*மின்இவர் வாயில்நல்வேத மோதும்வேதியர் வானவராவர் தோழீ !*
*என்னையும் நோக்கி என்னல்குலும் நோக்கி ஏந்திளங்கொங்கையும் நோக்குகின்றார்*
*அன்னையென்னோக்கு மென்றஞ்சுகின்றேன் அச்சோ ஒரு வரழகியவா!*

**- பெரிய திருமொழி 9-2-1**

மயிலாடுதுறையிலிருந்து நாகப்பட்டினம் செல்லும் பேருந்துகள் இக்கோவிலின் அருகாமையில் செல்லும்.

ஆதிசேஷன் ஆகம விதிப்படி அஷ்டாங்க விதான முறையில் பெருமாளை ஆராதித்ததால் அவன் பெயராலேயே நாகன் பட்டினமாகி, நாகப்பட்டினமாயிற்று.

**மூலவர்** : நீலமேகப் பெருமாள் - கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்

**உற்சவர்** : சௌந்தர்யராஜன்

**தாயார்** : சௌந்தர்யவல்லி, உத்சவத் தாயார் கஜலக்ஷ்மியாகக் காட்சியளிக்கிறார்

**தீர்த்தம்** : ஸாரபுஷ்கரிணி

**விமானம்** : சௌந்தர்ய விமானம்

**ப்ரத்யக்ஷம்** : நாகராஜன், திருமங்கையாழ்வார்.

**சிறப்புக்கள்:**

1. நின்ற, இருந்த, கிடந்த என்று மூன்று திருக்கோலச் சேவையும் இங்குண்டு. மூலவர் நின்ற திருக்கோலம். "வீற்றிருந்த பெருமாள்" என்று அமர்ந்த திருக்கோலம், பள்ளிகொண்ட திருக்கோலத்தில் அரங்கநாதனும் இங்கு காட்சி தருகின்றனர்.
2. ரங்கநாதன் சந்நிதியில் மிக அபூர்வமான அஷ்டபுஜ நரஸிம்மரின் வெண்கலச்சிலை உள்ளது. ஒருகை பிரஹ்லாதன் தலையைத் தொட்டும், மற்றொரு கை அபய

ஹஸ்தமாகவும் விளங்குகின்றன. மற்ற கைகள் ஹிரண்யவதம் செய்கின்றன.

3. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பட்டுள்ளது.

## 22. திருநறையூர் (நாச்சியார் கோயில்)

*அன்றுகை மூன்றினையும் அளந்து வேறோர்*
*அரியுருவாய் இரணியன தாகம் கீண்டு*
*வென்றவனை விண்ணுலகில் செலவுய்த்தாற்கு*
*விருந்தாவீர்!மேலெழுந்து விலங்கல் பாய்ந்து*
*பொன் சிதறிமணி கொணர்ந்து கரைமேல் சிந்திப்*
*புலம் பரந்து நிலம் பரக்கும் பொன்னிநாடன்*
*தென்தமிழன் வடபுலக்கோன் சோழன் சேர்ந்த*
*திருநறையூர் மணிமாடம் சேர் மின்களே.*

- **பெரிய திருமொழி** 6-6-5

கும்பகோணத்திலிருந்து திருவாரூர் செல்லும் சாலையில் 9 கி.மீ தொலைவில் உள்ளது. திருவாகிய லக்ஷ்மி தேவிக்கு தேன்போல் இனிக்கும் இடம் என்பதால் திருநறையூர் என்று பெயர் பெற்றது. இதே பொருளைத் தரும் சுகந்தகிரி என்று வடமொழியில் கூறப்படுகிறது.

| | | |
|---|---|---|
| மூலவர் | : | ஸ்ரீநிவாசன், திருநறையூர் நம்பி, வாசுதேவன், நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| தாயார் | : | வஞ்சுளவல்லி - பெருமாள் அருகில் திருமணக் கோலத்தில் நிற்கிறார். |
| **தீர்த்தம்** | : | மணி முத்தா புஷ்கரிணி, ஸங்கர்ஷண தீர்த்தம், ப்ரத்யும்ன தீர்த்தம், அநிருத்த தீர்த்தம், ஸாம்ப தீர்த்தம் |
| **விமானம்** | : | ஸ்ரீனிவாச விமானம், ஹேம விமானம். |
| **ப்ரத்யக்ஷம்** | : | மேதாவி முனிவர், ப்ரம்மா |

**சிறப்புக்கள்:**

1. மேதாவி ரிஷியின் வளர்ப்புப் பெண்ணான வஞ்சுள வல்லியை பகவான் தனது 5 நிலைகளில் திருமணக் கோலத்தில் ஏற்றுக் கொள்கிறார்.

2. வ்யூக ரூபத்துடன் எம்பெருமான் இங்கு எழுந்தருளியிருப்பது ஒரு தனிச்சிறப்பாகும்.

3. பிராட்டிக்கு உண்டான "நம்பிக்கை நாச்சியார்" என்னும் திருநாமத்தாலே நாச்சியார் கோயில் என வழங்கப்படுகிறது.

4. இத்தலம் சிறிதும், பெரிதுமான 16 கோபுரங்களை உடையது.

5. பெருமாளுடைய கல் கருடவாஹன சேவை பிரசித்தி பெற்றது. கல்லாலான கருடவாஹனத்தை முதலில் சந்நிதியில் 4 பேர்களும், முடிவில் கோயில் வாசலில் 64 பேர்களும் எழுந்தருளப்பண்ணும் வகையில் வாஹனம் சிறுகச்சிறுக கனத்து விடுமாம். கல் கருடனுக்கு தனிச் சந்நிதி உள்ளது.

6. இங்குதான் திருமங்கையாழ்வாருக்கு பெருமாளே பஞ்ச ஸமஸ்காரங்களை செய்வித்தார்.

7 திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பட்டுள்ளது.

## 23. திருக்காழிச்சீராம விண்ணகரம் (சீர்காழி)

*ஒரு குறளாய் இருநிலம் மூவடி மண் வேண்டி*
*உலகனைத்தும் ஈரடியாலொடுக்கி ஒன்றும்*
*தருக வெனாமாவலியைச் சிறையில் வைத்த*
*தாடாளன் தாளணைவீர் தக்க கீர்த்தி*
*அருமறையின் திரள் நான்கும் வேள்வியைந்தும்*
*அங்கங்களவையாறும் இசைகளேழும்*
*தெருவில் மலிவிழா வளமும் சிறக்கும் காழிச்*
*சீராம விண்ணகரே சேர் மினீரே.*

- **பெரிய திருமொழி**– 3-4-1

காழிச்சீராம விண்ணகரம் இன்று "சீர்காழி" என பெயர் தாங்கி சிறந்த நகரமாக விளங்குகிறது. பெருமாள் இடது காலைத்தூக்கி விண்ணை அளக்கிறார். இவ்வூரில் திருமங்கையாழ்வார் திருஞான சம்பந்தரை வாதில்வென்று அவருடைய வெற்றிவேலைப் பரிசாகப் பெற்றதுடன் "கடியுண்ட

நெடுவாளை" என்ற ஓர் பாடலாலும் புகழப் பெற்றார். த்ரி விக்ரம அவதாரம் எடுத்து தன் தாள்களால் உலகம் அளந்தமையால், இப்பெருமாளுக்கு "தாளாளன்" - தாடாளன் என்பதே திருநாமமாயிற்று.

ப்ரஹ்மாவிற்கு தன் ஆயுளைப் பற்றி கர்வம் ஏற்பட்ட போது, ரோமச முனிவர் "உன் ஆயுசும் என் ஒரு ரோமமும் சமம்" என்று சொல்லி அவர் கர்வத்தை அடக்கின ஸ்தலம்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | த்ரிவிக்ரமன் - தாடாளன் - நின்ற திருக்கோலம் கிழக்கே திருமுக மண்டலம். |
| **உத்சவர்** | : | த்ரிவிக்ரம நாராயணன். |
| **தாயார்** | : | லோகநாயகி |
| **தீர்த்தம்** | : | சங்க புஷ்கரிணி, சக்ர தீர்த்தம் |
| **விமானம்** | : | புஷ்கலாவர்த்த விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | அஷ்டகோண மஹரிஷி |

**சிறப்புக்கள்:**

1. விண்ணகரம் என்றால் விண்ணில் உள்ள பரம பதத்திற்கு சமமான ஸ்தலம் என்று பெயர். 108 திவ்ய தேசங்களில் 5 திவ்ய தேசங்களை திருமங்கையாழ்வார் "விண்ணகரம்" என்று குறிக்கின்றார். அவை.

   a. பரமேச்சுர விண்ணகரம் (வைகுண்டப் பெருமாள் கோயில்)

   b. காழிச்சீராம விண்ணகரம் (சீர்காழி)

   c. அரிமேய விண்ணகரம் (திருநாங்கூர் - குடமாடுகூத்தன்)

   d. வைகுந்த விண்ணகரம் (திருநாங்கூர் - வைகுந்தநாதன்)

   e. நந்திபுர விண்ணகரம் (நாதன் கோயில்)

2. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

3. திருமங்கையாழ்வார் தனது 8 விருதுப் பெயர்களையும் கீழ்வரும் பாடலில் ஒருங்கே சொல்கிறார்.

*செங்கமலத்து அயனனைய மறையோர் காழிச்*
*சீராம விண்ணகர் என் செங்கண்மாலை*
*அங்கமலத் தடவயல் சூழ் ஆலிநாடன்*
*அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சீயம்*
*கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்*
*கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன*
*சங்க முகத்தமிழ்மாலை பத்தும் வல்லார்*
*தடங்கடல் சூழுலகுக்குத் தலைவர் தாமே.*

- **பெரிய திருமொழி** - 3-4-10

## 24. திருக்கூடலூர்
### (ஆடுதுறைப் பெருமாள் கோவில்)

*பிள்ளையுருவாய்த் தயிருண்டு அடியே*
*னுள்ளம் புகுந்த ஒருவரூர் போல்*
*கள்ள நாரை வயலுள் கயல்மீன்*
*கொள்ளை கொள்ளும் கூடலூரே.*

- **பெரிய திருமொழி** - 5-2-3.

திருவையாறிலிருந்து கும்பகோணம் செல்லும் பாதையில் 11 கி.மீ தொலைவில் உள்ளது. பெருமாள் கோயில் என்று கேட்க வேண்டும்

நந்தகரிஷி தலைமையில் தேவர்கள் எல்லாம் கூட்டமாகக் கூடிநின்று வையம் காத்த பெருமாளை நேரடியாக தரிசித்தமையால் "கூடலூர்" என்ற பெயர் உருவாயிற்று காவேரி, இழந்த தன் ஒளியையும், சிறப்பையும் திரும்பப் பெற்றதால், "சங்கம க்ஷேத்திரம்" என்றும் இவ்வாலயத்திற்கு பெயர் உண்டு ஆடுதுறை ஒரு சிறிய கிராமம். இங்கு பெருமாளை எழுந்தருளச் செய்தமையால் "ஆடுதுறைப பெருமாள் கோயில்" என்றே வழங்கப்படுகிறது.

**மூலவர்** : வையங்காத்த பெருமாள் - ஜெகத்ரட்சகன் -நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : பத்மாசனி, புஷ்பவல்லி

**தீர்த்தம்** : சக்ர தீர்த்தம்

**விமானம்** : சுத்த சத்வ விமானம்

**ப்ரத்யக்ஷம்** : நந்தகமுனி

**சிறப்புக்கள்:**

1. பிரம்மாண்ட புராணம், கூடற்புராணம ஆகியவற்றில் இடம் பெற்றுள்ள ஆலயம் இது.

2 திருமால் வராக அவதாரமெடுதது பூமிக்குள் புகுந்த இடம் இதுவே.

3. காவேரி வெள்ளத்தில் இக்கோயில் மூழ்கி மண்மேடாகி விட்டபோது, ராணி மங்கம்மாள் கோயிலை புதுப்பித்ததாக வரலாறு

4 ஆஞ்சநேயருக்கு பெருமாள் காட்சி கொடுத்ததால் அநுமன் ஆனந்தக் கூத்தாடினார். அதனால இககோவிலின் அருகில் நடனமாடும் பாவனையில் ஆஞ்சநேயர் காட்சியளிக்கிறார்.

5 திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்

## 25. திருக்கண்ணங்குடி

*மன்னவன் பெரிய வேள்வியில் குறளாய் மூவடி நீரொடும் கொண்டு*
*பின்னும் ஏழுலகும் ஈரடியாகப் பெருந்திசைய டங்கிட நிமிர்ந்தோன்*
*அன்னமென் கமலத்தணி மலர்ப்பீடத்து அலைபுனலிலைக் குடை நீழல்*
*செந்நெலொண் கவரியசைய வீற்றிருக்கும் திருக்கண்ணங்குடியுள்*
*நின்றானே.*

**பெரிய திருமொழி** 9 1 5

இததலம கும்பகோணம் - திருவாரூர் மார்க்கத்தில் 40 கி.மீ தொலைவில உள்ளது.

வசிஷ்டா தம்பக்தியால் வெண்ணெய் மயமான க்ருஷ்ணனை இளகி, த்ரவமாகாமல் கட்டி, திவ்ய மங்கள விக்ரகம் செய்து த்யானம்

செய்வார். இப்படி வெகுகாலம் கடந்த பின், ஒருநாள் பகவான் கோபாலன் உருவம் கொண்டு, வஸிஷ்டர் ஆராதனம் செய்யும் வெண்ணெய் கண்ணனை அமுது செய்ததைப் பார்த்து கோபாலனைப் பிடிக்க ஓட, கோபாலனும் மேற்கு திசை நோக்கி ஓட, மகிழ மரத்தடியில் தவம் செய்து கொண்டிருந்த மகரிஷிகள் பக்தியாகிய பாசக்கயிற்றால் கட்டியதால், கட்டுண்டு கோயில்கொண்டு கண்ணன் எழுந்தருளியதால், திருக்கண்ணங்குடி என்ற பெயர் உண்டாயிற்று. கிருஷ்ணன் அர்ச்சை வடிவில் நின்றதால் கிருஷ்ண க்ஷேத்திரமாயிற்று.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | லோகநாதன், ச்யாமள மேனிப்பெருமாள் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | அரவிந்த நாயகி |
| **விமானம்** | : | உத்பலவதாக விமானம் |
| **தீர்த்தம்** | : | ச்ரவண புஷ்கரிணி |
| **தல விருக்ஷம்** | : | மகிழமரம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | பிரம்மா, கௌதமர், உபரி சிரவசு மன்னன், ப்ருகு, திருமங்கையாழ்வார். |

**சிறப்புக்கள்:**

1. பஞ்ச கிருஷ்ண க்ஷேத்திரம் எனப்படும் 5 கிருஷ்ண ஆலயங்களில் இதுவும் ஒன்று. (மற்றவை - திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருக்கோயிலூர், கபிஸ்தலம்)

2. சித்திரை மாதத் திருவிழாவில் ஏழாம் திருநாளன்று பெருமாளும், மற்றவர்களும் விபூதி அணிந்து சில நிமிடம் காட்சியளிப்பது அதிசயமான ஒன்று.

3. கருடன் இங்கு இரண்டு கரங்களையும் கட்டிக் கொண்டு காட்சியளிக்கிறார்.

4. திருக்கணணங்குடி என்றாலே தேரா வழக்கு, உறங்காப்புளி, ஊறாக்கிணறு, காயாமகிழ் என்று ஒரு பழமொழி உண்டு.

5. ஆறு, காடு, நகரம், தீர்த்தம், ஆலயம் ஆகிய ஐந்தும் இங்கு சிறப்புப் பெற்றிருப்பதால் "பஞ்ச பத்ரா" என்ற பெயரும் இந்த ஊருக்கு உண்டு.

6. தாயார் சந்நிதியில் மூலவரும், உதசவரும் ஒரேமுக ஜாடையுடனிருப்பது வேறெங்கும் காணமுடியாத அதிசயம்.

7. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட திவ்ய தேசம்.

## 26. திருக்கண்ணமங்கை

*வெஞ்சினக்களிற்றை விளங்காய் விழக்கன்று வீசிய ஈசனைப்பேய்மகள்*
*துஞ்சநஞ்சு சுவைத்துண்ட தோன்றலைத் தோன்றல் வாளரக்கன்*
*கெடத்தோன்றிய*
*நஞ்சினை அமுதத்தினை நாதனை நச்சுவாருச்சிமேல் நிற்கும்நம்பியை*
*கஞ்சனைத் துஞ்சவஞ்சித்த வஞ்சனைக் கண்ணமங்கையுள்*
*கண்டுகொண்டேனே.*

- **பெரிய திருமொழி** 7 10 8

இத்தலம் கும்பகோணத்திலிருந்து 40 கி.மீ தொலைவில் உள்ளது.

லக்ஷ்மி தவம் செய்ததால் லக்ஷ்மிவனம என்ற பெயரும், இவ்விடத்தில் திருமணம் நடைபெற்றதால் கிருஷ்ண மங்கள க்ஷேத்ரம் என்றும், ஒரே ஸ்தலத்திற்கு இருக்க வேண்டிய 7 வகை லக்ஷணங்களும் பொருந்தியிருப்பதால் ஸப்தாம்ருத க்ஷேத்ரம் என்றும் இதற்குப் பெயர்.

**மூலவர்** : பக்தவத்ஸலப் பெருமாள் பத்தராவிப பெருமாள் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : அபிஷேகவல்லி.

**தீர்த்தம்** : தர்சன புஷ்கரிணி

**விமானம்** : உத்பல விமானம்

**ப்ரத்யக்ஷம்** வருணன், ரோமசமுனி

**சிறப்புக்கள்:**

1. தாயார் ஸந்நிதியில் ஒருதேன் கூடுபோன்ற அமைப்புக்கு தினந்தோறும் பூஜை நடக்கிறது.
2. பக்தர்களின் பொருட்டு ஆலிபோல் வேகமாக வந்து அருள் பாலிப்பதால் பத்தராலியென்றும், பக்தர்களை விட்டு ஒருபோதும் நீங்காது பக்தர்களின் அருகிலேயே இருப்பதால் பக்த வத்ஸலர் என்றும் பெருமாளுக்கு திருநாமம்.
3. சிவபெருமான் நான்கு உருவங்கள் எடுத்து, நான்கு பக்கங்களையும் காதது வருகிறார் என்று ஐதீகம்.
4. இங்குள்ள வைகுண்டநாதன் திருஉருவும், கருடன் மேல் எழுந்தருளியிருக்கும் மகா விஷ்ணுவின் திருஉருவும் மிக அழகானவை
5. நாதமுனிகளின் சீடரான திருக்கண்ணமங்கையாண்டான் இவ்வூரில்தான் ஆனித திருவோணத்தன்று அவதரித்தார்.
6. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 27. திருத்தேவனார்த்தொகை
### (திருநாங்கூர்)

*இந்திரனும் இமையவரும் முனிவர்களும் எழிலமைந்த*
*சந்தமலர்ச் சதுமுகனும் கதிரவனும் சந்திரனும்*
*எந்தை! எமக்கருளென்னநின்று அருளுமிடம் எழில்நாங்கை*
*சுந்தர நற்பொழில் புடைசூழ் திருத்தேவனார் தொகையே.*

**- பெரிய திருமொழி 4-1-4**

இத்தலம் திருநாங்கூர் பதினொரு திருப்பதிகளுள ஒன்று. இதனை கீழச்சாலை என்றும் குறிப்பிடுவர். திருநாங்கூரிலிருந்து சுமார் 1 கி.மீ தொலைவிலும், சீர்காழிக்கு தென்கிழக்கே 6 கி.மீ தொலைவிலும் உள்ளது ஸ்ரீமந் நாராயணனை சேவிக்க தேவர்கள் இந்த இடத்தில் கூட்டம் கூட்டமாய் சபை கூடி நின்றதால் தேவனார்த்தொகை ஆயிற்று

மூலவர் : தெய்வநாயகன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

உத்சவர் : மாதவப் பெருமாள்

தாயார் : கடல்மகள் நாச்சியார்

தீர்த்தம் : சோபன புஷ்கரிணி, தேவஸபா புஷ்கரிணி

விமானம் : சோபன விமானம்

ப்ரத்யக்ஷம் : வஸிஷ்டர்

**சிறப்புக்கள்:**

1. உற்சவ மூர்த்தியின் பெயரால் இத்தலம் "மாதவப் பெருமாள் கோவில்" என அழைக்கப்படுகிறது.
2. வசிஷ்டர் இத்தலப் பெருமானைக் குறித்து தவமிருந்து பெருமாளைக் கண்டதாக ஐதீகம்.
3. திருமங்கையாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப் பட்டுள்ளது.

## 28. திருவண் புருடோத்தமம் (திருநாங்கூர்)

*கம்பமா கடலடைத்து இலங்கைக்குமன் கதிர்முடியவை பத்தும்*
*அம்பினாலறுத்து அரசுஅவன் தம்பிக்கு அளித்தவனுறை கோயில்*
*செம்பலா நிரைசெண்பகம் மாதவிசூதகம் வாழைகள்சூழ்*
*வம்புலாம் கமுகோங்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே.*

- **பெரிய திருமொழி 4 2 1**

இத்தலம் சீர்காழியிலிருந்து 8 கி.மீ தொலைவில் திருநாங்கூரிலேயே உள்ளது

மூலவர் : புருஷோத்தமன் - நின்ற திருக்கோலம் கிழக்கே திருமுக மண்டலம்.

தாயார் : புருஷோத்தம நாயகி

தீர்த்தம் : திருப்பாற்கடல் தீர்த்தம்

விமானம் : சஞ்சீவி விக்ரஹ விமானம்

ப்ரத்யக்ஷம் : உபமன்யு

**சிறப்புக்கள்:**

1. உத்சவப் பெருமாளின் திருவுருவம் மிக அழகியது.

2. அயோத்தியிலுள்ள எம்பெருமானே இங்கு எழுந்தருளியமையால் புருஷோத்தமன் என்ற திருநாமம் உண்டாயிற்று.

3. தை அமாவாசைக்கு மறுநாள் நடக்கும் கருடஸேவை மிக விசேஷம்

4 திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 29. திருச்செம்பொன் செய்கோயில்
## (திருநாங்கூர்)

*களங்கனி வண்ணா! கண்ணனே! என்தன் கார்முகிலே! என*
*நினைந்திட்டு*
*உளங்கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்துள் ஊறிய*
*தேனை*
*தெளிந்த நான்மறையோர் நாங்கை நன்னடுவுள் செம்பொன்*
*செய்கோயிலினுள்ளே*
*வளங்கொள் பேரின்பம் மன்னிநின்றானை வணங்கிநான்*
*வாழ்ந்தொழிந்தேனே.*

- **பெரிய திருமொழி** 4-3-9

இத்தலம் சீர்காழியிலிருந்து 8 கி.மீ தொலைவில திருநாங்கூரிலேயே உள்ளது.

இராவண வதத்திற்குப் பிறகு, ராமபிரான் இந்த ஸ்தலத்தில் இருந்த த்ருடநேத்திரர் என்ற முனிவரின் குடிலில் தங்கி அவர் கூறியபடி தங்கத்தில் பசு செய்து, அங்கு மூன்று நாட்கள் தங்கி, பின்னர் அப்பசுவை ஒரு பிராம்மணர்க்கு தானம் செய்தார். அப்பிராமணன் அதைக்கொண்டு இந்தக் கோவிலை கட்டியபடியால் இதற்கு "செம்பொன்செய் கோவில்" என்ற பெயர் ஏற்பட்டது.

**மூலவர்** : பேரருளாளன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்சவர்** : ஹேமரங்கர், செம்பொன்னரங்கர்

**தாயார்** : அல்லிமாமலர் நாச்சியார்.

**தீர்த்தம்** : நித்ய புஷ்கரணி, கனக தீர்த்தம்

**விமானம்** : கனக விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ருத்ரன்

**சிறப்புக்கள்:**

1. பெருமாள் பரம பதத்தில் இருப்பதால் அருளாளன் இங்கு வந்து நம்மோடு இருப்பதால் பேரருளாளன்
2. ருத்ரன் பிரார்த்தனைப்படி, விஷ்ணு 11 ரூபத்துடன் ருத்திரனுடன் நித்யவாஸம் செய்து கொண்டு பக்தர்களின் அபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொண்டிருககிறார் என்பது வரலாறு.
3. தை மாதம் அமாவாசை கழிந்த மறுநாள் இரவு 11 திவ்ய தேச எம்பெருமான்களும திருமாமணி மாடத்திலிருந்து தொடங்கி 11 கருட வாஹனங்களில் எழுந்தருளி திருநாங்கூரில் 11 கருடஸேவை உத்சவம் மிகச் சிறப்பாக நடைபெறறு வருகிறது.
4. காஞ்சியில் வாழ்ந்த காஸ்யபன் என்ற அந்தணனின் மகன் முகுந்தன், தன் தகப்பனார் வறுமையைப் போக்க இத்தலத்திற்கு வந்து பெருமாள் உபதேசித்த அஷ்டாக்ஷரத்தை மூன்று நாளில் 32,000 தடவை ஜபம் செய்து பெருமாளின் திருவருளால் பெரும் செல்வம் பெற்றான் என்ற கதை உண்டு.
5. பெருமாள் அல்லிமாமலர் நாச்சியார், பூமாதேவி சகிதம் எழுந்தருளியுள்ளார்.
6. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம செய்யப்பட்ட ஸ்தலம்.

## 30. திருமணிக் கூடம் (திருநாங்கூர்)

*பாவமும் அறமும்வீடும் இன்பமும் துன்பந்தானும்*
*கோவமும் அருளும் அல்லாக்குணங்களும் ஆயஎந்தை*
*மூவரில் எங்கள் மூர்த்தி இவனென முனிவரோடு*
*தேவர் வந்திறைஞ்சும் நாங்கூர்த் திருமணிக் கூடத்தானே.*

**- பெரிய திருமொழி 4-5-9**

சீர்காழியிலிருந்து 8 கி.மீ தொலைவிலுள்ள திருநாங்கூர் எல்லையிலிருந்து 1 கி.மீ தூரத்தில் உள்ளது. இத்தலம் மணிக்கூடம் போன்ற அமைப்பில் கட்டப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | வரதராஜப் பெருமாள் (மணிக்கூட நாயகன்) - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | திருமகள் நாச்சியார். |
| **தீர்த்தம்** | : | சந்திர புஷ்கரிணி |
| **விமானம்** | : | கனக விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | பெரிய திருவடி, சந்திரன் |

**சிறப்புக்கள்:**

1. திருநாங்கூருக்கு வந்த 11 எம்பெருமான்களில் இவர் காஞ்சி வரதராஜப் பெருமாள் ஆவார்.
2. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 31. திருக்காவளம்பாடி (திருநாங்கூர்)

*தாவளந்து உலகமுற்றும் தடமலர்ப் பொய்கைபுக்கு*
*நாவளம் நவின்றங்கேத்த நாகத்தின் நடுக்கம் தீர்த்தாய்!*
*மாவளம்பெருகி மன்னுமறையவர் வாழும்நாங்கை*
*காவளம் பாடிமேய கண்ணனே! களைகண் நீயே.*

**- பெரிய திருமொழி - 4-6-1**

இத்தலம் வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்து 8 கி.மீ தொலைவில் உள்ளது. திருநாங்கூரிலிருந்து 2 கி.மீ தொலைவில உள்ளது.

**மூலவர்** : கோபாலகிருஷ்ணன் (ராஜகோபாலன்) - ருக்மணி, சத்யபாமாவுடன் நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : மடவரல்மங்கை - செங்கமல நாச்சியார்

**தீர்த்தம்** : தடமலர்ப் பொய்கை

**விமானம்** : ஸ்வயம்பு விமானம்

**ப்ரத்யக்ஷம்** : சேனைத் தலைவர், ருத்ரன்

**சிறப்புக்கள்:**

1. காவளம் என்னும் சொல்லிற்கொப்ப அழகிய பொழில்கள் சூழ்ந்து துவாரகாபுரியைப் போலவே செழித்து திகழ்கிறது.

2. திருநாங்கூரில் நடக்கும் கருடசேவை வைபவத்தில் இப்பெருமானும் எழுந்தருள்வார்.

3. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப் பட்டுள்ளது.

4. திருமங்கையாழ்வார் அவதாரஸ்தலமான திருக்குறையலூர், மங்கை மடம் - இரண்டும் இத்தலத்திற்கு அருகாமையில் உள்ளன.

## 32. திருவெள்ளக்குளம் (அண்ணன் கோவில்)

*வாராகமதாகி இம்மண்ணை இடந்தாய்!*
*நாராயணனே! நல்ல வேதியர் நாங்கூர்*
*சீரார் பொழில்சூழ் திருவெள்ளக்குளத்துள்*
*ஆராவமுதே! அடியேற்கு அருளாயே.*

- **பெரிய திருமொழி** 4 7-8

இத்தலம் சீர்காழியிலிருந்து தென்கிழக்கே 10 கி.மீ தொலைவில் உள்ளது. திருநாங்கூர் 11 திருப்பதிகளுள் இதுவும் ஒன்று. இத்தலத்திற்கு முன்புறம் அமைந்துள்ள "ஸ்வேத புஷ்கரணி" யே வெள்ளைக்குளமாகி வெள்ளக்குளமாயிற்று.

வேங்கடவனே இத்தலத்தில் எழுந்தருளியிருப்பதாகவும், திருப்பதி ஸ்ரீனிவாசனுக்கு இப்பெருமானை "அண்ணன்" எனவும் திருமங்கையாழ்வார் கூறி, தன் துன்பத்தை போக்குமாறு வேண்டுகிறார். அண்ணன் குடிகொண்ட கோவில் அண்ணன் கோவில் என்றாயிற்று. திருமங்கையாழ்வார் இப்பெருமாளை பூவார் திருமகள் புல்கிய மார்பா என்றழைக்கிறார்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | கண்ணன் நாராயணன், அண்ணன் பெருமாள் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | அலர்மேல் மங்கை. |
| **உத்சவர்** | : | பத்மாவதி, பூவார் திருமகள் |
| **தீர்த்தம்** | : | வெள்ளக்குள தீர்த்தம் |
| **விமானம்** | : | தத்வத்யோதக விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | ருத்ரர், ஸ்வேதராஜன் |

**சிறப்புக்கள்:**

1. இது திருநாங்கூர் திருபபதிகள் 11-ல் ஒன்று. இந்த க்ஷேத்திரத்தை தென் திருப்பதி என்றும் கூறுவர்.

2. இத்தலத்தில் பெருமாள்அலர்மேல் மங்கைத் தாயாருடன் காட்சி தருகிறார்.

3. சூரிய வம்சத்து அரசகுமாரன் சுவேதனுக்கு 9-வது வயதில் ம்ருத்யு உண்டு என்று அறிந்து, இத்தலத்திற்கு வந்து, ச்வேத புஷ்கரிணியில் நீராடி, மருத்தரின் உபதேசம் பெற்று, வில்வ மரத்தடியில் அமர்ந்து ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜபம் செய்ய பகவான் ப்ரத்யக்ஷமாகி மார்க்கண்டேயனைப் போல தீர்க்காயுளை அடைவாய் என்று வரம் அளித்ததாக ஸ்தல புராணம்.

4. திருமங்கை யாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 33. திருப்பார்த்தன் பள்ளி (திருநாங்கூர்)

*கண்ணனென்றும் வானவர்கள் காதலித்து மலர்கள் தூவும்*
*எண்ணனென்றும் இன்பனென்றும் ஏழுலகுக்காதி என்றும்*
*திண்ணமாட நீடுநாங்கைத் தேவதேவனென் றென்றோதி*
*பண்ணினன்ன மென்மொழியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே.*

**- பெரிய திருமொழி - 4-8-9**

சீர்காழியிலிருந்து 12 கி.மீ தொலைவில் உள்ளது. பார்த்தனுக்காக உண்டான கோவிலானதால் பார்த்தன் பள்ளியாயிற்று. பார்த்தனாகிய அர்ஜுனனுக்கு இங்கு ஒரு கோவில் உண்டு.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | தாமரையாள் கேள்வன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம். |
| **உத்சவர்** | : | பார்த்தசாரதி |
| **தாயார்** | : | தாமரை நாயகி |
| **தீர்த்தம்** | : | சங்கசரஸ் (கங்கா தீர்த்தம்) |
| **விமானம்** | : | நாராயண விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | பார்த்தன், வருணன், 11 ருத்ரர்கள் |

**சிறப்புக்கள்:**

1. மூலவர், உற்சவர் இருவருக்குமே ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவி என்று மூன்று தேவிகள் உண்டு.
2. இங்குள்ள மற்றொரு உற்சவருக்கு கோலவில்லி ராமன் என்ற பெயரும் உண்டு. சங்கு, சக்கரம், கதை இவற்றுடன் வில்லும், அம்பும் சார்த்தப்பட்டுள்ளன.
3. தை மாதம் புஷ்ய நக்ஷத்திரத்தன்று தீர்த்தவாரி விசேஷம்.
4. பார்த்தசாரதி பெருமாள் சங்கு சக்கரங்களுடன் நான்கு புஜங்களுடன் சாந்தம் தவழும் வதனத்துடன் திகழ்கிறார்.
5. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பட்டுள்ளது.

## 34. திரு உறையூர் என்னும் திருக்கோழி

*கோழியும் கூடலும் கோயில்கொண்ட கோவலரேஒப்பர் குன்றமன்ன*
*பாழியந்தோளும் ஓர்நான்குடையர் பண்டுஇவர் தம்மையும்*
*கண்டறியோம்*
*வாழியரோ இவர்வண்ணம் எண்ணில் மாகடல்போன்றுளவர்*
*கையில்வெய்ய*
*ஆழியொன்றேந்தி ஓர் சங்குபற்றிஅச்சோ ஒருவரழகிய வா.*

- **பெரிய திருமொழி** - 9-2-5-.

*அல்லி மாமலர் மங்கைநாதன் அரங்கன் மெய்யடியார்கள்தம்*
*எல்லையிலடிமைத் திறத்தினில் என்றும் மேவுமனத்தனாம்*
*கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்*
*சொல்லினின் தமிழ்மாலை வல்லவர் தொண்டர் தொண்டர்களாவரே.*

- **பெருமாள் திருமொழி** 2-10

இத்தலம திருச்சி நகரக்குள்ளேயே அமைந்துள்ளது. இவ்வூர் உறையூர் என்றும், உறந்தை என்றும், நிகளாபுரி என்றும் அழைக்கப்படும் சோழ மன்னனின் திருமகளான கமலவல்லி நாச்சியார் ஸ்ரீரெங்கநாதன் மீது காதல்கொண்டு விரதம் இருக்க, அழகிய மணவாளன் இங்குவந்து திருமணம் புரிந்து கொண்டதாக ஸ்தலபுராணம். இத்தலம் நாச்சியார்கோயில் எனவும் அழைக்கப்படுகிறது.

**மூலவர்** : அழகிய மணவாளன் - நின்ற திருக்கோலம் - வடக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : கமலவல்லி நாச்சியார், உறையூர்வல்லி திருமணத்திற்கு தயார் நிலையில் அமர்ந்த திருக்கோலம்.

**தீர்த்தம்** : கல்யாண தீர்த்தம் - சூரிய புஷ்கரிணி

**விமானம்** : கல்யாண விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ரவிதர்மா, 33 கோடி தேவர்கள்.

**சிறப்புக்கள்:**

1. திருப்பாணாழ்வாரின் அவதாரஸ்தலமாகிய இங்கு அவருக்கு ஒரு தனி சந்நிதி உள்ளது.

2. சோழநாட்டைச் சேர்ந்த யானை ஒன்று இவ்வூருக்குள் வந்தபோது, ஒரு கோழி அதனை எதிர்த்து யுத்தம் செய்து புறமுதுகிட்டு ஓடச்செய்ததால், இவ்வூருக்கு கோழியூர் என்ற பெயர் உண்டாயிற்று என்று கூறுவர்.

3. கமலவல்லி நாச்சியாரை திருவரங்கன் அழகிய மணவாளனாக வந்து திருமணம் புரிந்ததை நினைவு கூறும் வகையில் வருடம் ஒருமுறை ஸ்ரீரங்க அரங்கன் இங்கு எழுந்தருளி நாச்சியாருடன் ஏகாசனத்தில் சேவை அளிக்கிறார். இந்த திருக்கல்யாண உத்சவம் காணப்பேரழகு வாய்ந்தது.

4. இத்தலத்தை திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தாலும், குலசேகர ஆழ்வார் ஒரு பாசுரத்தாலும் மங்களாசாசனம செய்துள்ளனர்.

## 35. திருத்தஞ்சை மாமணிக் கோயில்

*எம்பிரான் எந்தை என்னுடைச்சுற்றம் எனக்கரசு*
*என்னுடை வாணாள்*
*அம்பினால் அரக்கர்வெருக்கொள நெருக்கி அவருயிர் செகுத்த*
*எம்அண்ணல்*
*வம்புலாம் சோலை மாமதிள் தஞ்சைமாமணிக்கோயிலே வணங்கி*
*நம்பிகாள்! உய்யநான் கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்*
*நாமம்.*

- பெரிய திருமொழி 1 1 6

இத்தலம் தஞ்சை நகரைத் தாண்டியதும் அமைந்துள்ள வெண்ணாற்றங்கரை மீது அமைந்துளளது. இந்த வெண்ணாற்றங்கரையில் இபபோது மூன்று கோவில்கள் உள்ளன. மூன்று தலங்கள் இருந்தாலும் ஒரு திவ்யதேசமாகவே மங்களாசாசனம் செய்யப்படடுள்ளது.

## 1. திருத்தஞ்சை மாமணிக்கோயில்

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | நீலமேகப் பெருமாள் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | செங்கமலவல்லி |
| **தீர்த்தம்** | : | அம்ருத தீர்த்தம், கன்னிகா புஷ்கரிணி, வெண்ணாறு. |
| **விமானம்** | : | ஸௌந்தர்ய விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | பராசரமுனி |

## 2. மணிக்குன்றம்

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | மணிக்குறைப் பெருமாள், கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் |
| **தாயார்** | : | அம்புஜவல்லி |
| **தீர்த்தம்** | : | ஸ்ரீராம தீர்த்தம் |
| **விமானம்** | : | மணிக்கூட விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | மார்க்கண்டேயர். |

## 3. தஞ்சையாளி நகர்

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | நரஸிம்மன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | தஞ்சை நாயகி |
| **தீர்த்தம்** | : | ஸூர்ய புஷ்கரிணி - ஸ்ரீராம தீர்த்தம் |
| **விமானம்** | : | வேதஸுந்தர விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | மார்க்கண்டேயர் |

**சிறப்புக்கள்:**

1. மூன்று கோவில்களிலும் உத்சவர் பெயர் ஸ்ரீமந் நாராயணன்.
2. பகவான் தஞ்சக யானையைப் பிளக்க நரஸிம்மாவதாரம் எடுத்து நகங்களால் குத்திக் கிழித்தபோது, தஞ்சகன் வேண்டிக் கொண்டபடி நரஸிம்ம உருவத்தோடு ஸேவை சாதிப்பதால் "தஞ்சாபுரி" அல்லது தஞ்சை என்ற பெயர் உண்டாயிற்று.

3. தஞ்சையைப் பார்த்தபடி விக்ரஹங்கள் அமைந்துள்ளதால் 'தஞ்சையைக் காத்தருளும் தெய்வம்" என்று வழங்கப்படுகிறது.

4. பூதத்தாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 36. திருமணி மாடக்கோயில் (திருநாங்கூர்)

*இழையாடு கொங்கைத்தலை நஞ்சம் உண்டிட்டு*
*இளங்கன்று கொண்டு விளங்காய் எறிந்து*
*தழைவாடவன் தாள்குருந்தம் ஓசித்துத்*
*தடந்தாமரைப் பொய்கைபுக்கான் இடந்தான்*
*குழையாட வல்லிக்குலமாட மாடே*
*குயில்கூவ நீடுகொடி மாடம் மல்கு*
*மழையாடு சோலை மயிலாலுநாங்கூர்*
*மணிமாடக் கோயில் வணங்கு என் மனனே!*

- **பெரிய திருமொழி** - 3-8-5

இத்தலம் திருநாங்கூரிலேயே உள்ளது. திருநாராயணப் பெருமாள் கோயில் என்று ப்ரஸித்தம்.

**மூலவர்** : நாராயணன், நந்தா விளக்கு - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**உற்சவர்** : நாராயணன் - அளத்தறகரியான்

**தாயார்** : புண்டரீக வல்லித்தாயார்

**தீர்த்தம்** : இந்த்ர புஷ்கரிணி, ருத்ர புஷ்கரிணி

**விமானம்** : ப்ரணவ விமானம்

**ப்ரத்யக்ஷம்** : இந்திரன், ஏகாதச ருத்ரர்கள்

**சிறப்புக்கள்:**

1. திருநாங்கூர் கருடசேவைத் திருவிழா இத்தலத்திற்கு முன்புதான் நடைபெறுகிறது. அனைத்து எம்பெருமான்களும் இங்கு எழுந்தருள திருமங்கையாழ்வார்

ஒவ்வொரு பெருமானையும் வலம் வந்து மங்களாசாசனம் செய்யும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

2. பிறகு வீதி புறப்பாடு - பயிரை ஆழ்வார் மிதித்தால், பயிர் நன்றாக வளரும் என்பது ஆழ்ந்த நம்பிக்கை.

3. இக்கோயிலுக்கு திருக்கோட்டியூர் நம்பி விஜயம் செய்துள்ளார்.

4. திருமந்திரம் உபதேசித்த பெருமாளே இங்கு எழுந்தருளியிருப்பதால், இது பத்ரிக்கு சமமான ஸ்தலம்.

5. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 37. திருவைகுந்த விண்ணகரம் (திருநாங்கூர்)

*சலம்கொண்ட இரணியனது அகல்மார்வம் கீண்டு*
*தடங்கடலைக் கடைந்து அமுதம்கொண்டு கந்தகாளை*
*நலங்கொண்ட கருமுகில்போல் திருமேனி அம்மான்*
*நாள்தோறும் மகிழ்ந்து இனிது மருவியுறைகோயில்*
*சலம்கொண்டு மலர்சொரியும் மல்லிகை ஒண்செருந்தி*
*சண்பகங்கள் மணநாறும் வண்பொழிலினூடே*
*வலங்கொண்டு கயலோடி விளையாடு நாங்கூர்*
*வைகுந்த விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே!*

- **பெரிய திருமொழி** -3-9-1

இத்தலம் திருநாங்கூரிலேயே உள்ளது. பரமபதத்தில் சங்கு சக்கரங்களுடன் எழுந்தருளியுள்ள வைகுண்டநாதனே இத்தலத்தில் எழுந்தருளியுள்ளான்.

**மூலவர்** : வைகுந்தநாதன், தாமரைக் கண்ணுடைய பிரான் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : வைகுந்தவல்லி

**தீர்த்தம்** : லக்ஷ்மி புஷ்கரிணி, உதங்க புஷ்கரிணி, விரஜா தீர்த்தம்

**விமானம்** . அனந்த ஸத்யவர்த்தக விமானம்

**ப்ரத்யக்ஷம்** : உபரிசிரவஸு, உதங்க மஹரிஷி

**சிறப்புக்கள்:**

1. பரமபதத்திற்கு சமமான ஸ்தலம்.
2. பரமபதத்திலுள்ள விரஜா நதியே இங்கு விரஜை தீர்த்தமாக உள்ளது.
3. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பட்டுள்ளது.

## 38. திருஅரிமேய விண்ணகரம் (திருநாங்கூர்)

*திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழத்*
*தீவினைகள் போயகல அடியவர்கட்கு என்றும்*
*அருள்நடந்து இவ்வேழுலகத்தவர் பணிய வானோர்*
*அமர்ந்தேத்த இருந்தஇடம் பெரும்புகழ் வேதியர்வாழ்*
*தரும்இடங்கள் மலர்கள் மிகுகைதைகள் செங்கழுநீர்*
*தாமரைகள் தடங்கள்தொறும் இடங்கள்தொறும் திகழ*
*அருவிடங்கள் பொழில்தழுவி எழில்திகழும் நாங்கூர்*
*அரிமேய விண்ணகரம் வணங்கு மடநெஞ்சே!*

- **பெரிய திருமொழி** 3-10-1

இதுவும் நாங்கூரிலேயே அமைந்துள்ள திவ்ய தேசமாகும். சீர்காழியிலிருந்து 8 கி.மீ தொலைவில் உள்ளது. குடமாடுகூத்தர் கோயில் என்றால்தான் பலருக்கும் தெரியும்.

**மூலவர்** : குடமாடு கூத்தன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : அமருத கடவல்லி

**தீர்த்தம்** : கோடி தீர்த்தம், அம்ருத தீர்த்தம்

**விமானம்** : உச்சசருங்க விமானம்

**ப்ரத்யக்ஷம்** : உதுங்க முனிவர்.

**சிறப்புக்கள்:**

1. தைமாதம் அமாவாசைக்கு மறுநாள் கருடஸேவை மிக விசேஷம்

2. பகைவர்களை அழிக்கும் பொருட்டு எம்பெருமான் இங்கு எழுந்தருளியிருப்பதாக ஐதீகம்.

3. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 39. திருவாலி - திருநகரி

*நீர்வானம் மண்எரிகாலாய் நின்றநெடுமால் தன்*
*தாராய நறுந்துளவம் பெருந்தகையேற்கு அருளானே!*
*சீராரும் வளர்பொழில் சூழ் திருவாலிவயல் வாழும்*
*கூர்வாய சிறுகுருகே! குறிப்பறிந்து கூறாயே.*

- **பெரியதிருமொழி** - 3-6-3-

திருவாலி தனியாகவும், திருநகரி தனியாகவும் 4 கி.மீ தொலைவில் உள்ளது. திருநாங்கூரிலிருந்து 10 கி.மீ தொலைவில் உள்ளது. இவ்விரு ஸ்தலங்களும் தனித்தனியாக இருந்தாலும், ஒரே ஸ்தலமாகத்தான் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

### திருவாலி

**மூலவர்** : அழகிய சிங்கர் - லக்ஷ்மி நரஸிம்ஹர் - வயலாளி மணவாளன் - வீற்றிருந்த திருக்கோலம் - மேற்கே-- திருமுக மண்டலம்.

**தாயார்** : அம்ருத கடவல்லி

**தீர்த்தம்** : இலாக்ஷணி புஷ்கரிணி

**விமானம்** : அஷ்டாக்ஷர விமானம்

**ப்ரத்யக்ஷம்** : திருமங்கையாழ்வார், அலாதி நிகஞ்சம ப்ரஜாபதி

**சிறப்புக்கள்:**

1. திருமங்கையாழ்வாரின் தேவி குமுதவல்லி நாச்சியார் வளர்க்கப்பட்ட இடம்.

2. இத்தலத்திற்கு லக்ஷ்சி நரசிம்ம க்ஷேத்ரம் என்று பெயர். லக்ஷ்மி தேவியுடன் நரஸிம்ம ரூபமாய் எழுந்தருளியிருப்பதால் இப்பெயர் உண்டாயிற்று.

3. திருமங்கையாழ்வாராலும், குலசேகராழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## திருநகரி

திருவாலியிலிருந்து சுமார் 5 கி.மீ தூரத்தில் உள்ளது. சீர்காழியிலிருந்து பூம்புகார் செல்லும் பேருந்துகள் திருநகரி வழியாகச் செல்கின்றன.

**மூலவர்** : வேதராஜன் (வயலாளி மணவாளன்) - வீற்றிருந்த திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்.

**உத்சவர்** : கல்யாண ரெங்கநாதன்

**தாயார்** : அம்ருதவல்லி

**ப்ரத்யக்ஷம்** : திருமங்கையாழ்வார்

**சிறப்புக்கள்:**

1. இது திருமங்கையாழ்வார் அவதரித்த ஸ்தலம் (பக்கத்தில் திருக்குறையலூரில்) இவர் ஆராதித்த 5 நரஸிம்மர்களில் இரண்டு மூர்த்திகள் இங்கே உள்ளனர்.
2. கோயிலுக்குள் திருமங்கையாழ்வாருக்கு தனி சந்நிதி உள்ளது. இங்கு ஆழ்வார் வேடனுக்கு உண்டான வேஷத்தில் காட்சி அளிக்கிறார்.
3. ஆழ்வாரின் பக்கத்தில் அவர் ஆராதித்து வந்த "சிந்தனைக்கினியான்" என்ற மிகச்சிறிய உத்சவ மூர்த்தி அமர்ந்திருக்கிறார்.
4. வேடுபறி உத்சவம் ஆண்டுதோறும் இங்கு சிறப்பாக நடைபெறுகின்றது.
5. கல்யாண திருக்கோலத்தில் பகவான் காட்சி அளித்ததால் கல்யாண ரெங்கநாதர் என்ற பெயர் ஏற்பட்டது
6. திருமங்கையாழ்வாராலும், குலசேகர ஆழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலங்கள்.

## 40. திருநந்திபுர விண்ணகரம் (நாதன் கோயில்)

*தந்தை மனமுந்து துயர்நந்த இருள்வந்தவிறல் நந்தன்மதலை*
*எந்தையிவனென்று அமரர்கந்தமலர் கொண்டுதொழ நின்றநகர்தான்*
*மந்தமுழவோசை மழையாகவெழுகார் மயில்களாடு பொழில்சூழ்*
*நந்திபணி செய்தநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே!*

- **பெரிய திருமொழி** - 5-10-7

இத்தலம் கும்பகோணத்திற்கு தெற்கே சுமார் 4 கி.மீ தொலைவில் உள்ளது. உற்சவரின் பெயர் ஜெகந்நாதன். எனவேதான் இவ்வூர் நாதன் கோயில் என்றாயிற்று. திருமகளின் எண்ணத்திற்கேற்ப இசைந்து பிராட்டியை நெஞ்சில் ஏற்றுக் கொண்டதால் பெருமாளுக்கு போக ஸ்ரீனிவாசன் என்று பெயர். கிழக்கு நோக்கி அமர்ந்து தவம் செய்த தேவியை பெருமான் எதிர்கொண்டு அழைத்ததால் இங்கே எம்பெருமான் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். ஐந்து நிலை ராஜகோபுரம். நந்தி கடுந்தவம் செய்ய, மஹா விஷ்ணு தோன்றி, சாபம் தீர்க்க, நந்தியின் விருப்பப்படி அதன் பெயராலேயே நந்திபுர விண்ணகரம் என்று பெயர் ஏற்பட்டது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | நாதநாதன், விண்ணகரப் பெருமாள், போக ஸ்ரீனிவாசன் - வீற்றிருந்த திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம். |
| **உத்சவர்** | : | ஜெகந்நாதன் |
| **தாயார்** | : | செண்பகவல்லித் தாயார் |
| **தீர்த்தம்** | : | நந்திதீர்த்த புஷ்கரிணி |
| **விமானம்** | : | மந்தார விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | நந்தி, சிபிச்சக்கரவர்த்தி, மார்க்கண்டேயர் |

**சிறப்புக்கள்:**

1. ஸந்நிதியின் இடது பக்கம் நந்தி உள்ளது. தவம் செய்து சாப விமோசனம் பெற்ற ஸ்தலமாதலால் நந்திபுரம் என்றும் பகவானுக்கு நந்திநாதன் என்றும் பெயர்.

2. இத்தலம் வானமாமலை ஆதிக்கத்திற்கு உட்பட்டது.

3. இப்பகுதியின் மண் மிகவும் பிரசித்தமானது.

4. நாச்சியாருக்கும், ஆஞ்சநேயருக்கும் தனி சந்நிதிகள் உள்ளன. ராமானுஜர், ஆண்டாளுக்கும் சந்நிதிகள் உள்ளன.

5. புறாவைக் காப்பாற்ற, தராசுத்தட்டில் எடைக்கு சமமாக தானே எதிர்த்தட்டில் உட்கார்ந்த அதிசயத்தைக் காண கிழக்கே இருந்த பெருமாள் மேற்கு முகமாக ஆனார் என்றும் கூறுவார்கள்.

6. திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

# பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் -18

## திருக்கோல ஸ்தலங்கள் 41 - 58

| நின்ற கோலம் | அமர்ந்த கோலம் | கிடந்த கோலம் |
|---|---|---|
| கிழக்கு | கிழக்கு | கிழக்கு |
| 41. திருமாலிருஞ்சோலை (அழகர்கோவில்) | 51. திருக்கூடல் (கூடலழகர், மதுரை) | 55. திருக்கோஷ்டியூர் |
| 42. திருமெய்யம் | 52. திருச்சிரீவரமங்கை (வானமாமலை, நாங்குனேரி) | 56. ஸ்ரீவில்லிப்புத்தூர் |
| 43. திருப்புல்லாணி | 53. திருப்பேரை (தென்திருப்பேரை) | 57. திருப்புளிங்குடி |
| | | 58. திருக்கோளுர். |
| 44. திருத்தண்கால் (திருத்தங்கல்) | 54. திருவரகுணமங்கை | |
| 45. திருமோகூர் | | |
| 46. திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி) | | |
| 47. ஸ்ரீவைகுண்டம் | | |
| 48. திருக்குளந்தை (பெருங்குளம்) | | |
| 49. திருக்குறுங்குடி | | |
| 50. திருத்தொலைவில்லிமங்கலம் | | |



தர்பசயனப்பெருமாள் - திருப்புல்லாணி



ஸ்ரீ இராமாநுஜர் - ஸ்ரீ பெரும்பூதூர்

# பாண்டிய நாட்டுத் திருப்பதிகள்



## 41. திருமாலிருஞ்சோலை (அழகர் கோவில்)

*இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப்பெறில் நான்*
*ஒன்று நூறாயிரமாக்கொடுத்துப் பின்னும் ஆளும் செய்வன்*
*தென்றல் மணங்கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள்*
*நின்ற பிரான் அடியேன் மனத்தேவந்து நேர் படிலே -*

**- நாச்சியார் திருமொழி** 9-7

இத்தலம் மதுரைக்கு வடக்கே 20 கி.மீ. தொலைவில் உள்ளது. மதுரை நகரில் இருக்கும் எம்பெருமானுக்கு கூடலழகர் என்று திருநாமம். இவருக்கு அழகர், கள்ளழகர் என்று திருநாமங்கள் உண்டு. அச்சோ ஓரழகிய வா என்பது திருமங்கை மன்னனின் மங்களாசாசனம். இங்குள்ள சுற்றுப்புற மலைகள் பசு போலவும், இந்த மலை ரிஷபம் போலவும் காட்சியளிப்பதால் "வ்ருஷபாத்ரி" என்ற பெயர் ஏற்பட்டது. "வனகிரி" என்ற பெயரும் உண்டு.

த்ரிவிக்ரமாவதாரத்தின் பொழுது, ப்ரும்மா பகவான் பாதத்தில் கமண்டலத்தினால் தீர்த்தம் சேர்த்து, பகவான் தண்டை சலங்கையில் பட்ட நீர் தெரித்து இங்கே விழுந்து நதியாகப் பிரவகித்தபடியால் சிலம்பாறு என்ற பெயர் உண்டாயிற்று. இந்த சிலம்பாறுதான் நூபுர கங்கையாகும். இந்த தீர்த்தமே எப்போதும் திருமஞ்சனத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. இந்நதி இகபர சுகத்தைத் தருவதால் இந்த நதிக்கு "இஷ்ட சித்தி" என்ற பெயரும் உண்டு.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | அழகர், கள்ளழகர், மாலாங்காரர் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | சுந்தரவல்லி - ஸ்ரீதேவி |
| **உத்சவர்** | : | சுந்தரராஜன் - பேரழகு வாய்ந்தவர் - பஞ்சாயுதங்களுடன் திகழ்கின்றார். |
| **தீர்த்தம்** | : | நூபுர கங்கை |
| **விமானம்** | : | சோமசுந்தர விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | மலயத்வஜ பாண்டியன், தர்மதேவதை |

**சிறப்புகள் :**

1. இங்கு பாயும் சிலம்பாறு ஒரு புண்ணிய நதி .
2. சித்திரை மாதப் பௌர்ணமி அன்று வரும் சித்திரைத் திருவிழா மிகவும் முக்கியமானது.
3. அழகர் ஆற்றில் இறங்கும் விழா மிகவும் பிரசித்தமானது. இத்திருவிழா 9 நாட்கள் நடைபெறும்.
4. பதினெட்டாம்படி கறுப்பு என்ற தேவதை காக்கும் காவல் தெய்வம் கருப்பண்ண சுவாமியாவான்.
5. இங்கு ராயர் கோபுரம் உண்டு.
6. பெரியாழ்வார், நம்மாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் - ஆகிய 6 ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 42. திருமெய்யம்

*நிலையாளா ! நின்வணங்க வேண்டாயே யாகிலும் என்*
*முலையாள ஒருநாள் உன் அகலத்தால் ஆளாயே?*
*சிலையாளா ! மரமெய்த திறலாளா ! திருமெய்ய*
*மலையாளா ! நீயாள வளையாள மாட்டோமே.*

- **பெரிய திருமொழி 3-6-9**

இத்தலம் புதுக்கோட்டையிலிருந்து 20 கி.மீ தொலைவில் உள்ளது. இது ஓர் அழகிய வேலைப்பாடுள்ள குடைவரைக் கோவில். இந்தப்பெருமாள் ஸ்ரீரங்கம் ரங்கநாதனை விடப்பெரிய திருமேனியுடன் சயனித்திருக்கிறார். அவற்றில் ப்ரம்மா முதலிய ஸகல தேவர்களும் செதுக்கப்பட்டுள்ளனர். ஆதிசேஷன் இந்த ஸ்தலத்தை பாதுகாப்பதாக ஐதீகம். ஆதிசேஷன் பாதுகாப்பில் இருந்த பெருமாளை திருட்டுத்தனமாக அசுரர்கள் தாக்க வந்ததாகவும், தாயாரை அபகரிக்க வந்த அரக்கர்களை ஆதிசேஷன் விஷக்காற்றினால் விரட்டிக் கொன்றதாகவும், பின்பு பெருமாள் சயனித்திருக்கையில் அபவாதம் செய்துவிட்டோம் என சஞ்சலம்

கொண்டதாகவும் பெருமாள் திருக்கரங்களால் அமர்த்தி ஆற்றுவித்ததாகவும் வரலாறு. எம்பெருமான் கிடந்த நின்ற திருக்கோலங்களில் காட்சி தருகிறார். ஆதிசேஷன் விஷக்காற்றை விட்டு அசுரர்களைக் கொன்றதாகவும் ஸ்தல வரலாறு.

**மூலவர்** : ஸத்யகிரிநாதன் - கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்

**உத்ஸவர்** : மெய்யப்பன்

**தாயார்** : உய்யவந்த நாச்சியார், உஜ்ஜீவனத் தாயார்

**தீர்த்தம்** : கதம்ப புஷ்கரிணி, ஸத்திய தீர்த்தம்.

**விமானம்** : ஸத்யகிரி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ஸத்ய தேவதைகள்

**சிறப்புகள் :**

1. ஆதிசேஷன் தனக்கு வேதங்களில் கூறப்பட்டுள்ள சர்வ ஞானமும் தெரிய வேண்டி பிரார்த்தித்த தலம்.
2. பல்லவ மன்னர்களின் குடைவரைக் கல் கோவில்கள் என்பதன் அடிப்படையில் வருவதாகும். பல்லவ மன்னன் இரண்டாம் நரசிம்மவர்மனால் கட்டப்பட்டதாகும்.
3. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 43. திருப்புல்லாணி

*பரவிநெஞ்சே ! தொழுதும் எழுபோய் அவன் பாலமாய்*
*இரவும் நாளும் இனிக்கண் துயிலாதிருந்து என் பயன்?*
*விரவி முத்தம் நெடுவெண் மணல் மேற்கொண்டு வெண்திரை*
*புரவியென்னப் புதம் செய்து வந்துந்து புல்லாணியே.*

**- பெரிய திருமொழி 9-3-7**

இத்தலம் ராமநாதபுரத்திலிருந்து தெற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலத்தை வடமொழியில் தர்ப்பசயனம் என்று கூறுவர். தமிழில் புல்லணை. புல்லணை என்றால் திருப்புல் - தர்ப்பைப்புல் - மீது அணைந்து ராமன் பள்ளிகொண்டதால்

புல்லணை என்றும், தர்ப்பைப்புற்கள் அடர்ந்தோங்கி வளரும் காடு என்றும் பொருள்படும்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | ஆதிஜெகந்நாதன் - தெய்வச்சிலையார் - நின்ற திருக்கோலம் - சக்ரவர்த்தி திருமகன் - தர்ப்ப சயனம் - கிழக்கு நோககி திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | கல்யாண வல்லி, பத்மாஸநி |
| **உத்ஸவர்** | : | கல்யாண ஜெகந்நாதன் |
| **தீர்த்தம்** | : | ஹேம தீர்த்தம், சக்ர தீர்த்தம், ராம தீர்த்தம் |
| **ஸ்தல விருக்ஷம்** | : | அஸ்வத்த வ்ருக்ஷம் |
| **விமானம்** | : | கல்யாண விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | அச்வத்த நாராயணன், புல்லாரண்யமுனி, சமுத்திரராஜன் |

**சிறப்புகள்:**

1. தர்ப்பசயன ராமனின் ஸந்நிதியில் லக்ஷ்மணன் ஆதிசேஷனாக நின்று கைங்கர்யம் செய்கிறார்.
2. இங்குள்ள ஸ்தல வ்ருக்ஷம் அரசமரம் மிகச் சக்தி வாய்ந்தது.
3. ஆதிஸேது என்று அழைக்கப்படும் சேதுக்கரை இங்கிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது.
4. இக்கடற்கரையில் அனுமான் தென்திசை நோக்கி கூப்பிய கரங்களுடன் ராம த்யானத்தில் ஆழ்ந்துள்ள காட்சி மிகவும் எழில் வாய்ந்ததாகும்.
5. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.
6. இவ்விடமிருந்து தான் அனுமன் கடல் தாவி இலங்கை சென்றான்.

## 44. திருத்தண்கால் - (திருத்தங்கல்)

*பொங்கார் மெல்லிளங்கொங்கை பொன்னே பூப்பப்*
*பொருகயல் கண் நீரரும்பப்போந்துநின்று*
*செங்கால மடப்புறவம் பெடைக்குப் பேசும்*
*சிறு குரலுக்கு உடலுருகிச்சிந்தித்து ஆங்கே*
*தண்காலும் தண்குடந்தை நகரும் பாடித்*
*தண்கோவலூர் பாடியாடக் கேட்டு*
*நங்காய் ! நங்குடிக்கு இதுவோ நன்மை? என்ன*
*நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே.*

- **திருநெடுந்தாண்டகம் - 17**

இத்தலம் சிவகாசியிலிருந்து விருதுநகர் செல்லும் சாலையில் 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

ஸ்ரீ தேவி இத்தலத்தில் தவம் செய்து, பகவான் உகந்து எல்லா மஹரிஷிகளையும் விட எனக்கு நீயே மிகவும் பிரியாமானவள் என்று கூறி ஏற்றுக் கொண்டார். திருமகள் தங்கி தவமிருந்ததால் திருத்தங்கல் என்று பெயர் உண்டாயிற்று.

**மூலவர்** : நின்ற நாராயணன், கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்சவர்** : திருத்தண்காலப்பன், நின்ற திருக்கோலம்.

**தாயார்** : செங்கமலத்தயார், அன்னநாயகி (ஸ்ரீதேவி) அனந்த நாயகி (நீளாதேவி), அம்ருதநாயகி (பூமாதேவி) என்ற திருநாமங்களும் உண்டு.

**தீர்த்தம்** : பாபவிநாச தீர்த்தம்

**விமானம்** : தேவசந்த்ர விமானம்

**ப்ரத்யக்ஷம்** : சல்ய பாண்டியன், ஸ்ரீவல்லபன், புலி

**சிறப்புகள்** :

1. கோயில் குன்றின்மேல் உள்ளது. பெருமானின் வலதுபுறம் ஸ்ரீதேவி, நீளாதேவியும், இடதுபுறம் பூதேவி, ஜாம்பவதியும் உள்ளனர்.

2. மூலவர், உத்சவர் திருமேனிகள் யாவும் வர்ணம் பூசப்பட்ட சுதையால் ஆனவை. எனவே இங்கு பெருமாளுக்குத் திருமஞ்சனம் கிடையாது.

3. இங்கு கருடாழ்வார் சர்ப்பத்துடனும், அம்ருத கலசத்துடனும் காணப்படுகிறார்.

4. சந்த்ரகேது என்ற மன்னன் ஏகாதசி உபவாசம் இருந்து, துவாதசி பாரணைக்கு முன் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்ததால், புலியாகப் பிறந்து, இத்தலம் வந்து பூர்வஜன்ம ஞாபகம் ஏற்பட்டு பகவானை பூஜை செய்து மோக்ஷம் அடைந்த ஸ்தலம்

5. ஸ்ரீ கிருஷ்ணனின் பேரன் அநிருத்தன் உஷையை மணந்தது இத்தலத்தில்தான்.

6. பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் - இருவராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 45. திருமோகூர்

*மணித் தடத்தடிமலர்க் கண்கள் பவளச் செவ்வாய்*
*அணிக்கொள்நால் தடந்தோள் தெய்வம் அசுரரை என்றும்*
*துணிக்கும் வல்லரட்டன் உறைபொழில் திருமோகூர்*
*நணித்து நம்முடை நல்லரண் நாம் அடைந்தனமே.*

- **திருவாய்மொழி** 10-1-9

இத்தலம் மதுரைக்கு கிழக்கே 12 கி.மீ. தொலைவில் ஒத்தக்கடை அருகே உள்ளது.

பெருமாள் மோகினி அவதாரம் கொண்டு, திருப்பாற்கடலில் கடையப்பட்ட அமிர்தத்தை இவ்விடத்திலிருந்து தேவர்கட்கு வழங்கினமையால் "மோஹினி க்ஷேத்திரம்" என்றாயிற்று, தூய தமிழில் மோஹினி யூராகி, மோஹியூராகி இறுதியில் திருமோகூராயிற்று.

**மூலவர்** : காளமேகப் பெருமாள் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**உத்சவர்** : திருமோகூர் ஆப்தன் (பஞ்சாயுதங்களுடன்)

**தாயார்** : மோகூர்வல்லி - மோகவல்லி, மோஹன வல்லி, மேகவல்லி

**தீர்த்தம்** : க்ஷீராப்தி புஷ்கரிணி

**விமானம்** : கேதகி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பிரம்மா, இந்திரன், தேவர்கள்

**சிறப்புகள்** :

1. பள்ளிகொண்ட பெருமாள் சந்நிதி ஒன்றும் உண்டு.
2. இங்குள்ள ஆதிசேஷனுக்கும் தங்க கலசங்கள் சாத்தப்பட்டுள்ளது ஒரு தனிச்சிறப்பாகும்.
3. சக்கரத்தாழ்வார் சந்நிதி வெகு சிறப்புடையது.
4. திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ள ஸ்தலம்.

## 46. திருக்குருகூர் ஆழ்வார்திருநகரி

*விளம்பும் ஆறுசமயமும், அவையாகியும் மற்றும் தன்பால்*
*அளந்து காண்டற் கரியனாகிய, ஆதிப் பிரானமரும்*
*வளம் கொள் தண்பணை சூழ்ந்தழகாய திருக்குருகூரதனை*
*உளம் கொள் ஞானத்து வைம்மின், உம்மை உய்யக்கொண்டு போகுறிலே*

**- திருவாய்மொழி 4-10-9**

இத்தலம் திருநெல்வேலி - திருச்செந்தூர் ரயில் பாதையில் ஆழ்வார் திருநகரி ஸ்டேஷனிலிருந்து 1.5 கி.மீ. தொலைவில் உள்ளது.

திருமாலை நோக்கி கடுந்தவம் இருந்த பிரம்மாவுக்கு திருமாலே குருவாக வந்து உபதேசித்ததால், மிக மகிழ்ந்த பிரம்மன் "குருகாத்தர மதர்ச்சனம்" என்றருளியதால், அதன் நினைவாக இவ்வூருக்கு குருகூர் என்ற பெயர் விளங்க வேண்டுமென பிரம்மன் வேண்டிக் கொண்டதால் அது முதல் "குருகூர்" ஆயிற்று.

மூலவர் : ஆதிநாதன் - பொலிந்து நின்ற பிரான் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

தாயார் : ஆதிநாதவல்லி - குருகூர் வல்லி இருவருக்கும் தனித்தனி கோயில்கள்.

தீர்த்தம் : பிரம்ம தீர்த்தம், தாமிரபரணி தீர்த்தம்.

விமானம் : கோவிந்த விமானம்

ப்ரத்யக்ஷம் : பிரமன், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார்

**சிறப்புகள்:**

1. நம்மாழ்வார் சடகோபனாக அவதரித்து அனைத்துயிர் கட்டும் நன்மை பயக்க புளியமரப் பொந்தினில் அமர்ந்த திருக்கோலம். இங்கு ஆழ்வார் பொந்தில் வீற்றிருந்த புளியமரம் காட்சியளிக்கிறது.

2. ஸ்ரீரங்கத்தில் உள்ளது போல இங்கும் அரையர் ஸேவை நடக்கிறது.

3. இத்தலத்தில் தங்கி எல்லா எம்பெருமான்களையும் (நவ திருப்பதி பெருமாள்) சுலபமாக சேவிக்கலாம்.

4. நம்மாழ்வார் ஹம்ஸ வாகனத்தில் எழுந்தருளுவது விசேஷம்.

5. லக்ஷ்மி பெருமாளை அடைய பிரார்த்திக்க, பகவான் ப்ரம்மசர்ய யோகத்தில் இருந்ததால், லக்ஷ்மியை மகிழமாலையாக மார்பில் தரித்துக் கொண்டதாக ஐதீகம்.

6. ஆதிப்பிரான் சந்நிதிக்கு முன்புறம் அமைந்த கருட மண்டபத்தை மணவாள மாமுனிகளே நிறுவினார்.

7. இங்கு சுயம்புவாக தோன்றிய பெரிய திருமேனியுடைய மூலவரின் பாதங்கள் பூமிக்குள் இருப்பதாக ஐதீகம்

8. நம்மாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 47. ஸ்ரீவைகுண்டம்

*எங்கள் கண்முகப்பே உலகர்களெல்லாம் இணையடி*
*தொழுதெழுதிறைஞ்சி*
*தங்களன்பாரத்தமது சொல்வலைத்தால் தலைத்தலைச்சிறந்து பூசிப்ப*
*திங்கள் சேர்மாடத் திருப்புளிங்குடியாய் ! திருவைகுந்தத்துள்ளாய் !*
*தேவா !*
*இங்கண் மாஞாலத்தினுளும் ஒருநாள் இருந்திடாய்*
*வீற்றிடங்கொண்டே*

- **திருவாய்மொழி 9-2-8**

இத்தலம் திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் செல்லும் சாலையில் உள்ளது. திருநெல்வேலியில் தங்கி நவதிருப்பதிகளையும் ஸேவிக்கலாம்.

வைகுண்டத்திலிருந்து எழுந்த திருக்கோலத்தில் இவ்விடம் பெருமான் காட்சி தந்தமையாலும், இதே திருக்கோலத்தில் பக்தர்களுக்கு இவ்விடத்தில் நின்று அருள வேண்டுமென்று பிரம்மன் வேண்டியதால், இத்தலத்திற்கு ஸ்ரீவைகுண்டம் என்ற பெயர் உண்டாயிற்று.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | ஸ்ரீவைகுண்டநாதன், கள்ளபிரான் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | வைகுந்தவல்லி, பூதேவி |
| **தீர்த்தம்** | : | ப்ருகு தீர்த்தம், தாமிரபரணி தீர்த்தம் |
| **விமானம்** | : | சந்த்ர விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | பிரும்மா, இந்திரன் |

**சிறப்புகள்:**

1. ஆதிசேஷன் குடைபிடிக்க, பெருமாள் நின்ற திருக்கோலத்தில் இருப்பது தனிச்சிறப்பு
2. காலதூஷகன் என்ற திருடன் தான் திருடிய பொருளில் பாதியை வைகுண்டநாதனுக்கு சமர்ப்பித்ததாகவும், ஒரு சமயம் அரண்மனையில் திருடும்போது பிடிபட்டதால்,

வைகுண்டநாதனை த்யானம் செய்ய, பகவானும் திருடன் வேடம் பூண்டு அரசனுக்கு தத்துவங்களை உபதேசித்து, காலதூஷகன் திருடனல்ல, யோகி என்று அரசன் நினைக்க, பகவான் ப்ரத்யக்ஷமாகி திருடனுக்கும் அரசனுக்கும் நட்பு உண்டாக்கி, அரசன் ப்ரார்த்தனைப்படி பகவான் "கள்ளபிரான்" என்ற திருநாமம் பெற்றார்.

3. ஸோமகன் என்னும் அசுரன் சதுர்முகனுடைய ஞானத்தை அபகரித்ததாகவும், ப்ரம்மா இவ்விடத்தில் தவம் செய்து, பகவான் ப்ரத்யக்ஷமாகி, அசுரன் அபஹரித்த ஸ்ருஷ்டி ஸாமர்த்திய ஞானத்தை கொடுத்ததாக வரலாறு.

4. நம்மாழ்வாரால் மட்டும் மங்களசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 48. திருக்குளந்தை (பெருங்குளம்)

*கூடச்சென்றேன் இனியென் கொடுக்கேன்? கோல்வளை நெஞ்சத்*
*தொடக்கமெல்லாம்*
*பாடற்றொழிய இழந்துவைகல் பல்வளையார் முன் பரிசழிந்தேன்*
*மாடக்கொடிமதிள் தென்குளந்தை வண்குடபால் நின்ற*
*மாயக்கூத்தன்*
*ஆடற்பறவையுயர்த்த வெல்போர் ஆழிவலவனை ஆதரித்தே*

- **திருவாய்மொழி** 8-2-4

இத்தலம் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வடகிழக்கில் 11 கி.மீ. தூரம் ஏரல் செல்லும் வழியில் உள்ளது. பெருங்குளம் என்று சொன்னால்தான் எல்லோருக்கும் எளிதில் புரியும்.

வேத சாரன் என்ற அந்தணனின் மகளான கமலாவதி கடவுளையே கணவனாக அடைய தவம் புரிந்து, மஹாவிஷ்ணு ப்ரத்யக்ஷமாகி, அவளை விவாஹம் செய்து கொண்டதாகவும் பாலிகை தவம் செய்த இடமாதலால் "பாலிகை வனம்" என்று பெயர் ஏற்பட்டதாகவும் வரலாறு.

சோரனான அஸ்மஸாரன் மீது நர்த்தனம் புரிந்ததால் இப்பெருமானுக்கு "ஸோரநாதன்" என்ற திருநாமம் ஏற்பட்டது. அதையே தூய தமிழில் மாயக்கூத்தன் என்கின்றனர்.

**மூலவர்** : சோரநாதன், ஸ்ரீநிவாசன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**உதசவா** : மாயககூததன

**தாயார்** : குளந்தைவல்லி நாச்சியார், அலர்மேல்மங்கைத் தாயார்.

**தீர்த்தம்** : பெருங்குளம்

**விமானம்** : ஆனந்தநிலய விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ப்ருஹஸ்பதி, வேதசாரன்

**சிறப்புகள்:**

1. கருடனும் உத்ஸவராகப் பெருமாள் பக்கத்தில் எழுந்தருளியிருக்கிறார்.
2. பெருமாள் ஸ்ரீதேவி, பூமாதேவி, நீளாதேவி சமேதராகக் காட்சி அளிக்கிறார்.
3. நம்மாழ்வாரால் மட்டும் ஒரே ஒரு பாடலால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திவ்யதேசம்.

## 49. திருக்குறுங்குடி

*கரண்டமாடு பொய்கையுள் கரும்பனைப் பெரும்பழம்*
*புரண்டு வீழவாளைபாய் குறுங்குடி நெடுந்தகாய் !*
*திரண்ட தோளிரணியன் சினங்கொளாகமொன்றையும்*
*இரண்டு கூறு செய்துகந்த சிங்கமென்பது உன்னையே.*

**- திருச்சந்த விருத்தம்** - 62

இத்தலம் நாங்குநேரி எனப்படும் வானமாமலை திவ்ய க்ஷேத்திரத்திலிருந்து 25 கி.மீ. தொலைவில் உள்ளது. திருநெல்வேலியிலிருந்து நேர் பஸ் வசதியுள்ளது.

வராஹ அவதாரம் கொண்ட பெருமாள் தன் பிராட்டியோடு இங்குள்ள சிறு குடிலில் சில காலம் தங்கியமையால் குறுங்குடி என்ற பெயர் ஏற்பட்டது. பயங்கரமான வராக ரூபத்தை மிகவும் குறுகச் செய்தமையாலும் குறுங்குடி ஆயிற்று என்பர்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | நின்ற நம்பி, குறுங்குடி நம்பி, வடுக நம்பி, வைஷ்ணவ நம்பி என்ற பல பெயர்கள் உண்டு. கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம். |
| **உத்சவர்** | : | அழகிய நம்பி |
| **தாயார்** | : | குறுங்குடி வல்லி நாச்சியார் |
| **தீர்த்தம்** | : | திருப்பாற்கடல், பஞ்ச துறை, சிந்து நதி |
| **விமானம்** | : | பஞ்சகேதக விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | சிவன் |

**சிறப்புகள் :**

1. திருமங்கையாழ்வார் பரமபதித்த ஸ்தலம், இதுவே அவர் கடைசியாக மங்களாசாசனம் செய்த ஸ்தலமுமாகும்.
2. திருவரசு எனப்படும் திருமங்கையாழ்வார் முக்தி பெற்ற இடம் ஒரு சிறிய கோயிலாக இருக்கிறது.
3. இக்கோயிலிருந்து சுமார் 1 கி.மீ. தொலைவில் திருப்பாற்கடல் நம்பி ஸந்நிதி உள்ளது. இங்கிருந்து 9 கி.மீ. தொலைவில் குன்றின்மேல் மலைமேல் நம்பி ஸந்நிதி உள்ளது.
4. பெருமாள் உடையவருக்கு ஸிம்மாசனமிட்டு, தான் அருகில் சீடனாக நின்று திருமந்திரார்த்த உபதேசம் பெற்றதால் "வைஷ்ணவ நம்பி" என்று அழைக்கப்படுகிறார்.
5. இங்கிருந்துதான் திருமங்கையாழ்வாரின் மங்கள விக்ரகத்தை திருவாலி-திருநகரிக்கு கொண்டு சென்றனர்.
6. இன்றும் நம்பாடுவான் வேடம், கிழப்பிராமணன் வேடம் பூண்டு கைசிக புராணத்தை நாடகமாக நடத்திடும் பழக்கம் உண்டு.

7. பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய நான்கு ஆழ்வார்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

8. வைணவ பூரண ஞானமே திருக்குறுங்குடி எம்பெருமானின் திவ்ய விஷயங்களை அறிந்து, அவன்பாற் அன்பு கொள்ளுதலால் ஏற்படுகிறது என்று நம்மாழ்வார் அறுதியிட்டுள்ளார்.

*அறிவரியபிரானை ஆழியங்கையனையே அலற்றி*
*நறியநல் மலர்நாடி நன் குருகூர்ச்சடகோபன் சொன்ன*
*குறிகொள் ஆயிரத்துள் இவை பத்தும் திருக்குறுங்குடியதன் மேல்*
*அறியக்கற்று வல்லார் வைட்(ட)ணவர் ஆழ்கடல் ஞாலத்துள்ளே*

- **திருவாய்மொழி** 5-5-11

## 50. திருத்தொலைவில்லிமங்கலம்
## (இரட்டைத் திருப்பதி)

*திருந்து வேதமும் வேள்வியும் திருமாமகளிரும் தாம் மலிந்*
*திருந்துவாழ் பொருநல் வடகரைவண் தொலைவில்லி மங்கலம்*
*கருந்தடங்கண்ணி கைதொழுத அந்நாள் தொடங்கி இந்நாள்தொறும்*
*இருந்திருந்து அரவிந்தலோசன! என்றென்றே நைந்திரங்குமே*

- **திருவாய்மொழி** 6-5-8

இத்தலம் ஆழ்வார் திருநகரியிலிருந்து 3 கி.மீ. கிழக்கே வந்து தாமிரபரணி ஆற்றைக் கடந்தால் இத்தலத்தை அடையலாம். இங்குள்ள இரண்டு கோயில்கள் சேர்ந்தே ஒரு திவ்ய தேசமாக கருதப்படுகிறது. "இரட்டைத் திருப்பதிகள்" என்று அழைக்கப்படும். இத்தலத்தின் முதலாவது திருப்பதியான தேவப்பிரான் சந்நிதி தாமிரபரணி ஆற்றினிடையே அமைந்துள்ளது. அரவிந்த லோசனப் பெருமாள் எழுந்தருளியுள்ள இரண்டாவது திருப்பதி இதிலிருந்து சுமார் 1 கி.மீ. தொலைவில் தாமிரபரணியிலிருந்து பிரியும் வாய்க்கால் கரையில் உள்ளது.

**மூலவர்** : (முதல் கோயில்) ஸ்ரீநிவாசன் - தேவபிரான் - கிழக்கே நின்ற திருக்கோலம்.

(இரண்டாவது கோயில்) அரவிந்த லோசனன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கு நோக்கி.

**தாயார்** : கருத்தடங்கண்ணி நாச்சியார்

**தீர்த்தம்** : தாமிரபரணி, வருண தீர்த்தம்

**விமானம்** : குமுத வாகனம்

**ப்ரத்யக்ஷம்** : இந்திரன், வருணன், வாயு

**சிறப்புகள் :**

1. இக்கோயில்கள் காட்டில் அமைந்துள்ளன.

2. அத்திரேய ஸுப்ரபர் என்ற முனி யாகசாலையை சோதித்த போது அவ்விடத்தில் ஒரு தராசையும், வில்லையும் கண்டு ஆச்சரியப்பட்டு எடுத்தபொழுது, தராசு ஒரு பெண்ணாகவும், வில் ஒரு புருஷனாகவும் குபேர சாபத்திலிருந்து விடுபட்டதாகவும், இங்கே துலையும், வில்லும் முக்தி அடைந்தபடியால் "துலை வில்லி மங்கலம்" என்று பெயர் ஏற்பட்டது.

3. நவதிருப்பதிகளில் இரண்டு திருப்பதியாகக் கொள்ளப்படுகிறது. நவதிருப்பதிகளாவன -

   1. திருவைகுண்டம்
   2. திருவரகுணமங்கை
   3. திருப்புளிங்குடி
   4. திருத்தொலை வில்லிமங்கலம் (2)
   5. திருக்குளந்தை
   6. திருக்கோளூர்
   7. திருப்பேரை
   8. திருக்குருகூர்

4. நம்மாழ்வாரால் மட்டும் இத்தலங்கள் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளன.

## 51. திருக்கூடல் - மதுரை - கூடலழகர் சந்நிதி

*அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண*
*இழைப்பன் திருக்கூடல் கூட - மழைப்பே*
*ரருவிமணி வரன்றிவந்திழிய யானை*
*வெருவியர வொடுங்கும் வெற்பு*

**- நான்முகன் திருவந்தாதி** - 39

மதுரை நகருக்குள்ளே பேருந்து நிலையத்திற்கு அருகில் இத்தலம் அமைந்துள்ளது. மூன்று நதிகள் கூடும் இடம் முக்கூடல் எனவும், இரண்டு நதிகள் கூடும் இடம் கூடலூர் எனவும் வழங்கப்பட்டன. மேகங்கள் ஒன்று கூடி அதிக மழைப்பொழிவை தடுத்துவிட்டன. மேகங்கள் ஒன்று கூடியதால் இத்தலத்திற்கு "திருக்கூடல்" என்ற பெயர் ஏற்பட்டதாக ஐதீகம்.

**மூலவர்** : கூடலழகர் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : மதுரவல்லி நாச்சியார் - வரகுணவல்லி, மரகதவல்லி, வகுளவல்லி என்ற பெயர்களும் உண்டு.

**தீர்த்தம்** : க்ருதமாலா நதி, ஹேமபுஷ்கரிணி, சக்ரதீர்த்தம்

**விமானம்** : அஷ்டாங்க விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பெரியாழ்வார், ப்ருகு

**சிறப்புகள் :**

1. இத்தலத்தின் ப்ராகாரங்களில் இருக்கும் சுவர்களில் 108 திவ்ய தேசத்துப் பெருமாள்களின் சித்திரங்கள் அந்தந்த திவ்ய தேசத்தில் ஸேவை சாதிக்கும்படியே வரையப்பட்டுள்ளன.

2. பெரியாழ்வார் பல்லாண்டு பாடிய இடம்.

3. மேல் தளத்து அஷ்டாங்க விமானத்தில் ஒரு தட்டில் பள்ளி கொண்ட பெருமாள் சயனத்திருக்கோலத்திலும், மற்றொரு தட்டில் ஸூர்ய நாராயணன் நின்ற திருக்கோலத்திலும் உள்ளனர்.

4. வைஷ்ணவ ஆலயங்களில் இங்கு மட்டும்தான் நவக்ரகங்கள் ப்ரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன.

5. பெரியாழ்வார் திருமாலே பரமபதம் அளிக்கும் சக்தி வாய்ந்தவர் என்று பரதத்துவ நிர்ணயம் செய்ததை 'பாண்டியன் கொண்டாட' என்ற பாடலால் அறியலாம்.

6. இங்குள்ள ஆண்டாள் சந்நிதி மிகவும் சக்தி வாய்ந்ததாகும்.

7. திருமங்கையாழ்வாராலும், திருமழிசையாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 52. திருச்சிரீவரமங்கை - வானமாமலை

*புள்ளின் வாய் பிளந்தாய் ! மருதிடை போயினாய் ! எருதேழடர்த்த என்*
*கள்ள மாயவனே! கருமாணிக்கச்சுடரே !*
*தெள்ளியார் திரு நான்மறைகள் வல்லார் மலிதண்சிரீவரமங்கை*
*யுள் இருந்த எந்தாய் ! அருளாய் உய்யுமாறு எனக்கே -*

- **திருவாய்மொழி** 5-7-9

இத்தலத்திற்கு வானமாமலை, நாங்குநேரி, ஸ்ரீவரமங்கைநகர், தோத்தாத்ரி என்ற பல்வேறு பெயர்களும் உண்டு. இத்தலம் திருநெல்வேலியிலிருந்து திருக்குறுங்குடி செல்லும் வழியில் அமைந்துள்ளது. இது தானாகத் தோன்றிய ஸ்தலம்.

ஸ்ரீவரமங்கையாக திருமகள் இவ்விடத்தில் வந்து வளர்ந்து, பிறகு எம்பெருமானை மணந்து கொண்டதால் ஸ்ரீவரமங்கை எனவும், மரங்கள் நிறைந்த வனமும், மலையும் சூழ்ந்த இடமாதலின் வானமாமலை எனவும், இங்குள்ள திருக்குளத்தை நான்கு ஏரிகளாக வெட்டியதால் நான்கு + ஏரி - நான்குநேரி எனவும், அந்த நான்கு ஏரிகளின் கூர்மையான முனைகள் சந்திக்கும் நடு மையப் பகுதியில் அமைந்ததால் நான் + கூர் + நேரி என்பது காலப்போக்கில் நாங்குநேரி எனவும் வழங்கப்படுகிறது.

**மூலவர்** : தோத்தாத்ரி நாதன் (வானமாமலை) வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**உத்சவர்** : தெய்வநாயகன்

தாயார் : ஸ்ரீதேவி, பூதேவி

தீர்த்தம் : சேற்றுத்தாமரை தீர்த்தம், இந்த்ர தீர்த்தம்

விமானம் : நந்தவர்த்தன விமானம்

ப்ரத்யக்ஷம் : பிரும்மா, இந்த்ரன், உரோமச ரிஷி, ப்ருகு

**சிறப்புகள் :**

1. திருப்பாற்கடலே இங்கு சேற்றுத் தாமரைத் தெப்பமாக அமைந்துள்ளதாக ஐதீகம்

2. பெருமாளுக்கு தினசரி தைல அபிஷேகம் உண்டு.

3. ஸ்ரீவானமாமலை மடத்துக்கு இதுவே தலைமைப் பீடமாகும்.

4. ஒவ்வொரு வருடமும் ஐப்பசி மூலத்தன்று, ஸ்ரீமணவாள மாமுனிகளின் தங்கமோதிரத்தை ஸ்ரீஜீயர் ஸ்வாமிகள் சாத்திக்கொள்ளும் வழக்கம் உண்டு.

5. இங்குள்ள சடாரியில் நம்மாழ்வாரின் திருஉருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

6. ஸிந்து தேசத்து அரசன் குசாஸன மஹரிஷியால் சபிக்கப்பட்டு நாயுருவத்துடன் வந்து சேற்றுத் தாமரை புஷ்கரிணியில் ஸ்நானம் செய்து பழைய அரச உருவத்தை அடைந்த ஸ்தலம்.

7. பகவான் மதுகைடபர்களை ஸம்ஹரித்த போது, பூமிதேவி தன் இயல்பான தூய்மையை இழந்ததாகவும், இவ்விடத்தில் தவமிருந்து பகவான் ப்ரத்யக்ஷமாகி, பூமியும் "மேதினி ஆனேனே" என்று புலம்ப, பகவான் அருள்புரிந்து, "மாசு கழுவப்பெற்றாய்" "மேதினி" என்ற பெயரும் வாய்க்கும் என்று சொல்லி வைகுண்டத்தில் வீற்றிருப்பது போல் இத்தலத்தில் ஸ்ரீவைகுண்ட விமானத்தில் ஸ்ரீதேவி, பூதேவி ஸமேதனாக காக்ஷி கொடுப்பதாக வரலாறு.

8. ஊர்வசியும், திலோத்தமையும் இத்தலத்தில் தவமிருந்து பகவான் அருளால் இன்றளவும் இருபக்கங்களிலும் நின்று வெண்சாமரம் வீசிக்கொண்டிருப்பதாகவும் ஐதீகம்.

9. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

10. தை அமாவாசையன்று பெருமாளுக்கு சாத்தப்படும் எண்ணெய்க் காப்பு உத்ஸவம் மிகவும் பிரசித்தி பெற்றது.

## 53. திருப்பேரை (தென் திருப்பேரை)

*செங்கனி வாயின் திறத்ததாயும் செஞ்சுடர் நீள் முடித்தாழ்ந்ததாயும்*
*சங்கொடு சக்கரம் கண்டு கந்தும் தாமரைக் கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்*
*திங்களும் நாளும் விழாவறாத தென்திருப்பேரையில் வீற்றிருந்த*
*நங்கள் பிரானுக்கு என் நெஞ்சம் தோழீ ! நாணும் நிறையும் இழந்ததுவே*

- **திருவாய்மொழி** 7-3-3

இத்தலம் திருநகரியிலிருந்து திருச்செந்தூர் செல்லும் சாலையில் சுமார் 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

லக்ஷ்மியின் பிரார்த்தனைப்படி, துர்வாஸ மஹரிஷி பூமிதேவியை லக்ஷ்மியைப்போல் ஆக சபித்ததாகவும், பூதேவி துர்வாசர் உபதேசித்த அஷ்டாக்ஷரத்தை ஜபித்துக்கொண்டு தவமிருந்து "ஸ்ரீபேரை" (லக்ஷ்மியின் உடல்) என்னும் நாமத்தைத் தரித்து பங்குனி பூர்ணிமையில் தாமிரபரணி தீர்த்தத்தில் தர்ப்பணம் செய்ய முயன்றபோது மகராக்ருதியான (மீன்போல் வடிவமுள்ள) இரண்டு குண்டலங்களைக் கண்டு பகவானுக்கு சமர்ப்பிக்க "மகர நெடுங்குழைக்காதன்" என்ற திருநாமம் பூண்டதாகவும் ஸ்ரீதேவி ஸ்ரீபேரை (நாமத்தை) தரித்ததனால் இத்தலத்திற்கு "ஸ்ரீபேரை" (திருப்பேரை) என்ற பெயர் ஏற்பட்டதாகவும் ஐதீகம்.

**மூலவர்** : மகர நெடுங்குழைக்காதன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

| | | |
|---|---|---|
| **தாயார்** | : | குழைக்காதுவல்லி நாச்சியார், திருப்பேரை நாச்சியார் |
| **தீர்த்தம்** | : | சுக்ர புஷ்கரிணி, சங்க தீர்த்தம் |
| **விமானம்** | : | பத்ர விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | ப்ரம்மா, சுக்ரன், ஈசான்யருத்ரன் |

**சிறப்புகள்:**

1. ஆண்டுதோறும் வருணன், குருவை அவமானம் செய்த பாபம் நீங்க, பங்குனி பூர்ணிமையில் பகவானுக்கு ஆராதனம் செய்து வருவதாக ஐதீகம்.
2. விதர்ப்ப தேசத்தில் பஞ்சம் ஏற்பட்டபோது, அவ்வூர் அரசன் இங்கு பகவானை ஆராதித்து நாட்டில் மழை பெய்து சுபிக்ஷம் உண்டானதாக ஸ்தல வரலாறு.
3. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட திவ்யதேசம்.

## 54. திருவரகுணமங்கை

*புளிங்குடிக் கிடந்து வரகுண மங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று*
*தெளிந்த என் சிந்தையகங் கழியாதே என்னையாள்வாய்எனக்கருளி*
*நளிர்ந்த சீருலகம் மூன்றுடன் வியப்ப நாங்கள் கூத்தாடி நின்றார்ப்ப*
*பளிங்கு நீர் முகிலின் பவளம் போல் கனிவாய் சிவப்ப நீ காண வாராயே*

**- திருவாய்மொழி** 9 - 2 - 4

இத்தலம் ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து கிழக்கே 2 கி.மீ தொலைவில் உள்ளது. நத்தம் என்று சொன்னால்தான் பலருக்கும் தெரியும்.

வேதவித் என்னும் பிராமணன் இத்தலத்தில் விஷ்ணுவைக் குறித்து தவமிருந்து பகவான் ப்ரத்யக்ஷமான போது, அவர் ப்ரார்த்தித்தபடி "ஸ்ரீவிஜயாஸனர்" என்ற திருநாமம் பகவானுக்கு ஏற்பட்டதாக ஐதீகம்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | விஜயாஸனப் பெருமாள் - ஆதிசேஷன் குடை பிடிக்க வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |

தாயார் : வரகுண வல்லித்தாயார், வரகுண மங்கைத் தாயார்

தீர்த்தம் : அக்னி தீர்த்தம், தேவபுஷ்கரிணி

விமானம் : விஜயகோடி விமானம்

ப்ரத்யக்ஷம் : அக்னி, ரோமச முனிவர், சத்தியவான்

**சிறப்புக்கள்:**

1. ஆதிசேஷன் அமர்ந்த பெருமானுக்கு குடை பிடித்துள்ளது சிறப்பு.
2. மணவாள மாமுனிகளும் இங்கு எழுந்தருளினார்.
3. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 55. திருக்கோஷ்டியூர்

*எங்கள் எம்மிறை எம்பிரான் இமையோர்க்கு நாயகன் ஏத்தடியவர்*
*தங்கள் தம்மனத்துப் பிரியாது அருள் புரிவான்*
*பொங்கு தண்ணருவி புதம் செய்யப் பொன்களே சிதறும்இலங்கொளி*
*செங்கமலம் மலரும் திருக்கோட்டியூரானே*

**- பெரிய திருமொழி** 9 - 10 - 1

இத்தலம் திருப்பத்தூரிலிருந்து சிவகங்கை செல்லும் வழியில் 10 கி.மீ தொலைவில் உள்ளது. மும்மூர்த்தங்களுடன் தேவர்களும், ஸப்தரிஷிகளும் கூட்டம் கூட்டமாய் இவ்விடத்திற்கு (கோஷ்டி, கோஷ்டியாய்) வந்தமையால், திருக்கோஷ்டியூர் என்று பெயர் ஏற்பட்டது. "த்வயம் விளைந்த திருப்பதி" என்று எம்பெருமானார் காலத்திலிருந்து ஸ்ரீ வைஷ்ணவர்கள் அழைக்கிறார்கள். இரணியனைக் கொல்வது பற்றி பிரம்மா, விஷ்ணு, சிவன் இங்கு கோஷ்டியாக சந்தித்து ஆலோசனை நடத்தியதால் "கோஷ்டிபுரம்" என்று பெயர் வந்ததாகவும் கூறப்படுகிறது.

மூலவர் : உரகமெல்லணையான் - புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மண்டலம்

உற்சவர் : ஸௌம்ய நாராயணன், நின்ற திருக்கோலம்

**தாயார்** : திருமாமகள் நாச்சியார்

**தீர்த்தம்** : தேவபுஷ்கரிணி

**விமானம்** : அஷ்டாங்க விமானம்

**ப்ரத்யக்ஷம்** : இந்திரன், கதம்பமுனி

**சிறப்புக்கள்**

1. இக்கோவில் 4 மாடிகளாக உள்ளது. கதம்ப மஹரிஷி பிரார்த்தனைக்கு இணங்க, முதல் மாடியில் உரக - மெல்லணையானின் சயனத் திருக்கோலம்.

2. தக்ஷிணேஸ்வர ந்ருஸிம்மன், உத்தரேஸ்வர ந்ருஸிம்மன், க்ஷீராப்தி நாதன், ஸ்தித நாராயணன் ஸந்நிதிகளில் நின்ற இருந்த, கிடந்த, நடந்த கூத்தாடிய திருக்கோலத்தைக் காணலாம். பெருமாள் சயனத்திலேயே வலது கையால் ஆதிசேஷனுக்கு அபயமளிக்கிறார்.

3. இரண்டாவது, மூன்றாவது, மாடிகளில் நின்ற திருக்கோலமும், இருந்த திருக்கோலமும் உள்ளன.

4. நான்காவது மாடியிலிருந்துதான் உடையவர் திருமந்த்ரார்த்தத்தை வெளிப்படையாக எல்லோருக்கும் உபதேசித்தார்.

5. தேவர்களின் நடுவில் நின்றமையால் ஸ்தித நாராயணன் எனவும், ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டதால் "உரக மெல்லணையான்" என்றும் திருப்பெயர்கள் ஏற்பட்டன.

6. அஷ்டாங்க விமானத்தை மயன், விச்வகர்மா ஆகியோர் கட்டினர்.

7. உற்சவர் விக்ரகம் தூய வெள்ளியால் செய்யப்பட்டது.

8. எம்பெருமானார் திரு உருவ விக்ரகம் கோபுரத்தின் உச்சியில் ஊரைப் பார்த்த மாதிரி இருக்கிறது.

9. பேயாழ்வார், பூதத்தாழ்வார், பெரியாழ்வார், திருமங்கை யாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகியோரால் மங்களா சாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 56. ஸ்ரீ வில்லிப்புத்தூர்

*மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூருறைவான் தன்*
*பொன்னடி காண்பதோ ராசையினால் என் பொருகயற் கண்ணினை*
*துஞ்சா*
*இன்னடிசிலொடு பாலமுதூட்டி எடுத்த என் கோலக்கிளியை*
*உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே! உலகளந்தான்*
*வரக்கூவாய்*

**- நாச்சியார் திருமொழி** 5 - 5

இத்தலம் தென்காசி - விருதுநகர் ரயில் பாதையில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்டேஷனிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது.

பெருமாளின் நாபிக்கமலத்திலிருந்து ப்ரம்மா, ஸ்ரீதேவி, பூதேவியுடன் பக்தர்களான வில்லி, புத்தன் என்ற இரு வேடுவ அரசர்களுடனும் உள்ளார். இவ்வேடுவர்களால் இந்நகர் கட்டப்பட்டதால் வில்லிபுத்தூர் என்று பெயர் ஏற்பட்டது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | வடபத்ரசாயி (ரங்கமன்னார்) புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | ஆண்டாள் (கோதை நாச்சியார்) |
| **தீர்த்தம்** | : | திருமுக்குளம் |
| **விமானம்** | : | ஸம்சன விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | மண்டூக முனி, பெரியாழ்வார் |

**சிறப்புக்கள்**

1. ஆண்டாளும், பெரியாழ்வாரும் அவதரித்த ஸ்தலம், ஆண்டாள் ரெங்கநாதரை மணந்த ஸ்தலம்.

2. ரங்க மன்னாருக்கு வலது புறம் ஆண்டாளும், இடது புறம் கருடாழ்வாரும் உள்ளனர். பெருமாளுடன் கருடாழ்வார் நிற்பது இத்தலத்தின் விசேஷம்.

3. தமிழ்நாடு அரசு முத்திரையில் இடம் பெற்றிருப்பது இக்கோவிலின் ராஜகோபுரமாகும்.

4. ஆண்டாள் அவதரித்த இடத்தில் துளசிச் செடியும், நந்தவனமும் உள்ளன.

5. ஸ்ரீரங்கத்தில் இருப்பது போல் அரையர் சேவையும் இங்குண்டு

6. எம்பெருமானுக்கு பெரியாழ்வார் தொடுத்த பூமாலையைச் சூடிப் பார்த்து திருப்தியடைந்து கொடுத்தனுப்பிக் கொண்டிருந்தாள் ஆண்டாள். அதனை பகவானும் உகந்து ஏற்றுக் கொண்டார். அது முதல் ஆண்டாளுக்கு "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி" என்று பெயர் ஏற்பட்டது. எனவே இன்றும், முதல் நாள் இரவு ஆண்டாளுக்கு சாத்தப்பட்ட மலர் மாலை வடபத்திர சாயியாக பள்ளி கொண்டிருக்கும் பெருமாளுக்கு மறுநாள் காலை, முதல் மாலையாக அணிவிக்கப்படுகிறது.

7. ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய மூவரும் சேர்ந்து ஆண்டாளாகக் காட்சியளிப்பது இங்குதான். பெருமாள் இத்தலத்தில் தான் ஆண்டாள் ஒருவரோடு காட்சி தருகிறார்.

8. ஸ்ரீவில்லிப்புத்தூரில் ஆண்டாள் அவதார தினமான ஆடிப்பூரத்தன்று நடைபெறும் திருவாடிப்பூரத் திருவிழாவும், ரத உத்சவமும் மிகவும் பிரசித்தி பெற்றவை.

9. பெரியாழ்வாராலும், ஆண்டாளாலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 57. திருப்புளிங்குடி

*பவளம் போல் கனிவாய் சிவப்ப நீ காண வந்து நின் பல் நிலா முத்தம்*
*தவழ்கதிர் முறுவல் செய்து நின் திருக்கண் தாமரை தயங்க*
*நின்றருளாய்*
*பவள நன்படர்க் கீழ்ச் சங்குறை பொருநல் தண் திருப்புளிங்குடிக்*
*கிடந்தாய்!*
*கவளமாகளிற்றினிடர் கெடத் தடத்துக் காய் சினப்பறவை*
*யூர்ந்தானே!*

- **திருவாய்மொழி** 9 - 2- 5

இத்தலம் வரகுணமங்கையிலிருந்து கிழக்கே சுமார் 1 கி.மீ தொலைவில் உள்ளது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | காய் சின வேந்தன் - புஜங்கசயனம் - கிழக்கு நோக்கிய திருக்கோலம் |
| **தாயார்** | : | மலர்மகள் நாச்சியார், பூமகள் நாச்சியார் - புளிங்குடிவல்லி என்ற சிறிய உத்ஸவத்தாயாரும் உண்டு. |
| **தீர்த்தம்** | : | வருண தீர்த்தம், நிர்ருதி தீர்த்தம் |
| **விமானம்** | : | வேதஸார விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | வருணன், நிர்ருதி, தர்மராஜன் |

**சிறப்புக்கள்**

1. பெருமாள் வயிற்றிலிருந்து தாமரைக்கொடி தனியாகக் கிளம்பிச் சென்று சுவற்றிலுள்ள பிரம்மாவின் தாமரை மலருடன் சேர்ந்து கொள்கிறது. இது ஒரு அரிய காட்சி.

2. திருமாலின் பாதங்களை வெளிப்பிரகாரத்திலிருந்து ஒரு ஜன்னல் வழியாகப் பார்க்கும்படி இக் கட்டிட அமைப்பு உள்ளது.

3. இந்திரனுக்கு ப்ரம்ஹத்தி தோஷம் விடுபட்ட ஸ்தலம்.

4. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 58. திருக்கோளூர்

*உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம்*
*கண்ணன் எம்பெருமானென்றென்றே கண்கள் நீர் (கள்) மல்கி*
*மண்ணினுள் அவன் சீர் வளம் மிக்கவனூர் வினவி*
*திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே.*

- **திருவாய்மொழி** 6 7 1

இத்தலம் ஆழ்வார் நிகரியிலிருந்து 2 கி.மீ தொலைவில் சற்றே தென் கிழக்கில் உள்ளது.

பார்வதியால் குபேரன் சபிக்கப்பட்டதால் நவநதிகள் அவனை விட்டுப் பிரிந்து இத்தலத்தில் பகவானை நாதனாக அடைய தவம் செய்து, பகவான் ப்ரத்யக்ஷமாகி, நவநதிகளின் ப்ரார்த்தனைப்படி

“நிக்ஷேபவித்தன்” (வைத்தமாநிதி) என்று திருநாமம் பூண்டு நதிகளைக் காத்து வருவதாக ஐதீஹம். நதிகள் எல்லாம் இங்கு தீர்த்தாமாடியதால் இந்த தீர்த்தத்திற்கும் “நிதித்தீர்த்தம் ” என்ற பெயர் உண்டானது.

எம்பெருமானை ஸேவித்துக் கொண்டிருந்த பொழுது அதர்மம் தர்மத்துடன் யுத்தம் செய்து, தோற்று ஓடிவிட்டதால், இத்தலத்திற்கு “அதர்மபாசனம்” என்ற நாமம் உண்டானதாக ஸ்தல வரலாறு.,

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | வைத்தமா நிதிப் பெருமாள் - நிக்ஷேப வித்தன் - புஜங்க சயனம் - கிழக்கு நோக்கிய திருக்கோலம் |
| **தாயார்** | : | குமுதவல்லி, கோளூர்வல்லி |
| **தீர்த்தம்** | : | குபேர தீர்த்தம், நிதித் தீர்த்தம், தாமிரபரணி, |
| **விமானம்** | : | ஸ்ரீகர விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | குபேரன், மதுரகவி ஆழ்வார் |

**சிறப்புக்கள்**

1. இது மதுரகவியாழ்வார் அவதார ஸ்தலம்.
2. குபேரனுக்கு சாப விமோசனம் ஆன ஸ்தலம்.
3. பெருமாள் மரக்கால் வைத்து பள்ளி கொண்டுள்ளார்.
4. நம்மாழ்வார் மட்டும் மங்களா சாசனம் செய்துள்ளார்.

# மலை நாட்டுத் திருப்பதிகள் -13

## திருக்கோல ஸ்தலங்கள் 59 - 71

| நின்ற கோலம் | அமர்ந்த கோலம் | கிடந்த கோலம் |
|---|---|---|
| கிழக்கு | கிழக்கு | கிழக்கு |
| 59. திருமூழிக்களம் | 69. திருவண்பரிசாரம் | 70. திருவனந்தபுரம் |
| 60. திருப்புலியூர் (குட்ட நாடு) | | மேற்கு |
| 61. திருநாவாய் | | 71. திருவாட்டாறு |
| 62. திருவல்லவாழ் (திருவல்லா) | | |
| 63. திருக்கடித்தானம் | | |
| 64. திருவாறன்விளை (ஆரம்முளா) | | |
| மேற்கு | | |
| 65. திருச்செங்குன்றூர் (திருச்சிற்றாறு) | | |
| 66. திருவண்வண்டூர் | | |
| தெற்கு | | |
| 67. திருக்காட்கரை | | |
| 68. திருவித்துவக்கோடு (திருவிச்சிக்கோடு) | | |

# மலைநாட்டுத் திருப்பதிகள்





அனந்த பத்மநாபன் – திருவனந்தபுரம்

## 59. திருமூழிக்களம்

*தெளிவிசும்புகடி தோடித்தீவளைத்து மின்னிலகும்*
*ஒளி முகில்காள்! திருமூழிக்களத்துறையும் ஒண்சுடர்க்கு*
*தெளிவிசும்பு திருநாடாத் தீவினையேன் மனத்துறையும்*
*துளிவார்கட்குழலார்க்கு என் தூதுரைத்தல் செப்புமினே.*

**- திருவாய்மொழி** 9 - 7 - 5

இத்தலத்திற்கு கேரளாவில் உள்ள ஆல்வாயிலிருந்தும், எர்ணாகுளத்திலிருந்தும், அங்கமாலி ரயில் நிலையத்திலிருந்தும் பஸ் வசதிகள் உண்டு.

ஹாரீத மஹரிஷி பல வருடங்கள் தவமிருந்து பகவான் ப்ரத்யக்ஷமான போது அவர் வர்ணாச்ரம தர்மங்களையும், ஐந்து காலங்களில் செய்ய வேண்டிய அனுஷ்டான பிரகாரங்களையும் யோகத்தையும் ப்ரதிபாலிக்கிற ஸம்ஹிதையை - ஸ்ரீ ஸூக்தியை - திருமொழியை இயற்றியபடியால் இத்தலத்திற்கு "திருமொழிக் களம்" என்று பெயர் வழங்க வேண்டும், பெருமாளுக்கு "திருமொழிக்களத்தான்" என்று திருநாமம் இருக்கவேண்டும் என்று ப்ரார்த்தித்தபடி பெயர் உண்டாகியதாக புராண வரலாறு. திருமொழிக்களம் என்பதே நாளடைவில் "திருமூழிக்களம்" ஆயிற்று.

இராமன் சித்திரக்கூடத்தில் இருந்த போது பரதன் ராமனைத திரும்ப அயோத்திக்கு அழைத்துப் போக வந்ததை ஸந்தேகித்த லக்ஷ்மணன் பரதனை கொல்ல முயன்ற பாவத்தைப் போக்கிக் கொள்ள இத்தலம் வந்ததாகவும், அப்போது பரதனே வந்து லக்ஷ்மணனை ஆரத்தழுவி இன்சொல்லால் உபசரித்ததாகவும், இவ்விதம் இன்சொல் விளைந்த ஸ்தலமாதலால் இதற்கு "திருமொழிக்களம்" என்று பெயர் உண்டானதாக ஸ்தல வரலாறு.

**மூலவர்** : திருமூழிக்களத்தான், அப்பன், ஸ்ரீஸூக்திநாதன், நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : மதுரவேணி நாச்சியார்

**தீர்த்தம்** : சங்க தீர்த்தம், சிற்றாறு

**விமானம்** : சௌந்தர்ய விமானம்

**ப்ரத்யக்ஷம்** ஹாரீத மஹரிஷி

**சிறப்புக்கள்**

1. லக்ஷ்மணனும், பரதனும் சேர்ந்து வழிபட்ட ஸ்தலம்.
2. லக்ஷ்மணன் இவ்விடத்தில் கோபுரம், மண்டபம் போன்றவற்றை எழுப்பி பல திருப்பணிகள் செய்தான்.
3. நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் இருவரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## 60. திருப்புலியூர் - குட்ட நாடு

*திருவருள் மூழ்கிவைகலும் செழுநீர் நிறக் கண்ணபிரான்*
*திருவருள்களும் சேர்ந்தமைக்கு அடையாளம் திருந்தவுள*
*திருவருளருளால் அவன் சென்று சேர்தண் திருப்புலியூர்*
*திருவருள் கமுகொண் பழத்தது மெல்லியல் செவ்விதழே*

**- திருவாய்மொழி** 8 - 9 - 6

இத்தலம் செங்கண்ணூரிலிருந்து மேற்கே 5 கி.மீ தொலைவில் உள்ளது.

சிபிகுமாரன் வ்ருஷாதர்பி கொடுத்த தானத்தை வாங்க ரிஷிகள் மறுத்ததால், அரசன் யாகம் செய்து அதன் மூலம் தோன்றிய தேவதையை ரிஷிகளை கொல்லும்படி ஏவ, ரிஷிகள் மகாவிஷ்ணுவை ப்ரார்த்திக்க, பகவான் இந்திரனை அனுப்ப, இந்திரன் புலியாக மாறி தேவதையைக் கொன்றான். இதனால் இத்தலத்திற்கு "திருப்புலியூர்" என்று பெயர். ஸ்ரீமந் நாராயணன்தான் பரம்பொருள் என்று இவ்விடத்து நிர்ணயம் செய்ததால், திருமால் அவர்கட்கு மாயப் பிரானாக காட்சி கொடுத்து மோக்ஷம் அளித்தார்.

**மூலவர்** : மாயப்பிரான் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

தாயார் : பொற்கொடி நாச்சியார்

தீர்த்தம் : பரஞ்ஞா ஸரஸ்

விமானம் : புருஷோத்தம விமானம்

ப்ரத்யக்ஷம் : ஸப்த ரிஷிகள்

**சிறப்புக்கள்**

1. இக்கோயிலை பீமன் ஜீர்ணோத்தாரணம் செய்ததால், பீமசேனனால் பிரதிஷ்டை என்றழைக்கப்படுகிறது.

2 இத்தலத்தின் முன்புறம் அமைந்துள்ள உயர்ந்த கொடிமரம் (த்வஜஸ்தம்பம்) வட்ட வடிவமான (மூலஸ்தானம்) கருவறை அமைப்பும் மிக்க எழில் வாய்ந்ததாகும்

3. நம்மாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் மங்களா சாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 61. திருநாவாய்

*அந்தோ! அணுகப்பெறுநாள் என்று எப்போதும்*
*சிந்தை கலங்கித் திருமால்! என்று அழைப்பன்*
*கொந்தார் மலர்ச்சோலைகள் சூழ் திருநாவாய்*
*வந்தேயுறைகின்ற எம்மாமணி வண்ணா!*

- **திருவாய்மொழி** 9-8-10

இத்தலம் சென்னை - கள்ளிக்கோட்டை ரயில் மார்க்கத்தில் உள்ள திருநாவாய் ரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்விடத்தில் 9 யோகிகள் யாகம் செய்ததால் "திருநவயோகி" என்று பெயர் பெற்று, நாளடைவில் "திருநாவாய்" என்று மாறுபட்டதாக ஐதீகம்.

மூலவர் : நாவாய் முகுந்தன், நாராயணன் - நின்ற திருக்கோலம் - கிழக்கு நோக்கிய திருக்கோலம்.

தாயார் : மலர் மங்கை நாச்சியார்

தீர்த்தம் : செங்கமல ஸரஸ்

விமானம் : வேத விமானம்

ப்ரத்யாகம் : லக்ஷ்மி, கஜேந்திரன், நவயோகிகள்

**சிறப்புகள்**

1. மஹா லக்ஷ்மியும், கஜேந்திரனும் தாமரைப்பூக்களை பறித்து பகவானை அர்ச்சனை செய்ய, கஜேந்திரனுக்கு பூ கிடைக்காமல் பகவானிடம் முறையிட, பகவான் லக்ஷ்மியை பூ பறிக்க வேண்டாம் என்று சொல்லி லக்ஷ்மியை தன்னுடன் ஏக சிம்மாசனத்தில் அமரச்செய்து, கஜேந்திரன் பூஜையை ஏற்றுக் கொண்டதாக வரலாறு. மலைநாட்டில் இந்த ஓர் இடத்தில்தான் லக்ஷ்மிக்கு தனிச் சந்நிதி உண்டு.

2. திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய இரு ஆழ்வார்களும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## 62 திருவல்லவாழ் - திருவல்லா

*தொல்லருள் நல் வினையால் சொலக்கூடுங்கொல்? தோழிமீர்காள்*
*தொல்லருள் மண்ணும் விண்ணும் தொழ நின்றதிருநகரம்*
*நல்லருளாயிரவர் நலனேந்தும் திருவல்லவாழ்*
*நல்லருள் நம் பெருமான் நாராயணன் நாமங்களே*

**- திருவாய்மொழி 5-9-10**

இத்தலம் கொல்லம் - எர்ணாகுளம் ரயில் மார்க்கத்தில் திருவல்லா ரயில் நிலையத்திலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. இத்தலத்தில் சங்கர மங்கலத்தம்மை என்கிற பதிவிரதை ஏகாதசி விரதம் இருந்து துவாதசியன்று ப்ரஹ்மச்சாரிக்கு பாரணை செய்வித்து வந்ததாகவும், கோலகாசுரன் என்ற அரக்கன் இதற்கு இடையூறு செய்ததாகவும், பகவான் ப்ரஹ்மசாரி வேடத்தில் வந்து அசுரனைக் கொன்று, பாரணைக்கு வந்தபோது, கிருஷ்ணாஜினத்தினால் திருவாழ் மார்பை மறைப்பதைக் கண்ட அப்பதிவ்ரதையின் ப்ரார்த்தனைப்படி திருவாழ் மார்பை இன்றும் பக்தர்களுக்கு ஸேவை சாதிப்பதாக ஐதீகம். இதனையொட்டியே திருவல்லவாழ் என்ற பெயர் உண்டானதாக வரலாறு.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | திருவாழ்மார்பன், ஸ்ரீவல்லபன், கோலப்பிரான்- நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | செல்வத் திருக்கொழுந்து நாச்சியார், வாத்ஸல்ய தேவி |
| **தீர்த்தம்** | : | கண்டாகர்ண தீர்த்தம், பம்பா நதி. |
| **விமானம்** | : | சதுரங்க கோல விமானம். |
| **ப்ரத்யக்ஷம்** | : | கண்டா கர்ணன். |

**சிறப்புகள் :**

1. திருவல்லா நகரில் இறங்கி ஸ்ரீவல்லப க்ஷேத்ரம் என்று சொன்னால்தான் யாருக்கும் தெரியும்.
2. பெண்கள் சந்நிதிக்கு வெளியிலிருந்தே சேவிக்க வேண்டும்.
3. இத்தலத்தில் விபூதியும், சந்தனமும் பிரசாதமாக அளிக்கப்படுகிறது.
4. த்வஜஸ்தம்பம் பொன்தகடு வேயப்பட்டுள்ளது.
5. இக்கோயிலில் ஸுதர்சன சக்ரம் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.
6. நம்மாழ்வார், திருமங்கை யாழ்வார் - இருவராலும் மங்களா சாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 63. திருக்கடித்தானம்

*அற்புதன் நாராயணன் அரிவாமனன்*
*நிற்பது மேவி இருப்பது என்னெஞ்சகம்*
*நற்புகழ் வேதியர் நான்மறைநின்றதிர்*
*கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே*

- **திருவாய்மொழி** 8-6-10

இத்தலம் கோட்டயத்திலிருந்து திருவல்லா செல்லும் சாலையிலுள்ள செங்கணாச்சேரி என்ற ஊரிலிருந்து கிழக்கே 4 கி.மீ தொலைவில் உள்ளது. ருக்மாங்கதன் என்ற ஸூர்ய வம்சத்து அரசன், ஏகாதசி விரதம் இருந்து அதன் பலனை தேவர்களுக்குக் கொடுத்து அவர்களை தேவலோகம் அனுப்பித்த ஸ்தலம், மேற்படி நிகழ்ச்சிகள்

எல்லாம் ஒரு கடிகை நேரத்தில் இத்தானத்தில் (தலத்தில்) நடந்ததால், இத்தலத்திற்கு "திருக்கடித்தானம்" என்ற பெயர் உண்டாயிற்று.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | அற்புத நாராயணன் - நின்ற திருக்கோலம் கிழக்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | கற்பகவல்லி |
| **தீர்த்தம்** | : | பூமி தீர்த்தம் |
| **விமானம்** | : | புண்ய கோடி விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | ருக்மாங்கதன் |

**சிறப்புகள்**

1. இங்கு அமைந்துள்ள நரஸிம்மன், கிருஷ்ணன் ஆகியோர் மிக்க பேரழகு வாய்ந்தவர்கள்.
2. இந்த சந்நிதியை ஸஹதேவன் ஜீர்ணோத்தாரணம் செய்ததால், ஸஹதேவ ப்ரதிஷ்டை என்பர்.
3. நம்மாழ்வாரால் மட்டும் மங்களா சாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 64. திருவாறன்விளை (ஆரம்முளா)

*இன்பம் பயக்க எழில் மலர் மாதரும் தானும் இவ்வேழுலகை*
*இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான்*
*அன்புற்றமர்ந்துறைகின்ற அணிபொழில் சூழ் திருவாறன் விளை*
*அன்புற்றமர்ந்து வலஞ்செய்து கைதொழநாள்களுமாகுங்கொலோ?*

**- திருவாய்மொழி 7-10-1**

இத்தலம் செங்கண்ணூரிலிருந்து கிழக்கே 10 கி.மீ தொலைவில் உள்ளது.

யுத்தத்தில், கர்ணனின் தேர் இடது சக்கரத்தை பூமி விழுங்கிய போது, கர்ணன் தன் ரதத்தை தூக்கி விட்டு வரும் வரை தன்னைக் கொல்ல வேண்டாம் என்று சொல்லியும், வஞ்சகமாக பிணத்தைப் போட்டுக் கொன்றதால், மனது வருந்திய அர்ஜுனன் இவ்விடம் வந்து தவம் செய்து இந்தக் கோவிலை ஜீர்ணோத்தாரணம் செய்ததாக ஸ்தல

புராணம். முன்பு ப்ரஹ்மதேவரிடமிருந்து வேதங்களை மதுகைடபர்கள் அபகரித்தபோது, ப்ருஹ்மா ஸ்ருஷ்டி ஞான சூனியராக, பகவானைக் குறித்து தவம் செய்ய, பகவான் ஸ்ருஷ்டி ஞானத்தை ப்ருஹ்மாவுக்கு திரும்பி அருளிய ஸ்தலம்.

**மூலவர்** : திருக்குறளப்பன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : பத்மாஸனி நாச்சியார்

**தீர்த்தம்** : வேதவ்யாஸ தீர்த்தம், பம்பா தீர்த்தம்

**விமானம்** : வாமன விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பிரஹ்மா, வேதவ்யாஸர், அர்ஜுனன்

**சிறப்புக்கள் :**

1. ஒரு பெரிய மேட்டின் மேலுள்ள இப்பெரிய கோயில் அர்ஜுனனால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டதாம்.
2. பக்கத்தில் கோயில் மதிலைக் தொட்டுக்கொண்டு அழகிய பம்பா நிதி ஓடுகிறது.
3. இத்தலத்தில்தான் சபரிமலை ஐயப்ப ஸ்வாமியின் ஆபரணங்கள் பத்திரமாக வைக்கப்பட்டு, மகர ஜோதியின் போது ஊர்வலமாக சபரிமலைக்கு பக்த கோஷ்டியுடன் எடுத்துச் செல்லப்பட்டு வருகின்றன.
4. துலாபாரம் கொடுக்கும் முறை நடைமுறைப் பழக்கத்தில் இருந்து வருகிறது.
5. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 65. திருச்செங்குன்றூர் - திருச்சிற்றாறு

*அமர்ந்த நாதனை அவரவராகி அவர்க்கருளருளும் அம்மானை*
*அமர்ந்த தண்பழனத் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங் கரையானை*
*அமர்ந்த சீர் மூவாயிரவர் வேதியர்கள் தம்பதி அவனிதேவர் வாழ்வு*
*அமர்ந்த மாயோனை முக்கணம்மானை நான்முகனையமர்ந்தேனே.*

**- திருவாய்மொழி 8-4-10**

இத்தலம் திருவல்லாவிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ளது. சூர, பத்மன் என்ற இரு அரக்கர்கள் தேவர் உட்பட எல்லோரையும் இம்சை செய்ய, ஸுப்ரஹ்மண்யன் இவர்களை ஸம்ஹாரம் செய்து அவர்களைக் கொடியில் சேவலாகவும், மயிலாகவும் ஆக்கிக் கொண்டதாக வரலாறு. தன் குருவான துரோணரை யுத்தத்தில் கொல்வதற்கு "அச்வத்தாமா ஹத:" என்று உரக்கச் சொல்லி "குஞ்சர:" (யானை) என்று மெதுவாகச் சொன்னது தர்மபுத்திரரின் மனத்தை வருத்தியபடியால், இத்தலத்திற்கு வந்து ஆலய ஜீர்ணோத்தாரணம் செய்து, திருச்சிற்றாற்றில் ஸ்நானமும், பகவத் பூஜையும் செய்து மனநிம்மதி அடைந்ததாக வரலாறு. தர்மபுத்திரர் ஜீர்ணோத்தாரணம் செய்ததால், தர்மபுத்திரர் பிரதிஷ்டை என்பர்.

**மூலவர்** : இமைய வரப்பன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : செங்கமல வல்லி

**தீர்த்தம்** : சங்க தீர்த்தம், திருச்சிற்றாறு

**விமானம்** : ஜகஜ் ஜோதி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : சிவன்

**சிறப்புக்கள் :**

1. நம்மாழ்வார் கீழ்க்கண்ட பாசுரத்தில் ஸ்தலத்தின் பெயர், நதியின் பெயர், பெருமாளின் பெயர் ஆகிய மூன்றையும் குறிப்பிட்டுள்ளார்.

*எங்கள் செல்சார்வு யாமுடையமுதம் இமையவரப்பன் என்னப்பன்*
*பொங்கு மூவுலகும் படைத்தளித்தழிக்கும் பொருந்து மூவுருவன் எம்மருவன்*
*செங்கயலுகளும் தேம்பணை புடைசூழ் திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு*
*அங்கு அமர்கின்ற ஆதியானல்லால் யாவர்மற்று என் அமர்துணையே*

2. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசானம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 66. திருவண்வண்டூர் (திருவமுண்டூர்)

*அடிகள் கைதொழுது அலர்மேலசையும் அன்னங்காள்*
*விடிவை சங்கொலிக்கும் திருவண் வண்டூருறையும்*
*கடிய மாயன் தன்னைக் கண்ணனை நெடுமாலைக்கண்டு*
*கொடிய வல்வினையேன் திறம் கூறுமின் வேறு கொண்டே*

- **திருவாய்மொழி** 6-1-9

இத்தலம் செங்கண்ணூரிலிருந்து வடக்கே 6 கி.மீ தொலைவில் உள்ளது. நாரதர் ப்ரஹ்மாவினால் சபிக்கப்பட்டு இவ்விடம் வந்து ஸ்ரீமந்நாராயணனை பூஜித்து பகவானிடமிருந்து தத்வஞானம் உபதேசிப்பதே தொழிலாக வேண்டும் என்ற வரத்தைப் பெற்ற ஸ்தலம். நாரதர் இங்கே நாரதீய புராணத்தை இயற்றியதாகவும், ஸ்ரீமகாவிஷ்ணுவே பரதத்துவம் என்று ஸ்தாபித்து அவரை பூஜிக்கும் முறை, துதி முதலியன அடங்கிய பெருநூலை 25,000 க்ரந்தங்களில் செய்து முடித்ததாக ஸ்தல புராணம்.

**மூலவர்** : பாம்பணையப்பன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்

**தாயார்** : கமலவல்லி நாச்சியார்

**தீர்த்தம்** : பம்பை தீர்த்தம்

**விமானம்** : வேதாலய விமானம்

**ப்ரத்யக்ஷம்** : நாரதர், மார்க்கண்டேயர்

**சிறப்புகள் :**

1. இக்கோயிலை நகுலன் ஜீர்ணோத்தாரணம் செய்ததால், நகுலனால் ப்ரதிஷ்டை என்று அழைக்கப்படுகிறது.
2. இவ்வூரில் பூமியைத் தோண்டுகையில் புதிய பெருமாள் விக்ரஹங்கள் கண்டெடுக்கப்பட்டு, புதிய ஸந்நிதிகள் மண்டபங்களுடன் ஸ்தாபிக்கப்பட்டன.

3. மேற்குப்புற நுழைவாசலில், காளிங்கனின் மேல் கண்ணன் நர்த்தனமாடுவது போல் அமைந்திருக்கும் சிற்பம் பேரழகு பொருந்தியதாகும்.கண்ணனைத் தாங்கி நிற்கும் இரண்டு தூண்களின் இரண்டு பக்கங்களிலும் தசாவதாரக் காட்சி மிக நுட்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது.

4. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 67. திருக்காட்கரை (திரிகாக்கரா)

*திருவருள் செய்பவன் போல என்னுள் புகுந்து*
*உருவமும் ஆருயிரும் உடனேயுண்டான்*
*திருவளர்ச்சோலைத் தென்காட்கரையென்னப்பன்*
*கருவளர்மேனி நம் கண்ணன்கள்வங்களே*

- **திருவாய்மொழி** 9-6-5

இத்தலம் மலையாளத்தில் காக்கரா என்று வழங்கப்படுகிறது. எர்ணாகுளத்திலிருந்து ஆல்வாய் சென்றால், அங்கிருந்து 7 கி.மீ தொலைவில் உள்ளது. இப்பெருமாளை மலையாளத்தில் வாமன மூர்த்தி என்று அழைத்து வழிபடுகின்றனர். இந்த வாமனமூர்த்தி திருக்கோயில் கொண்டுள்ள இடமே திருக்காக்கரா. திருமால் வாமன அவதாரம் எடுத்து மகாபலிக்கு நற்கதி வழங்கிய திருவோணத் திருநாளை மக்கள் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். மஹாவிஷ்ணு சங்கு, சக்கர, கதா, பத்ம ஹஸ்தங்களோடு மகாபலிக்கு காட்சி கொடுத்த திருக்கோலத்தில் இங்கு எழுந்தருளியுள்ளார்.

**மூலவர்** : காட்கரையப்பன் - நின்ற திருக்கோலம் - தெற்கே திருமுகமண்டலம்

**தாயார்** : பெருஞ்செல்வநாயகி, வாத்ஸல்யவல்லி

**தீர்த்தம்** : கபில தீர்த்தம்

**விமானம்** : புஷ்கல விமானம்

**ப்ரத்யக்ஷம்** : கபிலமுனி

**சிறப்புகள் :**

1. ஓணம் பண்டிகையன்று இக்கோயிலில் பெரிய உத்சவம் நடக்கின்றது.

2. இத்தலத்தில் ஒரு தனிகன் வாழைத்தோட்டங்கள் ஏற்படுத்தி, குலை தள்ளாமலே பல முறை அழிந்துவிட, அத்தனிகன் பொன் வாழைக்குலை செய்து அப்பனுக்கு ஸமர்ப்பிக்க பகவான் அனுக்ரஹத்தால் வாழை மரங்கள் உயர்ந்து வாழைக்குலைகள் இட்டதாகவும், எம்பெருமானிடம் நேர்ந்து இந்தவாழைப்பழங்கள் உருவானமையால், இதற்கு "நேந்திரம் வாழை" என்று பெயர் உண்டானதாகக் கூறுவர்.

3. பொன் வாழைக்குலை ஒருசமயம் காணாமல் போனதாகவும் அரசன் தீர விசாரியாமல் ஒரு யோகியை துன்புறுத்தியதாகவும், அதைப் பொருக்காது, அந்தயோகி சாபமிட்டுவிட்டு தற்கொலை செய்து கொண்டதாகவும், பின்பு அந்த வாழைக்குலை கர்ப்ப க்ருஹத்திலேயே இருந்ததைக் கண்டுபிடித்ததாகவும், யோகியின் சாபம் நீங்க ஜனங்கள் யோகி சொல்லியபடி மூங்கில்கூரை ஏற்படுத்திக் கொண்டு கோரைக் கொள்ளியை வெளிச்சத்திற்கு ஏற்படுத்திக் கொண்டதாகவும் ஸ்தல வரலாறு

4. நம்மாழ்வார் மட்டும் மங்களாசாசனம் செய்துள்ளார்.

## 68 திருவித்துவக்கோடு (திருவிச்சிக்கோடு)

*நின்னையே தான் வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்*
*தன்னையே தான் வேண்டும் செல்வம் போல், மாயத்தால்*
*மின்னையே சேர்திகிரி வித்துவக்கோட்டம்மா*
*நின்னையே தான் வேண்டி நிற்பன் அடியேனே.*

- **பெருமாள் திருமொழி 5-9**

இத்தலம் ஷோரனூருக்கு அருகில் பட்டாம்பியிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது. திருமிற்றக்கோடு, திருவிக்கோடு எனவும் வழங்கப்படுகிறது.

அம்பரீஷன், பரதேவதையை ஸேவிக்க வ்யூஹாவதாரத்தை அனுக்ரகிக்க வேண்டும் என்று பகவானைப் ப்ரார்த்தித்தபடியால் பகவான் இங்கு நான்கு வடிவம் கொண்டு எழுந்தருளி இருப்பதாக ஐதீகம். முதலில் அர்ஜுனன் மஹா விஷ்ணுவின் சிலையை

ப்ரதிஷ்டை செய்தான். நடுவில் இருக்கும் மூர்த்தியை தர்மபுத்திரரும், மேற்கிலுள்ள மூர்த்தியை அர்ஜுனனும், இடப்புற மூர்த்தியை பீமஸேனனும், வலப்புற மூர்த்தியை நகுலனும், நகுலன் பூஜை செய்ததையே ஸஹாதேவனும் பூஜித்ததாக புராண வரலாறு. கோவிலில் நுழைந்ததும் எதிரே சிவன் சந்நிதியும், அதன்பின் பெருமாள் சந்நிதியும் இருக்கின்றன. அம்பரீஷன் முக்தி அடைந்த ஸ்தலம் என்றும் வரலாறு. பஞ்சபாண்டவர்கள் ஐவரும் சேர்ந்து சேவித்த ஸ்தலம்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | உய்யவந்த பெருமாள், அபயப்ரதன் - நின்ற திருக்கோலம் - தெற்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | வித்துவக்கோட்டுவல்லி, பத்மாசனி நாச்சியார் |
| **தீர்த்தம்** | : | சக்ர தீர்த்தம் |
| **விமானம்** | : | தத்வ காஞ்சன விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | அம்பரீஷன் |

**சிறப்புகள்**

1. கோவிலின் சுவர்களில் அமைந்துள்ள சிற்பங்களும், சிற்ப வேலைப்பாடுகளும் கண் கொள்ளாக் காட்சியாகும்.

2. திருமாலுக்கும், சிவனுக்கும் இங்கு ஒரே இடத்தில் சந்நிதி இருப்பது சிவனும் ஸ்ரீமந் நாராயணன் உடலின் அங்கமே என்று நிரூபிப்பதைப் போல் உள்ளது.

3. குலசேகர ஆழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 69. திருவண்பரிசாரம்

*வருவார் செல்வார் வண்பரிசாரத்து இருந்த என்*
*திருவாழ் மார்வற்கு என்திறம் சொல்லார் செய்வது என்?*
*உருவார் சக்கரம் சங்குசுமந்து இங்கு உம்மோடு*
*ஒரு பாடுழல் வான் ஓரடியானும் உளனென்றே*

**- திருவாய்மொழி 8-3-7**

இத்தலம் நாகர்கோவிலுக்கு வடக்கே 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

பகவான் ஹிரண்யனை ஸம்ஹாரம் செய்துவிட்டு, உக்ர ரூபமாக இருந்தபோது, லக்ஷ்மியும் பயந்து தவம் செய்ய வந்ததாகவும், ப்ரஹல்லாதன் ப்ரார்த்தனைக்கிணங்கி சாந்த வடிவத்துடன் லக்ஷ்மியைத்தேடிவர, லக்ஷ்மி ஆனந்தமடைந்து பகவானின் திருமார்பில் நித்யவாஸம் செய்ததாகவும், அதனால் பகவானுக்கு "திருவாழ்மார்பன்" என்ற திருநாமம் ஏற்பட்டதாகவும் "ச்ரிய:பதி" ஸஞ்சரித்த படியால் "திருப்பதிசாரம்" என்ற பெயர் இத்தலத்திற்கு ஏற்பட்டதாகவும் ஐதீகம்.

திருப்பதி சாரத்தில் பிறந்த உடைய நங்கை ஆழ்வார் திருநகரியைச் சார்ந்த காரி என்பாருக்கு மணமுடித்துக் கொடுக்கப்பட்டு, உடைய நங்கை புத்திரப்பேறு வேண்டி இத்தலத்தில் 41 நாட்கள் விரதமிருந்து, ஊஞ்சல் உத்சவம் நடத்தி, கலி 43வது நாள் நம்மாழ்வாரைப் பெற்றெடுத்தாள். வைகாசி விசாகத்தன்று அவதரித்த நம்மாழ்வாரை குருகூரில் ஆதிப்பிரான் சந்நிதியில் விட, அக்குழந்தை தவழ்ந்து புளியமரப் பொந்தில் புகுந்து யோக முத்திரையுடன் பத்மாசனயோகத்தில் ஆழ்வாராக அமர்ந்தார். மதுரகவி தமக்கு ஹிதோபதேசம் செய்யும்படி பிரார்த்திக்க, நம்மாழ்வார் திருவாய்மொழியை அருளிச் செய்ததாக ஸ்தல புராணம்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | திருவாழ்மார்பன் - திருக்குறளப்பன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | கமலவல்லி நாச்சியார் |
| **தீர்த்தம்** | : | லக்ஷ்மி தீர்த்தம் |
| **விமானம்** | : | இந்திர கல்யாண விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | கருடன், காரி, உடைய நங்கை |

**சிறப்புகள் :**

1. நம்மாழ்வாரின் தாயார் உடையநங்கை அவதரித்த ஸ்தலம்
2. திருமாளிகை கோயிலுக்கு வாயுமூலையில் இருக்கிறது. நம்மாழ்வார் குழந்தையாகத் தவழ்வது போல் ஓர் அழகிய விக்ரகம் உள்ளது.

3. ஹநுமார் ப்ரார்த்தனைக்கிணங்க, அகஸ்தியர் இங்கு ராமாயணம் அருளியதாக ஸ்தல வரலாறு.

4. பெருமாள் பிரஸன்ன மூர்த்தியாக நான்கு கரங்களுடன் சங்கு, சக்கரங்களுடன் காட்சி தருவது கண்கொள்ளாக் காட்சியாகும்.

5. குலசேகர மஹாராஜன் மண்டப, கோபுர பிராகாராதிகளை நிர்மாணம் செய்து வாகனங்களைச் செய்து ப்ரம்மோத்சவம் செய்து வைத்ததாக வரலாறு.

6. நம்மாழ்வாரால் மட்டும் ஒரே ஒரு பாசுரத்தால் மட்டும் மங்களா சாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 70. திருவனந்தபுரம்

*புண்ணியம் செய்து நல்ல புனலொடு மலர்கள் தூவி*
*எண்ணிமின் எந்தை நாமம் இப்பிறப்பறுக்கும் அப்பால்*
*திண்ணம் நாம் அறியச்சொன்னோம் செறிபொழிலனந்தபுரத்து*
*அண்ணலார் கமலபாதம் அணுகுவார் அமரராவார்*

**- திருவாய்மொழி 10-2-5**

இத்தலம் எழில் நிறைந்த கேரள மாநிலத்தின் தலைநகரமாகத்திகழ்கிறது. திருவனந்தபுரம் ரயில் நிலையத்திலிருந்து 1 கி.மீ தொலைவில் கோயில் இருக்கிறது.

திவாகரமுனிவர் என்பவர் க்ஷீராப்திநாதனைக் கண்டு முக்தி அடைய விரும்பி, ஸதா ஹரி பூஜை செய்து கொண்டிருந்தார். அவரை அனுக்ரகிக்க, பகவான் 2 வயதுள்ள குழந்தையாக அவர் முன்தோன்றி அவருடனேயே இருந்தார். ஒரு நாள் யோகி பூஜை செய்யும்போது ஒரு ஸாளக்ராமத்தை குழந்தை வாயில் போட்டுக் கொண்டதைப் பார்த்து அவர் கண்டிக்க, குழந்தை ஓட, யோகி துரத்த, குழந்தை ஒரு மரப்பொந்தில் புகுந்து, மரம் விழுந்து, பகவான் (அனந்தசயன வடிவமாக) பெரிய உருவத்துடன் ஸேவை சாதித்ததாகவும், யோகி பிரார்த்தனைப்படி பகவான் திரிதண்டத்தளவு வடிவம் எடுத்து, திருமுக மண்டலம், நாபி, பாதம் இப்படி மூன்று த்வாரத்தால் ஸேவிக்கும்படி திருக்கோலம் பூண்டதாகவும் ஐதீகம்.

**மூலவர்** : அனந்த பத்மநாபன் - புஜங்கசயனம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : ஸ்ரீஹரிலக்ஷ்மி

**தீர்த்தம்** : மத்ஸ்ய தீர்த்தம், பத்மதீர்த்தம், வராஹதீர்த்தம்

**விமானம்** : ஹேமகூட விமானம்

**ப்ரத்யக்ஷம்** : இந்திரன், ஏகாதசருத்ரர்கள்

**சிறப்புகள் :**

1. எம்பெருமானின் திருமேனி மிகப்பெரிய வடிவமானதால் சிரஸ், உடல், திருவடிகள் இவற்றை மூன்று வாசல்கள் வழியே தனித்தனியே சேவிக்க வேண்டும்

2. இங்கு அனந்தசயன விரதம் இருப்பது விசேஷமாக கருதப்படுகிறது.

3. இச் சன்னிதியின் தெற்கில் யோக நரசிம்மனும், முன்புறம் ஆஞ்சநேயரும், பின்புறம் கிருஷ்ணரும் காட்சி அளிக்கிறார்கள். இந்த ஹனுமான் மீது சாத்தப்படும் வெண்ணெய் எவ்வளவு நாட்களானாலும் உருகுவதில்லை.

4. ஸ்வாமிதேசிகனும் மங்களா சாசனம் செய்துள்ளார்.

5. இக்கோவிலின் உள்ளே மண்டபம் ஒன்று பல இசைத் தூண்களைக் கொண்டதாயும், ஒவ்வொன்றிலும் தசாவதாரச் சிறப்பை விளக்கும் சித்திர மேம்பாட்டுடன் கூடியதாகவும் விளங்குகிறது. இதனை சப்தஸ்வர மண்டபம் என்றும் கூறுவர்.

6. நம்மாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 71. திருவாட்டாறு

*நண்ணினம் நாராயணனை நாமங்கள் பல சொல்லி*
*மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாற்றான் வந்து இன்று*
*விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே*
*எண்ணின வாறாகா இக்கருமங்கள் என்நெஞ்சே!*

- **திருவாய்மொழி** 10-6-3

இத்தலம் நாகர்கோயில் - திருவனந்தபுரம் பாதையில் 4 கி.மீ. தொலைவில் உள்ளது.

கேசி என்ற அசுரன் தேவர்களை ஹிம்சிக்க, தேவர்கள் பகவானிடம் முறையிட, பகவான் கேஸியுடன் யுத்தம் செய்து, அவனைத் தள்ளி மேலே படுத்துக் கொள்ள, கோயிலின் பத்னி ஆஸீரி கங்கையையும், தாமிரபரணியையும் துணைக்கு அழைக்க, அவ்விருவரும் வேகமாக ஓடிவர, பகவான் உத்திரவுப்படி பூமிதேவி பகவான் இருக்கும் இடத்தை மலைபோல் மேடாக்க, இது திருமகளின் செயல் என்பதை உணர்ந்த இருநதிகளும் அவ்விடத்தைச் சுற்றி இரண்டு மாலைகள் போல் வட்டவடிவில் வந்தபடியால் இவ்விடம் "வட்டாறு" என அழைக்கப்படுகிறது.

ஆதிகேசியை பகவான் நிக்ரஹம் செய்தபடியால் பகவானுக்கு ஆதிகேஸர் என்று திருநாமம். நதிகள் பிரியும் இடம் மூவாத்துமுகம் என்றும், "தோதை பரளி" என்றும் வழங்கப்படுகிறது.

**மூலவர்** : ஆதிகேசவப்பெருமாள் - புஜங்க சயனம் - மேற்கே திருமுக மண்டலம்

**தாயார்** : மரகதவல்லி நாச்சியார்

**தீர்த்தம்** : கடல்வாய் தீர்த்தம், வாட்டாறு, ராமதீர்த்தம்

**விமானம்** : அஷ்டாங்க விமானம், அஷ்டாக்ஷர விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பரசுராமன், சந்திரன்

**சிறப்புகள்**

1. திருவனந்தபுரம் போலவே, இங்கு மூன்று வாசல், 20 படிகள் ஏறிச்சென்று சன்னிதியை அடையவேண்டும். மூலவர் சன்னிதிக்கு முன்புறம் ஒரே கல்லால் ஆன ஒற்றைக்கல் மண்டபம் உள்ளது.

2. சந்திரனும், பரசுராமனும், இத்தலத்து எம்பெருமானை வழிபட்டு தவமியற்றினர்.

3. காப்ப க்ருஹத்தில் மூலவர் திருமுகமண்டலத்தில் மாலை வேளைகளில் இயற்கையாக சூரிய வெளிச்சம் விழும்படி கோயில் அமைக்கப்பட்டுள்ளது.

4. வைகுண்ட ஏகாதசி திருவிழா, சொர்க்கவாசல் திறப்பது, முளைப்பாரி உற்சவமும் இங்கு மிகச்சிறப்பானதாகும்.

5. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## நின்ற திருக்கோலம்

### கிழக்கு

72. திருவஹீந்திரபுரம்

73. திருக்கோவலூர்

ஸ்ரீ ஹேமாம்புஜவல்லீ தாயார் ஸமேத
தேவநாத பெருமாள் (திருவஹீந்த்ரபுரம்)



ஸ்ரீ வேதாந்த தேசிகன் (திருவஹீந்த்ரபுரம்)

# நடுநாட்டுத் திருப்பதிகள் - 02



## 72. திருவஹீந்திரபுரம்
## (அயிந்தை)

*வையமேழும் உண்டு ஆலிலை வைகிய மாயவன் அடியவர்க்கு*
*மெய்யனாகிய தெய்வநாயகனிடம் மெய்தகுவரைச் சாரல்*
*மொய்கொள் மாதவி செண்பகம் முயங்கிய முல்லையங் கொடியாட*
*செய்யதாமரைச் செழும் பணை திகழ்தரு திருவயிந்திரபுரமே!*

**பெரியதிருமொழி** 3 - 1 - 3

இத்தலம் கடலூர் நகரிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது. தற்காலத்தில் இத்தலம் அயிந்தை என்று வழங்கப்படுகிறது. ஆதிசேஷனால் திருவாகிய பூமியை வகிண்டு நீர் கொண்டு வரப்பட்டதால் திரு + வகிண்ட + நீர் (திருவஹிந்த்ரபுரம்) எனப் பெயர் ஏற்பட்டது. ஆதிசேஷன் கைங்கர்யத்தாலே இத்தலம் திருவஹீந்திரபுரம் என அழைக்கப்படுகிறது. அவன் பெயராலேயே தீர்த்தமும் சேஷதீர்த்தம் என அழைக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | தெய்வநாயகன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம் |
| **உத்சவர்** | : | மூவராகிய ஒருவன், தேவநாதன் |
| **தாயார்** | : | ஹேமாம்புஜ வல்லித் தாயார், வைகுண்ட நாயகி |
| **தீர்த்தம்** | : | கருடநதி, சந்த்ர தீர்த்தம், சேஷதீர்த்தம் |
| **விமானம்** | : | சந்த்ர விமானம், சுத்தஸ்தவ விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | சந்த்ரன், கருடன் |

**சிறப்புக்கள்**

1. கோயிலுக்கு எதிரில் ஔஷதகிரி என்ற குன்றின் மேல் ஹயக்ரீவர் சந்நிதி உள்ளது. ஸ்ரீ ஸ்வாமி தேசிகன் இங்கே தவம் செய்து கருடன் அருளையும், ஹயக்ரீவன் அருளையும் பெற்றார். தேசிகன் சந்நிதி பிரசித்தி பெற்றது.

2. புரட்டாசி மாதத்தில் நடக்கும் மலை உத்சவமும், தீர்த்தவாரியும் விசேஷமானவை.

3. ஸ்ரீ ஸ்வாமிதேசிகன் தன்னைப் போல் தன்னுடைய திருக்கையாலேயே ஒரு உற்சவ விக்ரகம் செய்து போட்டியில் ஜெயித்த இடம்.

4. கருடன் விரஜா தீர்த்தத்தையும், ஆதிசேஷன் பாதாள கங்கை தீர்த்தத்தையும் கொண்டு வந்து பரமனுக்கு ஸமர்ப்பித்த ஸ்தலம்

5. கோயில் ப்ரகாரத்திற்குள் இருக்கும் சேஷ தீர்த்தத்தில் பால்தெளிக்கும் வழக்கம் இருந்து வருகிறது.

6. சேஷ தீர்த்தம் நிவேதனத்திற்கும், கருட தீர்த்தம் திருமஞ்சனத்திற்கும் உபயோகப்பட்டு வருகிறது.

7. தேசிகன் 40 வருட காலம் இவ்வூரில் வசித்த திருமாளிகையும், அவர் திருக்கையால் கட்டிய கிணறும் இன்றும் ஸேவிக்கலாம்.

8. இங்குள்ள ராமபிரான் தமது இடது கரத்தில் வில்லேந்தி காட்சி தருகிறார்.

9. எண்ணற்ற அருஞ்செயல்கள் புரிந்து ஹயக்ரீவர் மீதும், தெய்வநாயகன் மீதும் அளவற்ற பக்தி கொண்டு அரும்பெரும் நூல்களை இயற்றினார் தேசிகர்.

10. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப் பட்ட ஸ்தலமாகும்.

11. மணவாள மாமுனிகளும் எழுந்தருளி மங்களாசாசனம் செய்துள்ளார். அவருக்கு இப்போதும் மாட வீதியில் ஸந்நிதி உள்ளது.

## 73. திருக்கோவலூர்

*வாரணம் கொள் இடர் கடிந்த மாலை நீல*
*மரகதத்தை மழைமுகிலே போல்வான் தன்னை*
*சீரணங்கு மறையாளர் நிறைந்த செல்வத்*
*திருக்கோவலூரதனுள் கண்டேனென்று*
*வாரணங்கு முலைமடவார் மங்கை வேந்தன்*
*வாள்கலியனொலியைந்துமைந்தும் வல்லார்*
*காரணங்களால் உலகம் கலந்து அங்கு ஏத்தக்*
*கரந்து எங்கும் பரந்தானைக் காண்பர் தாமே.*

**பெரிய திருமொழி** 2 - 10 - 10

இத்தலம் விழுப்புரம் - காட்பாடி ரயில் பாதையில் உள்ள ஓர் நிலையமாகும். திருச்சியிலிருந்து வேலூர் செல்லும் பேருந்துகள் இவ்வூர் வழியாகச் செல்கின்றன.

திருமால் திருவிக்ரம அவதாரம் எடுத்த போது பூமியை அளந்த திருவடியை பூஜித்து பூமாதேவி பெருமையுற்றாள். விண்ணோக்கி சத்ய லோகம் சென்ற திருவடியை பூஜித்து பிரம்மன் பெருமை பெற்றான். தனது கமண்டல நீரால் பிரம்மன் பூஜித்த திருவடியில் பட்டுச் சிதறிய நீர்த்துளிகளே கங்கை, கிருஷ்ணா, பத்ரா, சிலம்பாறு என்று புராணங்கள் கூறுகின்றன. மூன்றாவது அடியில் மாவலியை பாதாளம் புகுத்தி அங்கும் பெருமாள் எழுந்தருளி காட்சியளித்தார். அதே அவதாரத்தை இத்தலத்திற்கும் செய்து காட்டியதால் மூன்று உலகங்களாலும் புகழ் பெற்றதாக இத்தலம் விளங்குகிறது.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | திரிவிக்ரமன் - திருவடியை உயரே தூக்கிய நிலை - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம் |
| **உத்சவர்** | : | ஆயனார் கோவலன் (கோபாலன்) |
| **தாயார்** | : | பூங்கோவல் நாச்சியார் |
| **தீர்த்தம்** | : | பெண்ணையாறு, கிருஷ்ண தீர்த்தம், சக்ர தீர்த்தம் |
| **விமானம்** | : | ஸ்ரீகர விமானம் |
| **பரத்யக்ஷம்** | : | மகாபலி சக்ரவர்த்தி, ம்ருகண்டு, ப்ரம்மா, இந்திரன், சௌனகர், காச்யபர், காலவர், முதலாழ்வார்கள். |

**சிறப்புக்கள் :**

1. இத்தலத்தில்தான் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்ற முதலாழ்வார்கள் மூவரும் ஓரிரவில் பெருமாளையும், பிராட்டியாரையும் நேரில் இருட்டில் நெருக்கியபடி ஸேவித்து மூன்று திருவந்தாதிகளைப் பாடினார்கள்.

2. மூலவர் வலக்கையில் சங்கும், இடக்கையில் சக்ரமுமாக வலக்காலால் வையமளந்து நிற்கிறார்.

3. தேசிகன் தேஹளீசஸ்துதி இயற்றிய ஸ்தலம்.

4. கிருஷ்ணா பத்ரா நதிதான் இங்கும் ஓடும் பெண்ணையாறாகும். பிரம்ம புராணத்தின் பஞ்ச கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரங்களில் ஒன்று. மற்றவை - திருக்கண்ணங்குடி, திருக்கவித்தலம், திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை.

5. இத்தலம்தான் திவ்ய ப்ரபந்தத்திற்கு விளை நிலமாகும். ஆழ்வார்களின் மங்களா சாசனத்திற்கு அடிகோலிய ஸ்தலமாகும்.

6. முதன் முதலாக ஆழ்வார்களால் பாடப்பட்ட ஸ்தலம் இதுவேயாகும்.

7. எம்பெருமானார் ஜீயர் பரம்பரை மஹான்கள் ஆதிக்கத்திற்கு உட்பட்ட ஸ்தலம்.

8. திருமங்கையாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், ஆகிய மூன்று ஆழ்வார்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

# தொண்டை நாட்டுத் திருப்பதிகள் - 22

## திருக்கோல ஸ்தலங்கள் 74 - 95

| நின்ற கோலம் | அமர்ந்த கோலம் | கிடந்த கோலம் |
|---|---|---|
| கிழக்கு | கிழக்கு | கிழக்கு |
| 74. திருநின்றவூர் (தின்னனூர்) | 89. திருப்பாடகம் (காஞ்சீபுரம்) | 93. திருவெவ்வுள் (திருவள்ளூர்) |
| 75. திருநீர்மலை | 90. திருப்புட்குழி | 94. திருக்கடன்மல்லை (மாமல்லபுரம்) |
| 76. திருவிடவெந்தை (திருவடந்தை) | 91. திருக்கடிகை (சோளிங்கபுரம்) | |
| 77. திருவல்லிக்கேணி | | |
| 78. திருவேளுக்கை | | |
| 79. திருநீரகம் (காஞ்சீபுரம்) | | |
| மேற்கு | மேற்கு | மேற்கு |
| 80. திருக்கச்சி அத்திகிரி (காஞ்சீபுரம்) | 92. திருப்பரமேச்சுர விண்ணகரம் (காஞ்சீபுரம்) | 95. திருவெஃகா (காஞ்சீபுரம்) |
| 81. அஷ்டபுயகரம் (காஞ்சீபுரம்) | | |
| 82. திருத்தண்கா (தூப்புல்) (காஞ்சீபுரம்) | | |
| 83. திருநிலாத்திங்கள்துண்டம் (காஞ்சீபுரம்) | | |
| 84. திருவூரகம் (காஞ்சீபுரம்) | | |
| 85. திருக்கார்வானம் (காஞ்சீபுரம்) | | |
| 86. திருக்கள்வனூர் (காஞ்சீபுரம்) | | |
| 87. திருப்பவளவண்ணம் (காஞ்சீபுரம்) | | |
| தெற்கு | | |
| 88. திருக்காரகம் (காஞ்சீபுரம்) | | |



ஸ்ரீ பார்த்தசாரதி - திருவல்லிக்கேணி



ஸ்ரீ வீரராகவஸ்வாமி – ஸ்ரீ எவ்வுள் கிடந்தான்

# தொண்டை நாட்டுத் திருப்பதிகள் - 22



## 74. திருநின்றவூர் (தின்னனூர்)

*ஏற்றினை இமயத்து ளெம் மீசனை இம்மையை மறுமைக்கு*
*மருந்தினை*
*ஆற்றலை அண்டத்தப் புறத்துய்த்திடும் ஐயனைக்*
*கையிலாழியொன்றேந்திய*
*கூற்றினை குருமாமணிக்குன்றினை நின்றவூர் நின்றித்திலத்*
*தொத்தினை*
*காற்றினைப் புனலைச் சென்று நாடிக் கண்ணமங்கையுள் கண்டு*
*கொண்டேனே*

**- பெரிய திருமொழி** 7 - 10 - 5

இத்தலம் சென்னை - அரக்கோணம் ரயில் பாதையில் திருநின்றவூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 2 கி.மீ தெற்கே உள்ளது. சென்னை - பூந்தமல்லி - திருவள்ளூர் பஸ் மார்க்கம் தின்னனூர் என்று சொன்னால்தான் பலருக்கும் தெரியும்,

ஸ்ரீமந் நாராயணன் யோகநித்திரையில் இருந்த போது "திரு"வான மஹாலக்ஷ்மி தேவஸ்த்ரீகளுடன் இந்நகருக்கு எழுந்தருளி அவள் கடாக்ஷத்தினால் இவ்வூரில் எல்லாச் செல்வங்களும் நிரம்ப, "திருநின்றவூர் " என்றாயிற்று. திருவாகிய லக்ஷ்மிதேவி வைகுந்தத்தை விட்டு இங்கு வந்து நின்றதால், திரு நின்றவூராயிற்று. அதுவே தின்னனூர் என மருவியதாகச் சொல்வர்

**மூலவர்** : பக்தவத்சலப் பெருமாள் - பத்தராவிப் பெருமாள் -நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : ஸுதாவல்லி, என்னைப் பெற்ற தாயார்.

**தீர்த்தம்** : வருண புஷ்கரிணி வ்ருத்த க்ஷீரநதி

**விமானம்** : ஸ்ரீநிவாச (உத்பல) விமானம்

**ப்ரத்யக்ஷம்** : வருணன்

**சிறப்புக்கள்**

1. வராஹப் பெருமாள் தோன்றியதால் வராஹ க்ஷேத்ரம் என்று இத்தலம் பாராட்டப்படுகிறது.

2. திருமகள் இங்கு வந்து தனித்து நின்ற இடம் இப்போது இக்கோவிலின் மேற்கில் ஒரு நால்கால் மண்டபமாக உள்ளது.

3. திருமங்கையாழ்வாரால் மட்டும் இரு பாசுரங்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 75. திருநீர்மலை

*பாராருலகும் பனிமால்வரையும் கடலும்சுடரும்இவையுண்டும் எனக்கு*
*ஆராதென நின்றவன் எம்பெருமான் அலை நீருலகுக்கு அரசாகிய அப்*
*பேரானை முனிந்த முனிக்கரையன் பிறரில்லை நுனக்கெனும்*
*எல்லையினான்*
*நீரார் பேரான் நெடுமாலவனுக்கு இடம் மாமலையாவது நீர் மலையே*

- **பெரிய திருமொழி** 2 - 4 - 6

இத்தலம் சென்னை - தாம்பரம் ரயில் பாதையில் பல்லாவரம் ஸ்டேஷனிலிருந்து 6 கி.மீ தொலைவில் உள்ளது. பெருமாள் கீழே ஒருவராகவும், மலைமேலே மூவராகவும் - நின்றான் , இருந்தான், கிடந்தான், நடந்தான் - என்ற திருப்பெயர்களில் நான்கு திருக்கோலங்களில் எழுந்தருளியிருக்கிறார்.

வால்மீகி மஹரிஷி இத்தலத்திற்கு வந்து மலைமீது ஏறி ரெங்கநாதன், நரஸிம்மன், த்ரிவிக்ரமன் என்ற மூன்று மூர்த்திகளையும் வணங்கி வழிபட்டு, கீழே இறங்கி மலை அடிவாரத்திலுள்ள ஸரஸ்ஸில் கிழக்கு முகமாக நின்று கொண்டு ஸ்ரீ ராமனை த்யானம் செய்ய, ரெங்கநாதன் ராமனாகவும், லக்ஷ்மி ஜானகியாகவும், ஆதிசேஷன் லக்ஷ்மணனாகவும், சங்கு சக்கரங்கள் பரத சத்ருக்னர்களாகவும், விஷ்வக்ஸேனர் ஸுக்ரீவனாகவும், கருடன் ஹனுமானாகவும், காட்சி தந்து மறைந்த பொழுது ரிஷியின்

ப்ரார்த்தனைப்படி அற்புதமான ரூபமான நீர்வண்ணனாக ஸேவை ஸாதித்ததாகவும் ஐதீகம்.

மங்களாசாஸனம் செய்ய திருமங்கையாழ்வார் எழுந்தருளிய போது இம்மலையைச் சுற்றி நீர் அரண் போல் சூழ்ந்திருந்ததால் ஆறுமாத காலம் ஊருக்கு வெளியே காத்திருந்ததாகவும், அதனால் அம்மலைக்கு "நீர்மலை" என்று பெயர் உண்டானதாக புராண வரலாறு.

**அடிவாரக் கோயில்**

**மூலவர்** : நீர்வண்ணன், நீலமுகில் வண்ணன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : அணிமா மலர் மங்கை

**மலைமேல் கோயில்**

**மூலவர்** : 2. சாந்த நரசிம்மன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

3. ரங்கநாதன் - சயனத் திருக்கோலம் - தெற்கே திருமுக மண்டலம்

4. த்ரிவிக்ரமன் - நடந்தான் (நின்ற) திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தீர்த்தம்** : மணிகர்ணிகா தடாகம், க்ஷீர புஷ்கரணி, காருண்ய புஷ்கரிணி, ஸித்த புஷ்கரிணீ, ஸ்வர்ண புஷ்கரிணி

**விமானம்** : தோயகிரி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : தொண்டைமான், ப்ருகு, மார்க்கண்டேயர்

**சிறப்புக்கள்**

1. இத்தலம் ஆயுள் வ்ருத்தியை தரக்கூடியது. திருமணப் ப்ராப்தி ஸ்தலமாகவும் விளங்குகிறது. ப்ரார்த்தனை ஸ்தலம்

2. ஆழ்வார் 6 மாத காலம் தங்கி இருந்த இடம். இன்றும் திருமங்கை ஆழ்வார்புரம் என்று அழைக்கப்படுகிறது.

3. திருக்கோவிலூர், அஹோபிலம், திருவரங்கம், அயோத்தி ஆகிய திவ்ய தேசங்களை ஒரு சேர சேவித்த உணர்வை இம்மலையிலுள்ள பெருமாள்களை சேவித்துத் திரும்பும்போது உணர முடிகின்றது.

4 திருமங்கையாழ்வாராலும், பூதத்தாழ்வாராலும் 20 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 76. திருவிடவெந்தை (திருவடந்தை)

*அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய எம்மாயனே! அருளாய்*
*என்னும் இன் தொண்டர்க்கு இன்னருள் புரியும் இடவெந்தை*
*எந்தை பிரானை*
*மன்னு மாமாடமங்கையர் தலைவன் மானவேல் கலியன் வாயொலிகள்*
*பன்னியபனுவல் பாடுவார் நாளும் பழவினை பற்றறுப்பாரே.*

- **பெரிய திருமொழி** 2 - 7 - 10

இத்தலம் சென்னையிலிருந்து மாமல்லபுரம் செல்லும் சாலையில் கோவளத்திற்கு அடுத்த ஊராக அமைந்துள்ளது. மாமல்லபுரத்திலிருந்து சுமார் 12 கி.மீ தொலைவில் உள்ளது.

காலவ மஹறிஷியின் 360 பெண்களையும் பகவான் ஒரே கன்னிகையாக்கி மடியில் வைத்துக் கொண்டு 360 கன்னிகைகளை 360 நாள் திருமணம் செய்து கொண்டதாக பாவிப்பதால் நித்யகல்யாணன் என்று அழைக்கப்படுகிறார். திருவாகிய இலக்குமியை இடதுபுறம் ஏற்றுக் கொண்ட எம்பெருமான் ஆனபடியால், திரு + இட + எந்தை - திருவிடவெந்தையாயிற்று. காலப் போக்கில் மருவி திருவடந்தை ஆயிற்று.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | லக்ஷ்மி வராஹப் பெருமாள் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **உத்சவர்** | : | நித்ய கல்யாணப் பெருமாள் |
| **தாயார்** | : | கோமளவல்லி நாச்சியார் |
| **தீர்த்தம்** | : | வராஹ தீர்த்தம், கல்யாண தீர்த்தம் |
| **விமானம்** | : | கல்யாண விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | மார்க்கண்டேயர் |

**சிறப்புக்கள்**

1. 360 கன்னியரை ஒன்றாக்கி ஒரே பெண்ணாகச் செய்தமையால் பிராட்டிக்கு அகிலவல்ல நாச்சியார் என்ற பெயரும் உண்டு.

2. 360 கன்னியரில் முதற்கன்னிக்கு கோமளவல்லி என்று பெயர். இங்கு தனிக்கோயில் உள்ள தாயாருக்கு கோமளவல்லி நாச்சியார் என்று திருநாமம்.

3. நித்ய கல்யாண அவதாரத்தில் எழுந்தருளியிருப்பதாக ஐதீகம். இவ்விருவர் திருமேனியில் (முகத்தில்) தாடையில் பொட்டு இயற்கையாகவே அமைந்திருப்பது கண்கூடு.

4. திருமங்கை ஆழ்வாரால் மட்டும் 13 பாசுரங்களில் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 77. திருவல்லிக்கேணி

*வந்துதைத்த வெண்திரைகள் செம்பவளம் வெண்முத்தம்*
*அந்தி விளக்கு மணி விளக்காம் - எந்தை*
*ஒரு வல்லித்தாமரையாள் ஒன்றிய சீர் மார்வன்*
*திருவல்லிக்கேணியான் சென்று*

- **மூன்றாம் திருவந்தாதி** - 16

*தாளால் உலகம் அளந்த அசைவே கொல்?*
*வாளாக்கிடந்தருளும் வாய்திறவான் - நீளோதம்*
*வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்*
*ஐந்தலைவாய் நாகத்தணை*

- **நான்முகன் திருவந்தாதி** - 35

*வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை விழுமிய முனிவர் விழுங்கும்*
*கோதிலின் கனியைநந்தனார் களிற்றைக்குவலயத்தோர்தொழுதேத்தும்*
*ஆதியை அமுதை என்னையாளுடையப்பனை ஒப்பவரில்லா*
*மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே*

- **பெரிய திருமொழி** 2 - 3 - 2

இத்தலம் சென்னையிலேயே உள்ளது. ஸ்ரீ கிருஷ்ணன் குடும்ப ஸமேதனாய் எழுந்தருளியிருப்பது இத்தலத்தில் மட்டுமே. அழகிய அல்லி மலர்கள் நிரம்பிய குளத்தை உடைய ஊர் என்ற காரணத்தால் திருவல்லிக்கேணி என்று வழங்கப்படுகிறது. திருப்பதி பெருமாள் ஸுமதி என்ற அரசனுக்கு இத்தலத்தில் வேங்கட கிருஷ்ணனாக ஸேவை சாதித்த படியால் இரண்டாவது திருப்பதி எனப்படுகிறது. புரட்டாசி சனிக்கிழமைகள் திருப்பதியைப் போலவே விசேஷம் வாய்ந்தவை. கண்ணன் அர்ஜுனனுக்கு ஸாரதியாய் இருந்து பீஷ்மர் விட்ட அம்புகளை அர்ஜுனனுக்காக ஏற்றதைக் காண்பிக்க இன்றைக்கும் ஸ்ரீ பார்த்தசாரதி (உத்ஸவர்) திருமுக மண்டலத்தில் வடுக்களைக் காணலாம்.

திருவேங்கடமுடையான், ஸுமதி என்னும் துண்டீர மண்டலாதிபதிக்கு, பாரத யுத்தத்தில் அர்ஜுனனுக்கு ஸாரத்யம் செய்த திருக்கோலத்துடன் ஸேவை சாதிக்கிறேன் என்று வாக்களித்தபடி, ஆத்ரேய மஹரிஷியைக் கொண்டு பார்த்தசாரதியை சங்கம் வலக்கையிலும், தான முத்திரை இடக்கையிலுமாக ப்ரமாணப்படி அர்ச்சா விஹாரத்தை அமைத்து ருக்மணி, பலராமன், ஸாத்யகி, அநிருத்தன், ப்ரத்யும்னன் இவர்களோடு வைகாநஸ விதியாலே ப்ரதிஷ்டை செய்ததாக ஐதீகம்.

மூலவருக்கு இரண்டே திருக்கரங்கள். வலது கையில் சங்கம், இடது கையில் கோல். தான் வளர்ந்த குல வழக்கத்திற்கேற்ப பெரிய மீசை உண்டு. திருவேங்கடத்தானே கண்ணனாக (பார்த்தஸாரதியாக) ஸேவை ஸாதிப்பதாகக் கூறப்படுகிறது. வலதுபுறம் ருக்மணி பிராட்டியும், இடதுபுறம் தம்பி சாத்யகியும், தெற்கே அண்ணா பலராமனும், வடக்கே பிள்ளை ப்ரத்யும்னனும், பேரன் அநிருத்தனும் எழுந்தருளியிருக்கின்றனர்.

**மூலவர்** : 1. வேங்கடகிருஷ்ணன், ருக்மணி பிராட்டியுடன் (பலராமன், ஸாத்யகி, அநிருத்தன் ப்ரத்யும்னன்) இவர்களோடு நின்ற திருக்கோலம். கிழக்கே திருமுக மண்டலம்

**உத்சவர்** : பார்த்தசாரதி

மூலவர் : 2. ரங்கநாதன், மன்னாதன், புஜங்க சயனம் கிழக்கே திருமுக மண்டலம்

தாயார் : வேதவல்லி

மூலவர் : 3. ஸீதா லக்ஷ்மண, பரத, சத்ருக்ன, ஹனுமாருடன் ஸ்ரீராமர் - நின்ற திருக்கோலம் - தெற்கே திருமுக மண்டலம்

மூலவர் : 4. வரதராஜன், தேவப்பெருமாள், கருடன் மீதமர்ந்த திருக்கோலம், கிழக்கே திருமுக மண்டலம்

மூலவர் : 5. தெள்ளியசிங்கர் (நரஸிம்மன்) - வீற்றிருந்த திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம். வடமேற்குப்பக்கம் ஆண்டாள் சந்நிதி உண்டு.

தீர்த்தம் : கைரவிணி ஸரஸ் (அல்லிக்கேணி) - இந்தப் புஷ்கரிணியில் இந்த்ர, ஸோம, மீன, அக்னி, விஷ்ணு என்ற 5 தீர்த்தங்கள் சூழப்பட்டதாக ஐதீகம்.

விமானம் : ஆநந்த விமானம், ப்ரணவ விமானம், புஷ்பக விமானம், சேஷ விமானம், தைவிக விமானம்

ப்ரத்யக்ஷம் : ஸுமதிராஜன், ப்ருகு மஹரிஷி, மதுமான் மஹரிஷி, அத்ரி மஹரிஷி, ஜாஜலி மஹரிஷி

சிறப்புக்கள் :

1. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் திருமலையைப் போலவே ஸ்ரீ வேங்கடகிருஷ்ணனுக்கும் திருமஞ்சனம் நடைபெறுகிறது.
2. இக்கோயிலில் ஐப்பசி திருமூல நன்னாளில் நடைபெறும் கைத்தலஸேவை சிறப்பு வாய்ந்தது.
3. பேயாழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசை ஆழ்வார், ஆகிய மூவராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 78. திருவேளுக்கை (காஞ்சீபுரம்)

*அன்றிவ்வுலகம் அளந்த அசைவே கொல்?*
*நின்றிருந்து வேளுக்கை நீள் நகர்வாய் - அன்று*
*கிடந்தானைக் கேடில் சீரானை முன்கஞ்சைக்*
*கடந்தானை நெஞ்சமே! காண்.*

**- மூன்றாம் திருவந்தாதி - 34**

இத்தலம் காஞ்சீபுரத்திலேயே, அஷ்டபுயக்கரத்திலிருந்து 1கி.மீ தெற்கேயும், விளக்கொளி பெருமாள் கோயிலுக்குத் தெற்கேயும் உள்ளது.

"வேள்" என்ற சொல்லுக்கு "ஆசை" என்று பொருள். நரஸிம்மன் ஆசையுடன் வசிக்கும் இடமாதலால் வேளிருக்கை (வேளுக்கை) எனப் பெயர் பெற்றதாக ஐதீகம்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | அழகியசிங்கர், ந்ருஸிம்மர், முகுந்த நாயகன் - அமர்ந்த திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | வேளுக்கை வல்லி, அம்ருத வல்லி |
| **தீர்த்தம்** | : | கனக ஸரஸ், ஹேம ஸரஸ் |
| **விமானம்** | : | கனக விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | ப்ருகு முனிவர் |

**சிறப்புக்கள்:**

1. ந்ருஸிம்மன் ஹஸ்திசைல குகையில் இருந்தபடியே வேறொரு ந்ருஸிம்ம வடிவம் கொண்டு, மேற்கு திக்கில் அசுரர்களை துரத்திக் கொண்டு போய் அசுரர்கள் மறுபடி வராதபடி செய்ய அங்கேயே யோகந்ருஸிம்மராக இருக்கிறார். இது காமாசஷிகா ந்ருஸிம்மன் சந்நிதி.
2. ஸ்ரீஸ்வாமி தேசிகன் இப்பெருமாள் மீது "காமாசி காஷ்டகம்" அருளியுள்ளார்.
3. இங்கு பெருமாள், தாயார், கருடன் ஆகியோருக்கும் சன்னிதி உண்டு.

4. பேயாழ்வார், திருமங்கையாழ்வார் - இருவரும் 4 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## 79. திருநீரகம் (காஞ்சீபுரம்)

*நீரகத்தாய் நெடுவரையினுச்சிமேலாய்!*
*நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி*
*ஊரகத்தாய்! ஒண்துறை நீர்வெஃகாவுள்ளாய்!*
*உள்ளுவாருள்ளத்தாய்! உலகமேத்தும்*
*காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!*
*காமருபூங்காவிரியின் தென்பால் மன்னு*
*பேரகத்தாய்! பேராது என்னெஞ்சினுள்ளாய்!*
*பெருமான்! உன்திருவடியே பேணினேனே.*

**- திருத்தொண்டகம் 8**

இத்தலம் பெரிய காஞ்சீபுரத்தில் (ஊரகம்) உலகளந்த பெருமாள் கோயிலிலேயே உள்ளது. மூலவர் எங்குள்ளார்? பழைய கோயில் எங்குள்ளது? தீர்த்தம் எங்குள்ளது? என்றெல்லாம் தெரியவில்லை.

**மூலவர்** : இல்லை

**உத்சவர்** : ஜெகதீஸ்வரர் - நின்ற திருக்கோலம் - தெற்கே திருமுக மண்டலம்

**தாயார்** : நிலமங்கைவல்லி

**விமானம்** ; ஜெகதீஸ்வர விமானம்

**தீர்த்தம்** : அக்ரூர தீர்த்தம்

**ப்ரத்யக்ஷம்** : அக்ரூரர்

**சிறப்புக்கள் :**

1. திருஊரகத் தலத்தின் 2 வது பிரகாரத்தில் 16 கால் மண்டபத்தில் நீரகத்தான் சன்னதி உள்ளது.

2. திருமங்கையாழ்வாரால் ஒரே ஒரு பாசுரத்தால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட ஸ்தலம்

## 80. திருக்கச்சி அத்திகிரி (காஞ்சீபுரம்)

*என்னெஞ்சம் மேயான் என் சென்னியான் தானவனை*
*வன்னெஞ்சம் கீண்ட மணிவண்ணன் - முன்னம் சேய்*
*ஊழியான் ஊழிபெயர்த்தான் உலகேத்தும்*
*ஆழியான் அத்தியூரான்*

- **இரண்டாம் திருவந்தாதி** - 95

இத்தலம் செங்கல்பட்டு - அரக்கோணம் ரயில் பாதையில் உள்ளது. சென்னையிலிருந்து காஞ்சீபுரத்திற்கு பேருந்துகளும் உள்ளன.

ஐராவதமே மலையுருவில் எம்பெருமானை தாங்கினமையால், இதற்கு அத்திகிரி (வேதகிரி) என்று பெயர் ஏற்பட்டது. முன்பு ஒரு காலத்தில் ப்ரும்மா இங்கு யாகம் செய்ததால் இது (க - ப்ரும்மாவினால், அஞ்சிதம் - பூஜிக்கப்பட்டது என்பதனால்) காஞ்சி என்று பெயர் பெற்றதாக புராண வரலாறு. இங்கு குளத்தில் மூழ்கிக் கிடத்தப்பட்டிருக்கும் அத்திவரதர் என்ற அத்தி மரத்தாலான சிலை 40 வருடங்களுக்கு ஒருமுறை வெளியில் எடுக்கப்பட்டு 10 தினங்கள் சேவைக்கு வைக்கப்படுகிறது. இங்கு ப்ரும்மா செய்த யாகத்திற்கு உகந்து எம்பெருமான் வரம் தந்ததால் வரதராஜன் என அழைக்கப்படுகிறார்.

அயோத்தி அதிபதியான ஸகரனுடைய பிள்ளை அஸமஞ்சனும் அவன் மனைவியும் சாபவசத்தால் பல்லிகள் ஆயினர். உபமன்யு என்பவர் இந்தப்பல்லிகளுக்கு ஸ்ரீ வரதனை ஸேவை செய்து வைத்த மாத்திரத்தில் பல்லிகள் நிஜரூபமெடுத்து ஸ்வர்க்கம் சென்றன. உபமன்யுவின் சரணாகத ரக்ஷணம் உலகுக்கு நிரந்தரமாகப் ப்ரகாசிக்க, பல்லிகளின் சரீரங்கள் தன் ப்ராகாரத்தில் ஸ்வர்ண சிரஸுகளுடன் இருக்கட்டும் என்றும், தன்னை ஸேவித்து ப்ரகாரத்திலிருக்கும் இந்தப் பல்லிகளை யார் தொடுகிறார்களோ அவர்களுடைய சகல வ்யாதிகளும் நீங்கும் என்றும் ஸ்ரீ வரதன் அருள்புரிந்தார். இதற்கிணங்க, நோயுற்றவர்கள் ஸ்ரீ வரதனை ஸேவித்து பல்லிகளைத் தொட்டு வியாதிகளிலிருந்து நிவர்த்தி அடைகிறார்கள்.

**மூலவர்** : ஸ்ரீ வரதராஜன், பேரருளாளன், தேவாதிராஜன், தேவப்பெருமாள் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்

**தாயார்** : பெருந்தேவித் தாயார், மஹாதேவி.

**தீர்த்தம்** : வேகவதி நதி, அனந்த ஸரஸ், சேஷ, வராஹ, ப்ரம்ம தீர்த்தங்கள்

**விமானம்** : புண்யகோடி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ப்ரம்மா, பிருகு, நாரதர், கஜேந்திரன்

**சிறப்புக்கள்**

1. ஸ்ரீரங்கத்தைப் போலவே உபய வேதாந்த வித்வான்களின் காலக்ஷேபங்களாலும், மற்ற பல அறவழிகளாலும் வைணவம் வளர்க்கப்பட்ட திவ்ய க்ஷேத்ரம்.
2. எம்பெருமானின் வைகாசி விசாக கருடசேவை மிகப் பிரசித்தி பெற்றது.
3. பொய்கையாழ்வார், ஸ்ரீஸ்வாமி தேசிகன் அவதார ஸ்தலம்
4. கலைச்சிற்பங்கள் கொண்ட நூற்றுக்கால் மண்டபம் ஒன்றும் இங்குள்ளது.
5. 108 வைணவத் தலங்களில், கோயில் என்று திருவரங்கத்தையும், திருமலை என்று திருவேங்கடத்தையும், பெருமாள்கோயில் என்று இத்தலத்தையும் குறிப்பர்.
6. கூரத்தாழ்வான் ராமானுஜரின் நியமனப்படி வரதராஜஸ்தவம் அருளிச்செய்து, இழந்த தம் கண்களைப் பெற்றது இத்தலத்தில்தான்.
7. ராமானுஜர் தம் இளமைக் காலத்தில் செலவிட்ட திருமாளிகை இன்றும் உள்ளது. இதற்கு உடையவர் திருமாளிகை என்று பெயர்.
8. திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூன்று ஆழ்வார்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 81. அஷ்டபுயகரம் (காஞ்சீபுரம்)

*கலைகளும், வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை*
*நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினால் அருள் செய்து நீண்ட*
*மலைகளும் மாமணியும் மலர்மேல் மங்கையும் சங்கமும் தங்குகின்ற*
*அலைகடல் போன்று இவரார் கொல்? என்ன அட்டபுயகரத்தேனென்றாரே.*

**- பெரிய திருமொழி 2 - 8 - 5**

இத்தலம் காஞ்சியிலேயே வரதராஜர் சந்நிதியிலிருந்து 2 கி.மீ மேற்கே உள்ளது. ஹாட்ஸன்பேட்டை தேரடிக்கு அருகில் உள்ளது.

ந்ருஸிம்மனை கொல்லவேண்டும் என்று வந்த சரபம் அஷ்டபுஜத்தானைக் கண்டு பயந்து விஷ்ணுவை சரணம் அடைந்தது. பகவான் ஆக்ஞைப்படி யாகசாலைக்கு வாயு மூலையில் சரபேசன் என்று பெயருடன் சிவன் யாகத்தை காப்பதாக ஐதீகம்.

ஒரு யானை, ஸுக்ருத விசேஷத்தினால் அஷ்ட புஜக் குளத்தில் தாமரைப் பூ பறித்து எம்பெருமானை ஆராதித்து வரும் போது, ஒருநாள் யானையை குளத்தில் ஒரு முதலை பிடித்துக் கொள்ள, யானை பகவானை சரணடைய பகவான் தம் ஸுதர்ஸனத்தினால் அந்த முதலையைக் கொன்று யானையை ரக்ஷித்த ஸ்தலம்.

மூலவர் எட்டு திருக்கரங்களில் எட்டு ஆயுதங்களுடன் வலதுபுறம் நான்கு திருக்கைகளில் சக்கரம், கத்தி, புஷ்பம், அம்பு ஆகியவைகளும், இடதுபுறம் நான்கு திருக்கைகளில் சங்கம், வில், கேடயம், கதை ஆகியவைகளையும் ஏந்திய வண்ணம் ஸேவை சாதிக்கிறார். உத்சவருக்கு நான்கு புஜங்களே உள்ளன. கதையும் வேலும் உண்டு.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | ஆதிகேசவப் பெருமாள் - அஷ்டபுஜப் பெருமாள் - கஜேந்திர வரதன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | அலர்மேல் மங்கை, பத்மாஸனி |
| **தீர்த்தம்** | : | கஜேந்திர புஷ்கரிணி |
| **விமானம்** | : | ககநாக்ருதி (வ்யோமாகார விமானம்) சக்ராக்ருதி விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | கஜேந்திரன் |

**சிறப்புக்கள்:**

1. 108 திவ்ய தேசங்களில், எம்பெருமான் எட்டுக் கரங்களுடன் எழுந்தருளியிருப்பது இங்கு மட்டும்தான்.

2. தொண்டை மண்டல திவ்ய தேசங்களில் இங்கு மட்டுமே பரமபத வாயில் உள்ளது.

3. இக்கோவிலில் அமைந்துள்ள வராகப் பெருமாள் சன்னதி, சக்கரவர்த்தித் திருமகன் சன்னதி , புஷ்பவல்லித் தாயார் சன்னதி, ஆண்டாள் சன்னதி, ஆகியவை பேரழகு பொருந்தியவை.

4. திருமங்கையாழ்வாரும், பேயாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

**82. திருத்தண்கா (தூப்புல்) காஞ்சீபுரம்**

*முளைக் கதிரைக் குறுங்குடியுள் முகிலை, மூவா*
*மூவுலகும் கடந்து அப்பால் முதலாய் நின்ற*
*அளப்பரிய ஆரமுதை அரங்கம் மேய*
*அந்தணனை அந்தணர்தம் சிந்தையானை*
*விளக்கொளியை மரகதத்தைத் திருத்தண்காவில்*
*வெஃகாவில் திருமாலைப் பாடக்கேட்டு*
*வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று*
*மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே*

**- திருநெடுந்தாண்டகம் - 14**

இத்தலம் காஞ்சியிலேயே அஷ்டபுயகரத்திலிருந்து 1/2 கி.மீ தொலைவில் உள்ளது. ப்ரும்மா செய்யும் யாகத்தைக் கெடுக்க வந்த அசுரர்கள் உலகம் முழுவதையும் இருட்டாக்கிவிட, எம்பெருமான் ஒரு பேரொளியாய் தோன்றி இருட்டைப் போக்கினதால், தீபப்பிரகாசர் என்றும் "விளக்கொளி" என்றும் திருநாமம் ஏற்பட்டதாக ஸ்தலபுராணம்.

மூலவர் : தீபப் பிரகாசர் - விளக்கொளிப் பெருமாள் , திவ்யப் பிரகாசர் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்

தாயார் : மரகதவல்லி

தீர்த்தம் : ஸரஸ்வதி தீர்த்தம்

விமானம் : ஸ்ரீகர விமானம்

ப்ரத்யக்ஷம் : சரஸ்வதி

**சிறப்புக்கள்**

1. குளிர்ச்சி பொருந்திய சோலையை தெரிவு செய்து பிரம்மன் வேள்விச்சாலை அமைத்த இடமாதலால் திருத்தண்கா என்றாயிற்று. (தண் - குளிச்சி, கா - சோலை)

2. ஸ்ரீ பாஷ்யகார ஸித்தாந்த ஸாம்ராஜ்ய பட்டாபிஷிக்தரான ஸ்ரீ ஸ்வாமி தேசிகனின் திரு அவதாரஸ்தலம், இங்கு அவருடைய ஸந்நிதி இருக்கிறது.

3. வேதாந்த தேசிகன் ஸன்னதியில் உட்புறச் சுவர்களில் ஸ்வாமி தேசிகன் வைபவம் முழுவதும் சித்திரமாக வரையப்பட்டுள்ளது. தேசிகன் ஞான முத்திரையோடு எழுந்தருளியிருக்கிறார். தேசிகனுடைய குமாரரான நயின வரதாச்சாரியார் பிரதிஷ்டை செய்த திருமேனி. ஸ்ரீ தேசிகன் வழிபட்ட திருவாராதனப் பெருமாளான ஸ்ரீ லக்ஷ்மி ஹயக்ரீவர் எழுந்தருளியிருக்கிறார். தேசிகன் சன்னதி தெற்கு நோக்கி அமைந்துள்ளது.

4. ஸ்ரீ ஸ்வாமிதேசிகன் இப்பெருமாள் விஷயமாக சரணாகதி தீபிகை அருளியுள்ளார்.

5. திருமங்கையாழ்வாரால் மட்டும் 2 பாசுரங்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 83. திருநிலாத்திங்கள் துண்டம்
## (காஞ்சீபுரம்)

*நீரகத்தாய் நெடுவரையினுச்சி மேலாய் !*
*நிலாத்திங்கள் துண்டத்தாய் ! நிறைந்த கச்சி*
*ஊரகத்தாய் ஒண்துறை நீர் வெஃகாவுள்ளாய் !*
*உள்ளுவாருள்ளத்தாய் ! உலகமேத்தும்*
*காரகத்தாய்! கார் வானத்துள்ளாய்! கள்வா!*
*காமரு பூங்காவிரியின் தென்பால் மன்னு*
*பேரகத்தாய்! பேராது என்நெஞ்சினுள்ளாய்!*
*பெருமான்! உன்திருவடியே பேணினேனே.*

**- திருநெடுந்தாண்டகம் .8**

இத்தலம் பெரிய காஞ்சீபுரம் ஏகாம்பரேஸ்வரர் கோயிலின் உட் ப்ராகாரத்தில் உள்ளது.

இங்கே ஒரு மாமரத்தின் கீழே பார்வதி தவம் செய்ததாகவும், சிவன் பார்வதியின் தவத்தை சோதிக்க அம்மாமரத்தை எரிக்க, பார்வதி வாமனனைப் ப்ரார்த்திக்க, வாமனர் சங்க, சக்ர கதாபாணியாக அம்ருத கிரணங்கள் கொண்டு மாமரத்தை தழைக்கச் செய்ய, பார்வதி தன் தாபம் தீர்ந்து, தவம் செய்ததாகவும், பார்வதியின் தாபத்தை துண்டித்தபடியால் பெருமாளுக்கு, "நிலாத்திங்கள் துண்டத்தான்" என்று பெயர் உண்டாயிற்று.

சிவன் தன் தலையிலுள்ள கங்கையை பார்வதியின் தவத்தைக் கெடுக்க ஏவ, கங்கையும் வேகமாக வர, தமக்கை - யாயிற்றே என்று எண்ணி தன் யாகத்திற்கு ஊறு விளைவிக்க வேண்டாமென்று கங்கையை வேண்டினாள். கங்கை அதை பொருட்படுத்தவில்லை. பார்வதி தன் பக்தியினால் மணலினால் லிங்கம் செய்து தவமிருந்தாள். கங்கையால் அந்த லிங்கத்தைக் கரைக்க முடியவில்லை. மிக்க சந்தோஷத்துடன் அந்த லிங்கத்தை ஆலிங்கனம் செய்து கொண்டாள். இவ்விருவருக்கும் நிலாத்திங்கள் துண்டத்தான் அருள் பாலித்தார்.

மூலவர் : நிலாத்திங்கள் துண்டத்தான், சந்திர சூடப் பெருமாள் நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுகமண்டலம்

தாயார் : நேர் ஒருவரில்லா வல்லி, நிலாத்திங்கள் துண்டத்தாயார்

தீர்த்தம் : சந்திர புஷ்கரிணி

விமானம் : புருஷஸூக்த விமானம்

ப்ரத்யக்ஷம் : சிவன்

**சிறப்புக்கள் :**

1. பெருமாள் பார்ப்பதற்கு பேரழகு பொருந்தியவர் - குளிர்ந்த கிரணங்களை வீசிக் கொண்டேயிருக்கிறார்.
2. திருமங்கையாழ்வாரால் மட்டும் ஒரு பாசுரத்தால் மங்களா சாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 84. திருஊரகம் (காஞ்சீபுரம்)

*நின்றது எந்தை ஊரகத்து இருந்தது எந்தை பாடகத்து*
*அன்று வெஃகணைக் கிடந்தது என்னிலாத முன்னெலாம்*
*அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்*
*நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே.*

**- திருச்சந்தவிருத்தம்** - 64

*நீரகத்தாய் நெடுவரையினுச்சி மேலாய்!*
*நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறந்தகச்சி*
*ஊரகத்தாய்! ஒண்துறை நீர் வெஃகாவுள்ளாய்!*
*உள்ளவாருள்ளத்தாய்! உலகமேத்தும்*
*காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா*
*காமரு பூங்காவிரியின் தென்பால் மன்னு*
*பேரகத்தாய் ! பேராது என்னெஞ்சினுள்ளாய்!*
*பெருமான்! உன் திருவடியே பேணினேனே!*

**- திருநெடுந்தாண்டகம்** - 8

இத்தலம் காஞ்சி நகரத்திற்குள்ளேயே அமைந்துள்ளது. இங்கு ஊரகம் (பேரகம்) தவிர நீரகம், காரகம், கார்வானம் ஆகிய மூன்று திவ்ய தேசங்களின் பெருமாள்கள் எழுந்தருளியிருக்கின்றனர். பலிச்சக்ரவர்த்தி பகவானைப் பணிந்து பகவான் த்ரிவிக்ரமாவதாரம்

செய்த பொழுது பகவான் திருவடியின் கீழ் அகப்பட்டுக் கொண்டபடியால், த்ரிவிக்ரம கோலத்தை ஸேவிக்க வேண்டும் என்ற ப்ரார்த்தனைக்கு இணங்க ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தில் (காஞ்சீபுரத்தில்) அந்த அவதாரத்தை எடுத்துக் காண்பித்ததாக உலகளந்த பெருமாள் கோயில் வரலாறு. உலகளந்த பெருமாள், ஊரகம் இரண்டும் சேர்ந்து ஒரே திவ்ய தேசமாகக் கருதப்படுகிறது. மிகப்பெரிய திருவுருவத்தை நிமிர்ந்து சேவிக்க முடியாமல் போன மஹாபலிக்காக உலகளந்த பெருமாள் ஸந்நிதிக்குப் பக்கத்தில் ஒரு சிறிய சந்நிதியில் எம்பெருமான் ஆதிசேஷனாய் திருக்கோலம் கொண்டு ஸேவை சாதித்ததாக க்ஷேத்திர வரலாறு.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | உலகளந்த பெருமாள், த்ரிவிக்ரமன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | அமுதவல்லி நாச்சியார் |
| **உத்சவர்** | : | பேரகத்தான் |
| **தீர்த்தம்** | : | நாகதீர்த்தம் |
| **விமானம்** | : | ஸார ஸ்ரீகர விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | ஆதிசேஷன் |

**சிறப்புக்கள்**

1. இங்கு எழுந்தருளியிருக்கும் உலகளந்த பெருமாள் மிகப் பிரம்மாண்டமானவர். பேரகத்தான் என்ற திருநாமம். இவர் தனது இரண்டு கரங்களை நீட்டி தனது இடது காலை விண்ணோக்கித் தூக்கிய திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறார்.

2. அதே போல் பேரகத்தில் எழுந்தருளியுள்ள ஆதிசேஷன் மிகப் பிரசித்தி வாய்ந்தவர்.

3. ஊரகம், நீரகம், காரகம், கார்வானம், பேரகம், திருவெஃகா, திருநிலாத்திங்கள் துண்டம் ஆகிய திவ்ய தேசத்து எம்பெருமான்களையும் சேர்த்து திருமங்கை ஆழ்வார் ஒரே பாசுரத்தில் மங்களாசாசனம் செய்துள்ளார்.

4. திருமழிசையாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 85. திருக்கார் வானம் (காஞ்சீபுரம்)

*நீரகத்தாய் நெடுவரையினுச்சி மேலாய்*
*நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி*
*ஊரகத்தாய்! ஒண்துறை நீர் வெஃகாவுள்ளாய்!*
*உள்ளுவாருள்ளத்தாய்! உலகமேத்தும்*
*காரகத்தாய்! கார்வானத்துள்ளாய் ! கள்வா!*
*காமரு பூங்காவிரியின் தென்பால் மன்னு*
*பேரகத்தாய்! பேராறு என்னெஞ்சினுள்ளாய்!*
*பெருமான்! உன் திருவடியே பேணினேனே.*

**- திருநெடுந்தாண்டகம் 8**

இத்தலம் பெரிய காஞ்சியில் (ஊரகத்தில்) உலகளந்த பெருமாள் கோயில் மேற்கு ப்ராகாரத்திலேயே ஒரு சந்நிதியாக உள்ளது.

திருவூரகம் சன்னிதிக்குள் எழுந்தருளியுள்ள இந்த கார்வானத்தான் பெயரே இனிக்கும் தமிழ்ச் சொல்லாகும். கார்மேகம் சூழந்த வானத்திற்குள் வானுலகில் உள்ள மாயவனான கள்வனே இங்கு எழுந்தருளியுள்ளான் என்று பொருளாகும்.

**மூலவர்** : கார்வானர் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்

**தாயார்** : கமலவல்லி (தாமரையாள்)

**தீர்த்தம்** : கௌரி தடாகம் (தராதர தீர்த்தம்)

**விமானம்** : புஷ்கல விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பார்வதி

**சிறப்புக்கள்**

1. இத்தலம் பரமபதத்திற்கு சமமான ஸ்தலம் என்று கூறலாம்.
2. திருமங்கையாழ்வாரால் மட்டும் ஒரே ஒரு பாசுரத்தால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 86. திருக்கள்வனூர் (காஞ்சீபுரம்)

*நீரகத்தாய் நெடுவரையினுச்சி மேலாய்*
*நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்தகச்சி*
*ஊரகத்தாய்! ஒண்துறை நீர் வெஃகாவுள்ளாய்!*
*உள்ளுவாருள்ளத்தாய்! உலகமேத்தும்*
*காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!*
*காமருபூங்காவிரியின் தென்பால் மன்னு*
*பேரகத்தாய்! பேராது என்னெஞ்சினுள்ளாய்!*
*பெருமான்! உன் திருவடியே பேணினேனே.*

**- திருநெடுந்தாண்டகம் - 8**

இத்தலம் பெரிய காஞ்சீபுரத்தில் காமாக்ஷி அம்மன் கோயிலுக்குள் அம்மன் கர்ப்பக்கிரகத்துக்கு வலப்பக்கம் இருக்கிறது.

ஒரு காலத்தில் சிவபெருமானுக்கும் பார்வதிக்கும் தர்க்கம் ஏற்பட, சிவபெருமான் கோபமடைந்து பார்வதியை சபிக்க, பார்வதி சிவனடி பணிந்து க்ஷமிக்க வேண்ட, சிவன் ஆக்ஞைப்படி ஒரு காலால் நின்று வாமனரை நோக்கித் தவம் செய்து காமாக்ஷி என்று பெயர் பெற்று சிவபெருமானை மணந்ததாக ஐதீகம்.

ஸ்ரீமன் நாராயணன் காமகோஷ்டத்தில், பஞ்ச தீர்த்தத்தின் கரையில் லக்ஷ்மி, பார்வதியுடன் ஸல்லாபம் செய்வதை ஒளிந்து கேட்ட படியால், பார்வதி பெருமாளுக்கு கள்வன் என்ற பெயர் சூட்டினாள். பார்வதியின் பிரார்த்தனைக்கு இணங்க, பகவான் பூதத்தின் மேல் நின்று, மறுபடி இருந்து, மறுபடி கிடந்தபடியால், நின்றான், இருந்தான், கிடந்தான் என்ற சந்நிதிகள் ஏற்பட்டுள்ளன.

தாயாரும் தீர்த்தமும் இப்போது காணப்படவில்லை. ஸ்ரீ காமாக்ஷி அம்மன் திருக்குளத்தின் வடகிழக்கு மூலையில் ஒரு ஸந்நிதியில் மூன்று அடுக்குகளில் "நின்றான், இருந்தான், கிடந்தான்" என்று மூன்று திருக்கோலங்கள் உள்ளன.

**மூலவர்** : கள்வர் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்

**தாயார்** : அஞ்சிலை வல்லி நாச்சியார்

**தீர்த்தம்** : நித்ய புஷ்கரிணி

**விமானம்** : வாமன விமானம்

**ப்ரத்யக்ஷம்** : அச்வத்த நாராயணன், பார்வதி, லக்ஷ்மி

**சிறப்புக்கள்**

1. 108 திவ்ய தேசங்களில் மிகச் சிறிய வடிவிலான மூர்த்தியாக எழுந்தருளியிருப்பது இங்கு மட்டும்தான்.
2. நித்யப்படி பூஜை காமாட்சி அம்மன் கோவில் அர்ச்சகர்களாலேயே செய்யப்படுகிறது.
3. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 87. திருப்பவளவண்ணம் (காஞ்சீபுரம்)

*வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர்*
*மல்லையாய்! மதிள் கச்சியூராய் ! பேராய்!*
*கொங்க (கு) த்தார் வளங்கொன்றையலங்கல் மார்வன்*
*குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்*
*பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின் மேலாய்!*
*பனிவரையினுச்சியாய்! பவளவண்ணா!*
*எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னை நாடி*
*ஏழையென் இங்ஙனமே உழிதருகேனே.*

**- திருநெடுந்தாண்டகம் - 9**

இத்தலம் பெரிய காஞ்சீபுரத்தில் ஏகாம்பரநாதர் கோயிலுக்குக் கிழக்கே உள்ளது. இதற்கு 1/2 கி.மீ மேற்கே பச்சை வண்ணரின் ஸந்நிதி மங்களாசாஸனம் செய்யப்படவில்லை. பவளவண்ணன், பச்சை வண்ணன் சந்நிதிகள் இரண்டும் எதிரெதிராக அமைந்துள்ளன. கொடிய அரக்கர்களை நொடிப்பொழுதில் த்வம்சம் செய்து ரததம் தோய நின்றார் பெருமாள். இவ்வாறு ரத்தம் தோய ப்ரவாளேசராக, ப்ரவாளேசவண்ணராக நின்றதால் ப்ரவாளேசரானார் - பவள வண்ணமானார்.

மூலவர் : பவளவண்ணன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்

தாயார் : பவளவல்லி

தீர்த்தம் : சக்ரதீர்த்தம்

விமானம் : ப்ரவாள விமானம்

ப்ரத்யக்ஷம் : அச்வினி தேவதை, பார்வதி

**சிறப்புக்கள் :**

1. எம்பெருமானின் நிறத்தைக் கொண்டு மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்

2. இந்த ஸந்நிதிகள் ஒன்றுக்கொன்று எதிர்திசையில் அமைந்துள்ளன. பச்சைவண்ணர் ஆதிசேஷன் மீது வீற்றிருந்த திருக்கோலத்தில் பரமபதநாதனாக எழுந்தருளி உள்ளார். ப்ருகு மஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம். திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 88. திருக்காரகம் (காஞ்சீபுரம்)

*நீரகத்தாய் நெடுவரையினுச்சி மேலாய்!*
*நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி*
*ஊரகத்தாய்! ஒண்துறை நீர்வெஃகாவுள்ளாய்!*
*உள்ளுவாருள்ளத்தாய்! உலகமேத்தும்*
*காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா*
*காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு*
*பேரகத்தாய்! பேராது என்னெஞ்சினுள்ளாய்!*
*பெருமான்! உன் திருவடியே பேணினேனே.*

**- திருநெடுந்தாண்டகம்-8.**

இத்தலம் பெரிய காஞ்சியில் (ஊரகத்தில்) உலகளந்த பெருமாள்கோயில் ப்ராகாரத்திலேயே உள்ளது. இந்த திவ்ய தேசம் இருந்த இடம், தீர்த்தம் இருக்கும் இடம் முதலியன பற்றி தெரியவில்லை.

**மூலவர்** : கருணாகரப் பெருமாள் - நின்ற திருக்கோலம் - தெற்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : பத்மாமணி நாச்சியார்

**தீர்த்தம்** : அக்ராய தீர்த்தம்

**விமானம்** : வாமன விமானம், ரம்யவிமானம்

**ப்ரத்யக்ஷம்** : கார்ஹமஹரிஷி

**சிறப்புக்கள் :**

1. பெருமாள் ஆதிசேஷன் மீது எழுந்தருளியுள்ளார்.
2. திருமங்கையாழ்வாரால் மட்டும் "உலகமேத்தும் காரகத்தாய்" என்ற சொற்றொடர் மங்களாசாசனம்.

## 89. திருப்பாடகம் (காஞ்சீபுரம்)

*உற்றுவணங்கித் தொழுமின் உலகேழும்*
*முற்றும் விழுங்கும் முகில்வண்ணன் - பற்றிப்*
*பொருந்தாதான் மார்பிடந்து பூம்பாடகத்துள்*
*இருந்தானை ஏத்தும் என் நெஞ்சு.*

- **இரண்டாம் திருவந்தாதி** - 94.

இத்தலம் பெரிய காஞ்சீபுரத்திலுள்ள கங்கை கொண்டான் மண்டபத்தில் உள்ளது.

ஜனமேஜயன் வைசம்பாயனரிடம் பாரத கதையைக் கேட்டு, ஸ்ரீ கிருஷ்ணன் பாண்டவர்களுக்காக ஹஸ்தினாபுரம் தூதுசென்று விஸ்வரூபம் எடுத்ததைக் கேள்விப்பட்டு, அதை நேரில் ஸேவிக்க விரும்பி காஞ்சி வந்து, அச்வமேதயாகம் செய்து, பூர்ணாஹுதி ஆனதும் பகவான் பாண்டவதூத வேஷத்துடன் ஆவிர்பவித்ததாக புராண வரலாறு. முதலாம் குலோத்துங்க சோழனால புதுப்பிக்கப்பட்டதாக இங்கே உள்ள கல்வெட்டுக்கள் மூலம் தெரிகிறது.

**மூலவர்** : பாண்டவ தூதர் - வீற்றிருந்த திருக்கோலம் (விச்வரூபம்) கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : ருக்மிணி, சத்தியபாமா

**தீர்த்தம்** : மத்ஸ்ய தீர்த்தம்

**விமானம்** : சக்ர விமானம், வேத கோடி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ஜெனமேஜயன், ஹாரிதமுனி.

**சிறப்புக்கள்:**

1. அமர்ந்த திருக்கோலத்தில் மிக பிரம்மாண்டமான ரூபத்தில் அழகுத் திருமேனியுடன் திகழும் பெருமாளை வேறெங்கும் சேவிக்க முடியாது.

2. ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு முக்கிய சில கிரந்தங்களை இயற்றியுள்ள அருளாளப் பெருமாள் எம்பெருமானார் எழுந்தருளியிருக்கிறார்.

3. திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோர் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## ௯0. திருப்புட்குழி

*அலங்கெழுதடக்கை ஆயன்வாயாம்பற்கு அழியுமால் என்னுள்ளம் என்னும்*
*புலங்கெழு பொருநீர்ப்புட்குழி பாடும்போதுமோநீர்மலைக்கு? என்னும்*
*குலங்கெழுகொல்லி கோமளவல்லி கொடியிடை நெடுமழைக்கண்ணி*
*இலங்கெழில் தோளிக்கு என்நினைந்திருந்தாய்? இடவெந்தை எந்தைபிரானே.*

- **பெரிய திருமொழி** - 2-7-8.

இத்தலம் சென்னை - வேலூர் மார்க்கத்தில் பாலுசெட்டி சத்திரத்திலிருந்து 1/2 கி.மீ தொலைவில் உள்ளது. காஞ்சிபுரத்திலிருந்தும் பஸ் வசதிகள்உண்டு.

இத்தலத்தில், சீதையை தேடப்போன போது ராமன் சிறிது காலம் தங்கி இருந்ததாகவும், அப்போது ஜடாயுவுக்கு தர்ப்பணம் செய்து மோக்ஷமளிக்க, பூமியைக் கீறிக்கங்கையை ஆவாஹனம் செய்து, ஜடாயு தீர்த்தத்தை உண்டாக்கியதாகவும், எனவே இத்தலத்திற்கு திருபுள்குழி என்று பெயர் ஏற்பட்டதாகவும் வரலாறு.

கோயிலுக்கு எதிரே ஜடாயு சன்னதி உள்ளது. மூலவர் தொடையின் மேல் ஜடாயுவை வைத்துக் கொண்டு ஸம்ஸ்காரம் செய்யும் நிலையில் எழுந்தருளியிருக்கிறார். அந்த தாபத்தை தாங்க முடியாத ஸ்ரீதேவியும், பூதேவியும் இடம், வலமாக மாறி எழுந்தருளியுள்ளனர்.

பிள்ளைப்பேறு வேண்டும் பெண்கள், கொஞ்சம் பயிற்றை மடைப்பள்ளியில் கொடுத்து, வறுத்து, நனைத்து மடியில் கட்டிக் கொண்டு தூங்குவார்கள். வறுத்த பயிர் முளைத்தால் பிள்ளைப் பேறு உண்டு என்று அர்த்தமாம். தாயார் மஹிமையால் வறுத்த பயிறு முளைப்பதால் "மரகதவல்லி" என்று திருநாமம் ஏற்பட்டதாகப் புராண வரலாறு.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | விஜயராகவப் பெருமாள், நான்கு புஜங்களுடன் வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | மரகதவல்லித் தாயார் |
| **தீர்த்தம்** | : | ஜடாயு தீர்த்தம் |
| **விமானம்** | : | விஜயகோடி விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | ஜடாயு |

**சிறப்புக்கள்:**

1. ராமானுஜரின் குருவான யாதவப்ரகாசர் இங்குதான் சிஷ்யர்களுக்கு வேதாந்த பூர்வ பக்ஷங்களைக் கற்பித்தார்.
2. நம்பிள்ளையின் சிஷ்யரான பின்பழகாரம் பெருமாள் ஜீயர், திருப்புட்குழி ஜீயர் முதலிய மகான்கள் அவதரித்த ஸ்தலமாகும்.
3. இந்த ஊர் குதிரை வாகனம் உண்மையான குதிரை போலவே அசையும் உறுப்புகள் கொண்டது.
4. ராமானுஜர் படித்த மண்டபம் இன்றும் உள்ளது. ராமானுஜர் கல்வி கற்றதை விளக்கும் சிற்பமும் இக்கோவிலில் உள்ளது.

5. ராமானுஜரும், மணவாள மாமுனிகளும் பலமுறை எழுந்தருளி உள்ளனர்.

6. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 91. திருக்கடிகை (சோளிங்கபுரம்)

*கண்ணார் கண்ணபுரம் கடிகை கடிகமழும்*
*தண்ணார் தாமரைசூழ் தலைச்சங்க மேல்திசையுள்*
*விண்ணோர் நாண்மதியை விரிகின்ற வெஞ்சுடரை*
*கண்ணாரக்கண்டுகொண்டு களிக்கின்றது இங்குஎன்றுகொலோ?*

- **பெரிய திருமொழி** - 8-9-9

இத்தலம் அரக்கோணத்திலிருந்து 27 கி.மீ தொலைவில் உள்ளது. சோளசிம்மபுரம், சோளிங்கர், கடிகாசலம் என்ற பெயர்களும் உண்டு.

இவ்வூரில் ஒரு கடிகை (சுமார் 1/2 மணி நேரம்) தங்கி இருந்தாலே மோக்ஷம் கிடைக்குமாதலால், கடிகாசலம், திருக்கடிகை என்ற பெயர்கள் ஏற்பட்டன. விஸ்வாமித்திரர் இங்கே கடிகையில் நரஸிம்மனை ஒரு கடிகை (நாழிகை) துதி செய்து ப்ருஹ்மரிஷி பட்டத்தைப் பெற்றதாக ஐதீகம்.

ந்ருஸிம்மாவதாரத்தை தரிசிக்க விரும்பிய ஸப்தரிஷிகள் இவ்விடத்தில் தவம் செய்ய ஆரம்பிக்க, ஒரு நாழிகைக்குள் அவர்கள் பயன்பெற்றமையால், "கடிகாசலம்" என்று பெயர் பெற்றது. இத்தலத்தில் ஒரு கடிகைப் பொழுது தங்கினாலும், பீடைகள் தொலைந்து மோக்ஷம் சித்திக்கும் என்று புராணம் கூறுகிறது.

**1. கீழேயுள்ள கோவில்**

**மூலவர்** : இல்லை

**உத்ஸவர்** : பக்தவத்சலப் பெருமாள்

**2. பெரியமலை (கடிகாசலம்) - 750 அடி உயரம் - 1300 படிகள்**

**மூலவர்** : யோக ந்ருஸிம்மர் (அக்காரக்கனி), வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : அம்ருதவல்லி

**தீர்த்தம்** : பிரும்ம தீர்த்தம், தக்கான்குளம்

**விமானம்** : ஹேமகோடி விமானம், ஸிம்ஹகோஷ்டாக்ருதி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ஆஞ்சநேயர்

### 3. சிறியமலை: (420 படிகள்)

யோக ஆஞ்சநேயர் கையில் சங்கு சக்கரங்களுடன் (நான்கு திருக்கரங்கள்) வீற்றிருந்த கோலம்.

**சிறப்புக்கள்:**

1. இது ஒரு விசேஷமான ப்ரார்த்தனை ஸ்தலம் - அதீத நோய்கள் தீர, விரதம் கடைப்பிடித்து, குளத்தில் நீராடி, பெருமானையும், ஆஞ்சநேயரையும் வழிபட்டு மக்கள் மகிழ்ச்சியுடன் செல்லும் காட்சி அற்புதமானது.
2. மலைக்குப் போகும் வழியில் குளக்கரையில் கருடாரூடரான வரதராஜப் பெருமாள் சந்நிதி உள்ளது. தொட்டாசாரியார் என்ற மஹாசாரியாருக்கு காஞ்சி வரதராஜன் தனது கருடஸேவையை தந்தருளியதாக ஸ்தல வரலாறு.
3. ஸ்ரீமந் நாதமுனிகள், திருக்கச்சி நம்பி, மணவாள மாமுனிகள் - இம்மூவரும் ராமானுஜரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.
4. அஹோபில மலையை அடுத்து, முனிவர்க்காக அந்த நரசிம்ம அவதாரத்தை மீண்டும் ஒருமுறை இங்கே மேற்கொண்டதால், மிகச்சிறப்புடையதாயிற்று.
5. பேயாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்த ஸ்தலமாகும்.

## 92. திருப்பரமேச்சுர விண்ணகரம் (காஞ்சீபுரம்)

*அண்டமும் எண்திசையும் நிலனும் அலைநீரொடுவான் எரிகால்முதலா*
*உண்டவன் எந்தை பிரானதுஇடம் ஒளிமாடங்கள் சூழ்ந்து*
*அழகாயகச்சி*
*விண்டவர் இண்டைக்குழாமுடனே விரைந்தார் இரியச்செருவில்*
*முனிந்து*
*பண்டு ஒருகால் வளைத்தான் பணிந்த பரமேச்சுர விண்ணக ரமதுவே.*

- **பெரிய திருமொழி** - 2-9-4.

இத்தலம் பெரிய காஞ்சீபுரத்தில், காஞ்சீபுரம் ரயில் நிலையத்திலிருந்து 2 கி.மீ தொலைவில் உள்ளது.

விதர்ப்ப தேசத்தை அரசாண்ட விரோசனனுக்கு புத்திர ஸந்ததி இல்லாமல், காஞ்சீபுரத்திலுள்ள கைலாஸநாதரை பூஜை செய்ய, அவருடைய அருளால் விஷ்ணுவின் த்வாரபாலர்கள் இருவரும் பல்லவன், வில்லவன் என்ற பெயரில் விஷ்ணு பக்தர்களாகப் பிறக்க, புத்திரர்கள் புண்யகோடி விமானத்துக்கு வாயுமூலையில் அச்வமேதயாகம் செய்ய ஸ்ரீமந்நாராயணன் அவர்களுக்கு ஸ்ரீவைகுண்ட நாதனாக ஸேவை சாதித்தபடி வீற்றிருந்த திருக்கோலத்துடன் பக்தர்களுக்கு ஸேவை சாதிப்பதாக ஐதீஹம். விரஜையும் இங்கே புஷ்கரிணியாக அமைந்திருக்கிறது.

**மூலவர்** : பரமபதநாதன், வைகுந்த நாதன் - வீற்றிருந்த திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : வைகுந்தவல்லி

**தீர்த்தம்** : ஐரம்மத தீர்த்தம்

**விமானம்** : முகுந்த விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பல்லவ மன்னன்.

**சிறப்புக்கள்:**

1. விமானம் மூன்று அடுக்காக அஷ்டாங்க விமானமாக உள்ளது. கீழ்அடுக்கில் (அடியில்) பெருமாள் வீற்றிருந்த நிலையிலும், மத்தியில் (இரண்டாவது அடுக்கில்) ஸ்ரீதேவி,

பூதேவியுடன் ரங்கநாதன் சயனத் திருக்கோலத்திலும், மேல் அடுக்கில் நின்ற திருக்கோலத்திலும் உள்ளனர்.

2. இத்தலத்தின் மூலவரும், அதைச் சுற்றியுள்ள பிரகாரம் மற்றும் தூண்கள் யாவும் ஒரே பாறையில் குடையப்பட்டதாகும்.

3. மேல்அடுக்கில் நரசிம்மாவதாரம், கிருஷ்ணாவதாரம், ராமாவதாரம் போன்ற காட்சிகள் தத்ரூபமாக செதுக்கப்பட்டுள்ளன.

4. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 93. திருஎவ்வுள் - திருவள்ளூர்

*முனிவன் மூர்த்தி மூவராகி வேதம் விரித்துரைத்த*
*புனிதன் பூவைவண்ணன் அண்ணல்புண்ணியன் விண்ணவர்கோன்*
*தனியன்சேயன் தானொருவனாகிலும் தன்னடியார்க்கு*
*இனியன் எந்தை எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே.*

- **பெரிய திருமொழி** - 2-2-8

இத்தலம் சென்னைக்கு அருகே திருவள்ளூர் ரயில் நிலையத்திலிருந்து 4 கி.மீ தொலைவில் உள்ளது.

திருமால் சாலிஹோத்ர மஹரிஷிக்கு ப்ரத்யக்ஷமாகி, "உறைதற்குரிய உள் எவ்வுள்?" என்று வினவியதால், இத்தலத்திற்கு "திரு எவ்வுள்" என்று திருநாமமாயிற்று. மதுகைடபர்களைக் கொன்று வேதியர்களையும் தாபஸர்களையும் ரக்ஷித்த ஸ்தலம். ஹ்ருத்தாபநாச புஷ்கரிணியில் தீர்த்தமாடி, வீரராகவனையும், விஜயகோடி விமானத்தையும் ஸேவிப்பதனால் எல்லா நோய்களும் பூண்டோடு அழியுமாதலால் பகவானுக்கு "வைத்ய வீரராகவன்" என்ற திருநாமம் உண்டு.

மூலவர் (வீரராகவன்) வலது திருக்கையை சாலிஹோத்ர முனிவரின் தலைமீது வைத்தபடியும், நான்முகனுக்கு வேதங்களை

உபதேசிக்கும் வண்ணமாக இடது திருக்கரத்தில் ஞான முத்திரையோடு எழுந்தருளியுள்ளார்.

**மூலவர்** : வீரராகவப் பெருமாள் - புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : கனகவல்லி (வஸுமதி தேவி)

**தீர்த்தம்** : ஹ்ருத்தாபநாசினி புஷ்கரிணி

**விமானம்** : விஜயகோடி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : சாலிஹோத்ர முனி

**சிறப்புக்கள் :**

1. அமாவாசையன்று இந்தப் புஷ்கரிணியில் ஸ்நானம் செய்வது மிகவும் புண்யகரமானது.
2. ராமலிங்க அடிகளார் தன் தீராத வயிற்றுவலியை நீக்கிய இப்பெருமாள் பேரில் "போற்றி பஞ்சகம்" பாடியுள்ளார்.
3. திருமழிசையாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 94. திருக்கடல்மல்லை (மஹாபலிபுரம்)

*கிடந்தானைத் தடங்கடலுள் பணங்கள் மேவிக்*
*கிளர்பொறிய மறிதிரிய அதனின் பின்னே*
*படர்ந்தானை படுமதத்தகளிற்றின் கொம்பு*
*பறித்தானைப் பாரிடத்தை எயிறுகீற*
*இடந்தானை வளைமருப்பின் ஏனமாகி*
*இருநிலனும் பெருவிசும்பும் எய்தாவண்ணம்*
*கடந்தானை எம்மானைக் கண்டுகொண்டேன்*
*கடிபொழில் சூழ்கடல் மல்லைத்தல சயனத்தே.*

**பெரிய திருமொழி** - 2-5-6

இத்தலம் சென்னையிலிருந்து 55 கி.மீ தொலைவிலும், திருவிடவெந்தையிலிருந்து சுமார் 15 கி.மீ தொலைவிலும் உள்ளது.

புண்டரீக மஹரிஷி, தாமரைப் புஷ்பங்களைக் கொண்டு க்ஷீராப்திநாதனை அர்ச்சனை செய்ய நினைத்து, புஷ்பங்களைப் பறித்து ஒரு கூடையில் வைத்துக் கிழக்குப் பக்கமாகச்செல்ல, சமுத்திரம் வழியை அடைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்து, பக்தி மேலீட்டால் சமுத்திர ஜலத்தை கைகளால் இறைத்து விடலாம் என்று நினைத்து இறைக்க ஆரம்பிக்க, பகவான் வ்ருத்த பிராமண வேடம் பூண்டு, அவரை ஆகாரம் கேட்டு, ஆகாரம் கொண்டு வருவதற்குள், (திருப்பாற்கடலில் ஆதிசேஷன் மேல் சயனித்திருக்கும் திருக்கோலத்தில்) புண்டரீகர் கூடையில் வைத்திருந்த வாடாமல் இருந்த தாமரை புஷ்பங்களைச் சாற்றிக் கொண்டு மிக கம்பீரமாக சயன திருக்கோலத்தில் ஸேவை சாதிக்க, "ஸ்தல சயனப் பெருமாள்" என்ற பெயர் வழங்கி வருவதாக ஐதீகம். கோயிலில் எம்பெருமான் வெறும் தரையில் சயனித்து, திருவடியருகில் புண்டரீக ரிஷி கைகூப்பிய வண்ணம் ஸேவை தருகிறார்.

**மூலவர்** : ஸ்தல சயனப் பெருமாள் - புஜங்க சயனம் - கிழக்கு நோக்கிய திருமுக மண்டலம். வலது கரத்தை திரு மார்பின் மீது உபதேச முத்திரையாக வைத்து "ஞானத்தமிழ் புரிந்த நான்" என்பதை விளக்குகிறார.

**உத்சவர்** : உலகுய்ய நின்ற பெருமாள்

**தாயார்** : நிலமங்கைத் தாயார்

**தீர்த்தம்** : புண்டரீக புஷ்கரிணி, கருடநதி

**விமானம்** : ககனாக்ருதி விமானம்

**ப்ரத்யக்ஷம்** : புண்டரீக மஹரிஷி

**சிறப்புக்கள் :**

1. இது பூதத்தாழ்வார் அவதார ஸ்தலம் - கலைச்சிற்பங்கள் நிறைந்தது - சிற்பங்களுள் முக்கியமானவை பகீரதன் தவம், பஞ்ச பாண்டவர் மண்டபம், கோவர்த்தன மண்டபம், அர்ச்சுனன் தவம், பஞ்ச பாண்டவர் ரதம் முதலியன. இதை அர்த்தஸேது என்று அழைக்கிறார்கள்.

2. பல்லவ மன்னர்கள் வைணவர்கள், வைணவம் பரப்பும் வீரர்களாகவும் திகழ்ந்தனர் - சிம்ம விஷ்ணு என்னும் பல்லவ மன்னன் ஆதிவராகர் குகைக் கோவிலை அமைத்தான்.

3. ஆதிவராக மண்டபம் என்னும் ஒரு மண்டபம் இங்குள்ளது.

4. பெருமாள் கோயில் விஜய நகர அரசன் பராங்குசனால் கட்டப்பட்டது என அறியப்படுகிறது.

5. ஆண்டாள், ராமன் ஸந்நிதிகளும் உள்ளன.

6. ஸ்ரீ மணவாள மாமுனிகள், பிள்ளை லோகம் ஜீயர் மங்களா சாசனம் செய்த ஸ்தலம்

7. திருமங்கையாழ்வாரும், பூதத்தாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## 95. திருவெஃகா (காஞ்சீபுரம்)

*விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்*
*மண்ணகரம் மாமாட வேளுக்கை - மண்ணகத்த*
*தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி*
*தன் குடங்கை நீரேற்றான் தாழ்வு.*

- **மூன்றாம் திருவந்தாதி** - 62

இத்தலம் காஞ்சி வரதராஜப் பெருமாள் சந்நிதிக்கு மேற்கே, அஷ்டபுயகரப் பெருமாள் சந்நிதிக்கு எதிரில் அமைந்துள்ளது.

கணிகண்ணன் என்ற சீடனுக்காக ஊரைவிட்டே புறப்பட்ட திருமழிசையாழ்வார் பகவானை அழைக்க, பகவான் பாம்பணையைச் சுருட்டிக் கொண்டு புறப்பட்டு, பிறகு அவர் கிடக்கச் சொல்லி வேண்டியபோது, பாம்பணையை விரித்துப் படுத்ததால், இவருக்கு "சொன்ன வண்ணம் செய்த பெருமாள்" (யதோத்தகாரி) என்று பெயர். பகவான் வலமிருந்து இடமாக சயனித்துள்ளார்.

ஸத்ய வ்ரத க்ஷேத்திரத்தில் , பிரும்மா எம்பெருமான் தர்சனத்திற்காக ஸரஸ்வதி இல்லாமல் தனியே வேள்வி செய்ய ஆரம்பித்ததாகவும், அப்போது ஸரஸ்வதி,"வேகவதி" நதியாக வந்து

வேள்வியை அழிக்க ஓடி வந்ததாகவும், இவ்வெள்ளத்தைத் தடுக்க எம்பெருமான் அணை (ஸேது)யென குறுக்கே சயனித்தாராம். இதனால் பெருமாளுக்கு "வேகாஸேது" என்ற பெயர் ஏற்பட்டது. வேகவதியணை - வெஃகணை - வெஃகா என்று மருவியது.

**மூலவர்** : யதோத்தகாரி - சொன்ன வண்ணம் செய்த பெருமாள் - வேகாஸேது - புஜங்க சயனம் - மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : கோமளவல்லி நாச்சியார்

**தீர்த்தம்** : பொய்கை புஷ்கரிணி

**விமானம்** : வேதஸார விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ப்ரும்மா, பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், கணிகண்ணன்

**சிறப்புக்கள்:**

1. பொய்கையாழ்வார் அவதாரஸ்தலம். இங்குள்ள பொய்கை புஷ்கரிணியில் ஒருபொற்றாமரையில் அவதாரம் செய்ததால் பொய்கையாழ்வார் எனப்படுகிறார்.

2. பெருமாள் வழக்கத்திற்கு மாறாக வலமிருந்து இடமாகச் சயனித்துள்ளார்.

3. திருமழிசையாழ்வார் நெடுங்காலம் இங்கு தங்கி இருந்தார். கணி கண்ணன் இப்பெருமாளுக்கு கைங்கர்யம் செய்து உயர்ந்தவர். திருமங்கை உட்பட ஐந்து ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்துள்ளனர். மணவாள மாமுனிகள் ஓராண்டு காலம் தங்கி ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்துள்ளார். பிள்ளை லோகாச்சாரியார் இங்கு எழுந்தருளி உள்ளார். இவருக்கு தனி ஸந்நிதி உள்ளது.

4. திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கை ஆழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஐந்து ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

# வட நாட்டுத் திருப்பதிகள் - 11
## திருக்கோல ஸ்தலங்கள் 96 - 106

| நின்றகோலம் | அமர்ந்த கோலம் | கிடந்த கோலம் |
|---|---|---|
| கிழக்கு | கிழக்கு | கிழக்கு |
| 96. திருவேங்கடம்-திருப்பதி | 103. திருச்சிங்கவேள் குன்றம் (அஹோபிலம்) | 106. திருப்பிரிதி (ஜோஷிமட்) |
| 97. திருநைமிசாரண்யம் | 104. திருவதரியாச்சிரமம் (பத்ரிநாத்) | |
| 98. திருக்கண்டமென்னும்கடிநகர் (தேவ ப்ரயாகை) | | |
| 99. திருவடமதுரை (மதுரா) | | |
| 100. திருவாய்ப்பாடி (கோகுலம்) | வடக்கு | |
| மேற்கு | 105. திருஅயோத்தி | |
| 101. திருத்துவாரகை (துவாரகா) | | |
| வடக்கு | | |
| 102. திருசாளக்கிராமம் | | |



திருமலையப்பன் - திருமலை



லக்ஷ்மீ - ப்ரஹ்லாதவரதன், ஸ்ரீ நரஸிம்ஹன் (அஹோபிலம்)

## வடநாட்டுத் திருப்பதிகள்
### இருப்புப்பாதை மார்க்கம்



## வடநாட்டுத் திருப்பதிகள்

### 96. திருவேங்கடம் (திருப்பதி, திருமலை)

a. *செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!*
*நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்*
*அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்*
*படியாய்க் கிடந்து உன்பவளவாய் காண்பேனே.*

**- பெருமாள் திருமொழி - 4-7-9**

b. *சென்னியோங்கு தண் திருவேங்கடமுடையாய்! உலகு*
*தன்னை வாழநின்ற நம்பீ! தாமோதரா! சதிரா!*
*என்னையும் என்னுடைமையையும் உன்சக்கரபொறியொற்றிக்*
*கொண்டு*
*நின்னருளே புரிந்திருந்தேன் இனிஎன் திருக்குறிப்பே?*

**- பெரியாழ்வார் திருமொழி - 5-4-1**

c *வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினை நோய் தீர்ப்பதுவும் - வேங்கடமே*
*தானவரை வீழத் தன்னாழிப்படை தொட்டு*
*வானவரைக் காப்பான் மலை.*

**- நான்முகன் திருவந்தாதி - 48.**

d. *மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்*
*சந்திசெய்ய நின்றான் அரங்கத்தர வினணையான்*
*அந்திபோல் நிறத்தாடையும் அதன்மேலயனைப்*
*படைத்ததோரெழில்*
*உந்தி மேலதன்றோ அடியேனுள்ளத் தின்னுயிரே.*

**- அமலனாதி பிரான் - 3.**

e. *தென்தில்லைச் சித்திரகூடத்து என் செல்வனை*
*மின்னி மழைதவழும் வேங்கடத்து எம் வித்தகனை*

**- பெரிய திருமடல் 2674 (124)**

f. *எழுவார் விடை கொள்வார் ஈன்துழாயானை*
*வழுவாவகை நினைந்து வைகல் - தொழுவார்*
*வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்*
*மனச்சுடரைத் தூண்டும் மலை.*

- **முதல் திருவந்தாதி** - 26.

g. *பயின்றது அரங்கம் திருக்கோட்டி பன்னாள்*
*பயின்றதுவும் வேங்கடமே பன்னாள் - பயின்றது*
*அணி திகழும் சோலை அணி நீர் மலையே*
*மணி திகழும் வண்தடக்கை மால்.*

- **இரண்டாம் திருவந்தாதி** - 46.

h. *பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்*
*கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல் - வண்டு*
*வளங்கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகை*
*இளங்குமரன் தன் விண்ணகர்.*

- **மூன்றாம் திருவந்தாதி** - 61.

i. *அகலகில்லேன் இறையுமென்று, அலர்மேல் மங்கையுறை மார்பா!*
*நிகரில் புகழாய்! உலகம் மூன்றுடையாய்! என்னையாள்வானே!*
*நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!*
*புகலொன்றில்லா அடியேன், உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.*

- **திருவாய்மொழி** - 6-10-10

j. *சங்கமா கடல்கடைந்தான் தண்முகில்காள்! வேங்கடத்துச்*
*செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்*
*கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து ஒருநாள்*
*தங்குமேல் என்னாவி தங்குமென்று உரையீரே.*

- **நாச்சியார் திருமொழி** 8-7

இத்தலத்திற்கு சென்னையிலிருந்து எந்நேரமும் பேருந்துகள் உண்டு. சென்னையிலிருந்து பம்பாய் செல்லும் பாதையில் உள்ள ரேணிகுண்டா ரயில் நிலையத்திலிருந்து 10 கி.மீ தொலைவிலுள்ளது

இத்திருமலையில் வைகுண்ட வாசனான ஸ்ரீநிவாசப் பெருமாள் மிகவும் விருப்பங்கொண்டு நேரில் வரவிரும்பி அவ்விதமே அவதார ரூபத்தில் எழுந்தருளி வசித்து வருவதாகவும், பக்தர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றும் தெய்வம் என்றும் வேதங்கள் கூறுகின்றன.

ஏழு பர்வதங்களான வேங்கடாத்ரி, சேஷாச்சலம், வேதாச்சலம், கருடாசலம், வ்ருஷபாத்ரி, அஞ்சனாத்ரி, அனந்தாத்ரி என்னும் பெயர்களுடன் ஏழுமலையாக இயங்கிவரும் இத்திருமலையில் ஏழுமலைகளுக்கு மத்தியில் ஸ்ரீனிவாசன் எழுந்தருளியுள்ளார். ஸ்ரீனிவாசப்பெருமாள் இங்கு எழுந்தருளுவதற்கு முன்பு, வராக மூர்த்தியாக எழுந்தருளி காட்சி தந்துள்ளார். தற்போதும் இங்குள்ள ஸ்வாமி புஷ்கரிணிக்கு அருகில் அமைந்துள்ள ஆதிவராகரைச் சேவித்த பின்பே ஸ்ரீனிவாசனைச் சேவிக்கச் செல்ல வேண்டும் என்பது மரபு.

திருமலைமேல் கல்யாண உத்ஸவம், ப்ருஹ்மோத்ஸவம் நடைபெறுகின்றன. முடியளிப்பது போன்ற ஏராளமான ப்ரார்த்தனைகள் செலுத்தப்படுகின்றன. காணிக்கைகளின் காரணமாக உலகத்திலேயே இரண்டாவது பணக்காரக் கோயில் இதுதான்.

ஆதிவராஹ க்ஷேத்திரம் என்னும் இந்த திருவேங்கடம் மொத்தம் மூன்று பிரிவுகள் கொண்டது.

### 1. கீழத்திருப்பதி

**மூலவர்** : கோவிந்தராஜப் பெருமாள் - புஜங்க சயனம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : புண்டரீக வல்லி. இங்கு ஆண்டாள், உடையவர் முதலியவர்களுக்கும் தனித்தனி சந்நிதிகள் உண்டு.

**2. திருமலை**

**மூலவர்** திருவேங்கடமுடையான் - ஸ்ரீநிவாசன், வெங்கடாஜலபதி, பாலாஜி, ஏழுமலையான், வேங்கடத்தான் என்று பல திருநாமங்கள். நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்சவர்** கல்யாண வெங்கடேஸ்வரர்

**தீர்த்தங்கள்** 1. சேஷாசல ஸ்வாமி புஷ்கரிணி. 2. பாப விநாச நீர்வீழ்ச்சி, 3. ஆகாச கங்கை, 4. கோனேரி தீர்த்தம்.

1. குமாரதாரை, 2. பாப விநாசம், 3.ஆகாசகங்கை, 4. யுத்தகள தீர்த்தம் 5. வைகுண்ட தீர்த்தம், 6. சக்ரதீர்த்தம் 7. ஜாபால தீர்த்தம் 8. வகுள தீர்த்தம் 9. பாண்டவ தீர்த்தம் 13. ராமகிருஷ்ண தீர்த்தம் 11. தும்புரு தீர்த்தம் 12. சேஷ தீர்த்தம், 13. ஸனகஸனந்தன தீர்த்தம், 14. சீதம்ம தீர்த்தம்

**விமானம்** ஆனந்த நிலய விமானம்.

**ப்ரத்யக்ஷம்** தொண்டைமான், ஆறுமுகம்

**3. திருச்சானூர் : (அலமேலு மங்காபுரம், அலர்மேல் மங்காபுரம்)**

**மூலவர்** : தாயார், அலர்மேல் மங்கை - (பத்மாவதி) - அமர்ந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தீர்த்தம்** : பத்மஸரோவரம்

**சிறப்புக்கள்:**

1. இக்கோயிலில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும், ஸௌந்தர ராஜனுக்கும் ஸந்நிதிகள் உள்ளன. இக்கோயிலை ஸ்ரீநிவாசன் நியமனப்படி தொண்டைமான் என்ற அரசர் கட்டி, பகவான் மிக்க ஆனந்தத்துடன் எழுந்தருளியதால் "ஆனந்த விமானம்" என்று பெயர் உண்டானதாக ஸ்தல வரலாறு

2. ப்ரும்மா லோக க்ஷேமார்த்தம் இரண்டு விளக்குகளை ஏற்றி வைத்ததாகவும், அந்த தீபம இப்பொழுதும் பிரகாசிபபதாகவும் வரலாறு.

3. அஹோபில மடத்து முதல் ஜீயர் ஸ்ரீஆதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகன் திருமலைக்குப் படிக்கட்டுகளை கட்டி வைத்ததாக கூறுகிறார்கள்.

4. சந்திரகிரி பக்கம் ஸ்ரீனிவாச மங்காபுரம் என்ற ஊர் மலை அடிவாரத்தில், மலைமேல் ஏற முடியாதவர்கள், மலைமேல் உள்ள ஸ்ரீநிவாசனைப் போல் அழகாக அமைந்திருக்கும் மூர்த்தியை தரிசித்துச் செல்கிறார்கள்.

5. கலியுகம் முடியும்வரை பெருமாள் தனது சான்னித்தியத்தை இங்கே இருந்து வழங்கி பக்தர்களுக்கு அருள்பாவித்து பாவங்களைப் போக்கி நிற்கிறார் என்பது ஐதீகம்.

6. இங்கு ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் நடைபெறும் பிரம்மோத்சவம் காணக்கிடைப்பதரிது. பிரம்மனே இங்கு வந்து இந்த உத்சவத்தை நடத்தி வைப்பதாக ஐதீகம்.

7. திருமலையானின் வலமார்பில் மகாலக்ஷ்மியும், இடமார்பில் பத்மாவதியும் உறைகின்றனர். பத்மாவதி தாயார்தான் திருச்சானூர் என்னும் அலமேலு மங்காபுரத்திலிருந்து அருள் பாவிக்கிறார். கார்த்திகை மாதம் சுக்ல பட்ச பஞ்சமியில் இங்கு பிரம்மோத்சவம் நடைபெறும்.

8. இந்தத் திருமலையில் திருமலை நம்பிகள் ராமானுஜருக்கு ராமாயண பாடம் கற்றுத் தந்துள்ளார் மணவாள மாமுனிகளும் இங்கு பலமுறை எழுந்தருளியுள்ளார்.

9. தொண்டரடிப்பொடியாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகிய இருவர் தவிர மற்ற 10 ஆழ்வார்களும் இம்மலையைப் பற்றியும், வேங்கடவனைப் பற்றியும் மொத்தம் 202 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

10. வைணவத் திருத்தலங்களில் பெரியகோயில் திருவரங்கம் முதலாவதாகவும் இத்திருத்தலம் இரண்டாவதாகவும் அமையப்பெற்றது.

## 97. திருநைமிசாரண்யம்

*நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் நீதியல்லாதன செய்தும்*
*துஞ்சினார் செல்லும் தொல்நெறி கேட்டே துளங்கினேன் விளங்கனி முனிந்தாய்*
*வஞ்சனேன் அடியேன் நெஞ்சினில் பிரியா வானவா! தானவர்க்கு என்றும்*
*நஞ்சனே! வந்து உன் திருவடியடைந்தேன் நைமிசாரண்யத்துள் எந்தாய்!*

- **பெரிய திருமொழி** - 1-6-7

இத்தலம் கல்கத்தா - டேராடுன் ரயில் மார்க்கத்தில் பாலமாவ் ஜங்ஷன் இறங்கி, அங்கிருந்து சீதாப்பூர் செல்லும் ரயிலில் ஏறி வழியில் நைமிசாரண்யா ஸ்டேஷனில் இறங்கி, அங்கிருந்து 4 கி.மீ தொலைவில் நடந்து இத்தலத்தை அடையலாம்.

தீர்க்கரோமர் என்ற மஹரிஷியின் தலைமையில் பிரம்மனிடம் சென்ற முனிவர்கள் சத்திர வேள்வியைத துவக்கத்தகுதியான இடத்தைக் காட்டுமாறு வேண்ட, பிரம்மன் அவர்களை ஒரு விமானத்தில் ஏற்றி பூவுலகை வலம் வருமாறும், அப்படி வரும்போது விமானத்தின் நேமி (சக்கரம்) தானாக எவ்விடத்தில் கழன்று விழுகிறதோ, அதுவே வேள்வியைத் துவக்க சிறந்த இடம என்று கூறியனுப்ப, விமானத்தின் சக்கரம் இவ்விடத்தில் விழுந்ததாகவும் அதனால் நேமிச ஆரண்யம் ஆயிற்று என்று கூறுவர்.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | தேவராஜன் (ஸ்ரீஹரி) - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | ஸ்ரீஹரிலக்ஷ்மி |
| **தீர்த்தம்** | : | சக்ர தீர்த்தம், கோமுகி நதி, நேமி, திவ்ய, விச்ராந்த தீர்த்தங்கள் |
| **ஸ்தல விருக்ஷம்** | : | தபோவனம் |

**விமானம்** : **ஸ்ரீஹரி விமானம்**

**ப்ரத்யக்ஷம்** : **இந்திரன், சுதர்மன், சூத புராணிகர், தேவரிஷி, வேத வ்யாஸர்**

சிறப்புக்கள் :

1. ஆழ்வார்கள் பாடிய ஆலயமும், மூர்த்திகளும் இப்போது இல்லை. பகவான் ஆரண்ய ஸ்வரூபியாக இருப்பதாக நம்பி, காட்டையே வணங்குகிறார்கள்.

2. இங்குள்ள சக்ர தீர்த்தம் சகல பாவங்களையும் போக்க வல்லது. இந்த சக்ர நதிக்கரையில் சக்கரத்தாழ்வான், விநாயகர், ராம, லக்ஷ்மண, சீதை முதலியவர்களின் சன்னதிகள் உள்ளன.

3. இங்கிருந்து கோமுகி நதிக்குப் போகும் வழியில் வ்யாஸ கட்டீ என்றஇடத்தில் வேத வ்யாஸர் ஆலயம் உள்ளது. இதுதான் வ்யாஸ பகவானும், சுகப்ரஹ்மமும் ப்ரவசனங்கள் செய்து, பாரதம், பாகவதம் முதலிய இதிஹாஸ புராணங்களை இயற்றிய இடமாகும்.

4. ஊரின் மற்றொரு பகுதியில், புராண மந்திர் என்ற சுகபகவான் ஆலயத்தில் அவருடைய வெண்கலச்சிலை பெரியதாக வைக்கப்பட்டுள்ளது.

5. இதேபோல் சற்றுத்தள்ளி, ஒரு சிறிய குன்றின் மேல் ஹனுமான்கட்டீ என்ற ஆலயத்தில் மிகப் பிரம்மாண்டமான உருவுள்ள ஹனுமார், ஸ்ரீராம லக்ஷ்மணர்களை இரு தோள்களிலும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார்.

6. பாலாஜி மந்திர் எனப்படும் பூசமேத வெங்கடேஸ்வரர் ஸ்வாமி கோயில் ஒன்றும் இத்தலத்தில் உள்ளது.

7. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 98. திருகண்டமென்னும் கடிநகர்
## (தேவப்ரயாகை)

*தங்கையை மூக்கும் தமையனைத் தலையும்தடிந்த எம்தாசரதி போய்*
*எங்கும்தன் புகழாவிருந்து அரசாண்ட எம்புருடோத்த மனிருக்கை*
*கங்கை கங்கையென்ற வாசகத்தாலே கடுவினைகளைந் திடுகிற்கும்*
*கங்கையின் கரைமேல் கைதொழநின்ற கண்டமென்னும் கடிநகரே.*

- **பெரியாழ்வார் திருமொழி** - 4-7-1

இத்தலம் ரிஷிகேசத்திலிருந்து பத்ரிநாத் போகும் வழியில் 70 கி.மீ தொலைவிலும், ஹரித்வாரத்திலிருந்து பத்ரிக்கு செல்லும் வழியில் 80 கி.மீ தொலைவிலும் உள்ளது. சமுத்ர மட்டத்திலிருந்து 1700 அடி உயரம். ரகுநாத்ஜீ மந்திர் என்றால் தெரியும். மிகச்சிறந்த யாகத்தை பிரம்மன் இங்கு துவங்கியதால், இவ்விடத்திற்கு ப்ரயாகை என்று பெயர் ஏற்பட்டது. ஸ்ரீமந்நாராயணனையே தேவனாக கருதி இவ்விடத்தில் யாகம் செய்யப்பட்டதால், தேவப்ரயாகை ஆயிற்று. கங்கையும்,யமுனையும் கூடும் இடமே ப்ரயாகை.

| | | |
|---|---|---|
| **மூலவா** | : | நீலமேகப் பெருமாள் (புருஷோத்தமன்) நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம். |
| **தாயாா** | : | புண்டரீகவல்லி |
| **தீர்த்தம்** | : | மங்கள தீர்த்தம், கங்கை நதி |
| **விமானம்** | : | மங்கள விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | பரத்வாஜ முனி |

**சிறப்புக்கள்:**

1. மகாபுண்ய தீர்த்தமான இந்த ப்ரயாகையில் பல நதிகள் சங்கமமாகின்றன. கங்கையும், யமுனையும் கலப்பதோடு அளகநந்தாவும், பாகீரதியும் இங்கு சங்கமமாகின்றன.
2. இது ப்ருஹ்மதேவ், தசரத மஹாராஜன், ராமன், முதலியோர் தவம் செய்த ஸ்தலம்
3. ஆழ்வார் பாடிய பெருமாளை ரகுநாத்ஜீ என்று அழைக்கின்றனர்.

4. ரகுநாத்ஜி கோயிலுக்கு அருகில் பத்ரிநாத், கால பைரவர், மஹாதேவர், ஹநுமார் முதலியோரின் சன்னிதிகளும் உள்ளன.

5 பெரியாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

## 99. திருவடமதுரை (மதுரா)
## (ப்ருந்தாவனம், கோவர்த்தனம் அடங்கியது)

*மாயனை மன்னு வடமதுரை மைந்தனை*
*தூய பெருநீர் யமுனைத் துறைவனை*
*ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை*
*தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை*
*தூயோமாய் வந்துநாம் தூமலர் தூவித்தொழுது*
*வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க*
*போயபிழையும் புகுதருவான் நின்றனவும்*
*தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.*

- **திருப்பாவை** - 5.

*செப்பாடுடைய திருமாலவன் தன் செந்தாமரைக்*
*கைவிரலைந்தினையும்*
*கப்பாகமடுத்து மணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக் கவித்தமலை*
*எப்பாடும் பரந்திழிதென்னருவி இலங்குமணிமுத்து வடம்பிறழ*
*குப்பாயமென நின்றுகாட்சிதரும் கோவர்த்தனமென்னும்*
*கொற்றக்குடையே.*

- **பெரியாழ்வார் திருமொழி** - 3-5-6.

டெல்லியிலிருந்து ஆக்ரா செல்லும் ரயில் பாதையில் "மதுரா" என்ற ஜங்ஷனிலிருந்து 3 கி.மீ தொலைவில் இத்தலம் உள்ளது. வடமதுரை திவ்ய தேசங்களின் எண்ணிக்கையில் ஒன்றானாலும், மதுரை, பிருந்தாவனம், கோவர்த்தனம் என்ற மூன்று இடங்கள் அடங்கியதாகும். இம்மூன்று இடங்களும் ஒரு முக்கோண வடிவில் அமைந்துள்ளது.

ஒருகாலத்தில் ரிஷிகள் பிரார்த்தனைப்படி ராமன் தன்தம்பி சத்ருக்னனை மது நகரத்தின் அசுர அரசனான லவணா ஸுரனைக்

கொல்லச் சொல்லி, ஸ்வயம்புவால் மதுகைட பாஸுர ஸம்ஹாரத்திற்கு உபயோகித்த பாணத்தைக் கொடுத்து அனுப்ப, அதன்படியே சத்ருக்னன் லவணாஸுரனை ஸம்ஹாரம் செய்து யமுனை நதிக்கரையில் அர்த்த சந்த்ர வடிவமாக மிக அழகிய மாடமாளிகை மண்டப கோபுர ப்ராகார வீதி தடாகாதிகள் சூழ்ந்த மதுரா நகரத்தை ஏற்படுத்தியதாக ஐதீகம்.

சத்ருக்னன் வம்சம் ஆண்ட பிறகு, மதுரா நகரம் யாதவர்கள் வசமாகி வஸுதேவர் பரம்பரை இந்நகரை ஆள ஆரம்பித்ததாக புராண வரலாறு.

ஸ்ரீ கிருஷ்ணன் அவதாரஸ்தலம், "ஸ்ரீ கிருஷ்ண ஜன்ம பூமி" என்ற விசேஷ வைபவத்துடன் அமைந்துள்ளது. ஸ்ரீக்ருஷ்ண ஜன்மாஷ்டமி முதல் ஒருவாரம் ஸ்ரீக்ருஷ்ண சரிதம் முழுவதையும் நாடகமாக நடிக்கிறார்கள். (ப்ருந்தாவனத்தில் தென்னாட்டு பாணியில் அமைக்கப்பட்டுள்ள "ரங்க மந்திர்" என்ற பெரிய கோயில் உண்டு.)

**மூலவர்** : கோவர்த்தன நேசன், பாலகிருஷ்ணன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்

**தாயார்** : ஸத்ய பாமா நாச்சியார்

**தீர்த்தம்** : இந்த்ர தீர்த்தம், கோவர்த்தன தீர்த்தம்,யமுனா நதி

**விமானம்** : கோவர்த்தன விமானம்

**ப்ரத்யக்ஷம்** : இந்த்ராதி தேவர்கள், வசுதேவர், தேவகி, யசோதை

**சிறப்புக்கள்:**

1. ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட கோவில்களும், மூர்த்திகளும் தற்போது இல்லையென்று சொல்கிறார்கள். இந்தப் பிரதேசம் முழுவதுமே ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளதால் இப்பகுதி முழுவதுமே திவ்ய தேசம்தான்

2. பிருந்தாவனத்தில் ரங்கமந்திர் கோவிலில், ஸ்ரீ ரெங்கநாதர், ஆண்டாள், திருவேங்கடமுடையான், ஸ்ரீ ராமானுஜர் ஆகியோர்களுக்கும் தனி சன்னிதிகள் உள்ளன.

3. பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய 5 ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 100. திருவாய்ப்பாடி (கோகுலம்)

*புவியுள்நான் கண்டதோர் அற்புதம்கேளீர் பூணிமேய்க்கும்*
*இவங்கோவலர் கூட்டத்து*
*அவையுள் நாகத்தணையான் குழலூத அமரலோகத்தளவும்*
*சென்றிசைப்ப*
*அவியுணாமறந்து வானவரெல்லாம் ஆயர்பாடி நிறையப்புகுந்து ஈண்டி*
*செவியுணான் சுவைகொண்டு மகிழ்ந்து கோவிந்தனைத்*
*தொடர்ந்து என்றும்விடாரே.*

- **பெரியாழ்வார் திருமொழி** - 3-6-7.

இத்தலம் டெல்லியிலிருந்து ஆக்ரா செல்லும் ரயில் பாதையில் உள்ள மதுரா ரயில் நிலையத்திலிருந்து 13 கி.மீ தொலைவில் உள்ளது. கண்ணனின் பால பருவ வளர்ச்சிதான் கோகுலம்.

ஆழ்வார்கள் பாடிய கோயில்களோ, மூர்த்திகளோ இப்போதும் ஒன்றும் இல்லை.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | நவமோஹன கிருஷ்ணன் - நின்ற திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம் |
| **தாயார்** | : | ருக்மணி, ஸத்ய பாமா பிராட்டியர்கள் |
| **தீர்த்தம்** | : | யமுனா நதி |
| **விமானம்** | : | ஹேமகூட விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | நந்தகோபர் |

**சிறப்புக்கள்:**

1. கோகுல் என்ற இடத்துக்கு 2 கி.மீ தொலைவில் பழைய கோகுலம் என்ற இடத்தில் ஒரு ஆலயம் உள்ளது. கோயில் வாசலில் யமுனை ஓடுகிறது. நந்தகோபர், யசோதா, பலராமர், மற்றும் ஒரு மரத்தொட்டிலில் குழந்தை கிருஷ்ணன் ஆகியோர் ஸேவை சாதிக்கிறார்கள்.

2. பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் ஆகியோரால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளது.

## 101. திருத்வாரகை (துவரை, துவராபதி)

*அன்னை என்செய்யில் என்? ஊர் என்சொல்லில் என்? தோழிமீர்*
*என்னைஇனி உமக்காசையில்லை அகப்பட்டேன்*
*முன்னையமரர் முதல்வன் வண்துவராபதி*
*மன்னன் மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே.*

- **திருவாய்மொழி** - 5-3-6

குஜராத்தின் தலைநகரான ஆமதாபாத்திலிருந்து வீராம்காம் வழியாக ஓகா செல்லும் பாதையில் துவாரகா ரயில் நிலையம் உள்ளது. இங்கிருந்து 2 கி.மீ தொலைவில் கோவில் உள்ளது.

ஜராசந்தன் ஜனங்களுக்கு தொந்திரவு கொடுக்காமல் இருக்க, ஸ்ரீகிருஷ்ணன் சமுத்திர ராஜனிடம் இடம்கேட்டு வாங்கி, விச்வ கர்மாவைக் கொண்டு துவாரகையை ச்ருஷ்டித்ததாக ஐதீகம். மோக்ஷத்திற்கு த்வாரமாக இருப்பதால் த்வாரகை என்ற பெயர் உண்டாயிற்று.

இங்குள்ள மூலவர் (த்வாரக் நாத்ஜி) சங்கு, சக்ர, கதாதாரியாக ஸேவை சாதிக்கிறார். பிரதி தினமும் பகவானுக்கு குழந்தை போலவும், ராஜாவைப் போலவும் அலங்காரம் செய்கிறார்கள். திருமஞ்சனமும் தினமும் உண்டு.

**மூலவர்** : துவாரகா நாத்ஜீ, கல்யாண நாராயணன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : கல்யாண நாச்சியார் (லக்ஷ்மிஸ்ரீ), ருக்மணி, அஷ்டமஹிஷிகள்.

**தீர்த்தம்** : கோமதிநதி, ஸமுத்ர சங்கமம்

**விமானம்** : ஹேமகூட விமானம்.

**சிறப்புக்கள்:**

1. இது முக்தி தரும் ஏழு ஸ்தலங்களுள் ஒன்றாகும்.

2. ஓகா துறைமுகத்திலிருந்து விசைப்படகு மூலம் பேட்துவாரகா (தீவு துவாரகை) என்ற தீவுக்குப் போகலாம். இதுதான் கிருஷ்ணனின் திருமாளிகை.

3. த்வாரகையிலிருந்து ஓகா போகும் வழியில் சுமார் 4 கி.மீ தொலைவில் ருக்மணி பிராட்டியின் தனிக்கோயில் உள்ளது. இங்குதான் கிருஷ்ணன் ருக்மணியை விவாஹம் செய்து கொண்டதாக ஐதீகம்.

4. பேட்துவாரகை சென்று விட்டு திரும்பும் போது, விராவல் ரயில் நிலையத்தில் இறங்கினால், பிரசித்தி பெற்ற சோமநாதர் ஆலயம் செல்லலாம்.

5. கிருஷ்ணன், த்ரிவிக்ரம மூர்த்தி, தேவகி, ஜாம்பவதி, லக்ஷ்மி நாராயணன் போன்ற பலருடைய ஸந்நிதிகள் உள்ளன.

6. பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார், ஆண்டாள் ஆகிய 5 ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 102. திருச்சாளக்ராமம் (சாளக்ராமம்)

*வடதிசை மதுரை சாளக்ராமம் வைகுந்தம் துவரை அயோத்தி*
*இடமுடைவதரியிட வகையுடைய எம்புருடோத்த மனிருக்கை*
*தடவரைய திரத்தரணி விண்டிடியத் தலைப் பற்றிக்கரை மரம்சாடி*
*கடலினைக் கலங்கக் கடுத்திழிகங்கைக் கண்டமென்னும் கடிநகரே.*

**- பெரியாழ்வார் திருமொழி -4-7-9**

*ஏனோர் அஞ்சவெஞ்சமத்துள் அரியாய்ப்பரிய இரணியனை*
*ஊனாரகலம் பிளவெடுத்த ஒருவன்தானே இருசுடராய்*
*வானாய்த் தீயாய் மாருதமாய் மலையாய் அலைநீ நலகனைத்தும்*
*தானாய் தானுமானான்தன் சாளக்கிராமம் அடைநெஞ்சே*

**- பெரிய திருமொழி - 1-5-7**

இத்திவ்யதேசம் நேபாள நாட்டில் உள்ளது. நேபாளத்தின் தலைநகரான காட்மாண்டு நகரத்திலிருந்து சுமார் 270 கி.மீ தொலைவில் உள்ளது. 600 அடி உயரத்தில் இக்கோயில் உள்ளது. ஸாளக்கிராமம் என்பது வேறு இல்லை. முக்தி நாராயண க்ஷேத்திரமே தான் சாளக்கிராமம் என்று கூறுவோரும் உண்டு.

சாளக்கிராமம் க்ஷேத்திரத்தில் கண்டகி நதியில் தான் நாம் பூஜை செய்யும் ஸாளக்கிராமங்கள் கிடைக்கின்றன.

**மூலவர்** : ஸ்ரீ மூர்த்தி - முக்தி நாராயணன் - நின்ற திருக்கோலம் - மேற்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : ஸ்ரீதேவி நாச்சியார்

**தீர்த்தம்** : சக்ர தீர்த்தம், கண்டகிநதி

**விமானம்** : கனக விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பிரும்மா, ருத்ரர், கண்டகி

**சிறப்புக்கள்:**

1. சாளக்கிராமம் என்பது கண்டகி நதியில் உருவாகும் ஒரு வகையான அழகிய தெய்வீகக் கற்களாகும். இவைகள் நத்தைக்கூடு, சங்கு, சக்கரம் போன்ற பல வடிவங்களில் கிடைக்கின்றன.
2. காட்மாண்டு நகரிலிருந்து 100 கி.மீ தொலைவிலுள்ள "தாமோதரகுண்ட்" என்னும் இடம்தான் ஸாளக்கிராமம் என்று கூறுகிறார்கள்.
3. ஸ்ரீ ராமானுஜர் மங்களாசாசனம் செய்த இடம்
4. பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## 103. திருச்சிங்க வேள்குன்றம் (அஹோபிலம்)

*நல்லை நெஞ்சே! நாம்தொழுதும் நம்முடை நம்பெருமான்*
*அல்லிமாதர் புல்கநின்ற ஆயிரந்தோளனிடம்*
*நெல்லிமல்கிக் கல்லுடைப்பப் புல்லிலையார்த்து அதர்வாய்ச்*
*சில்லுசில் லென்றொல்லறாத சிங்கவேள் குன்றமே.*

- **பெரிய திருமொழி** -1-7-9.

இத்தலம் சென்னை - பம்பாய் ரயில் பாதையில், கடப்பா ஸ்டேஷனில் இறங்கி, அங்கிருந்து பஸ்சில் 85 கி.மீ தொலைவில் உள்ள அர்லகட்டா என்ற ஊரில் இறங்கி, பின்னர் அங்கிருந்து 25 கி.மீ தொலைவில் பஸ்சில் சென்று அஹோபிலத்தை அடையலாம்.

இங்கு மலையடிவாரத்தில் ஒருகோவிலும், மலையின் மேல் ஒரு கோவிலுமாக இரண்டு கோவில்கள் உண்டு. மலை அடிவாரத்திலிருந்து மலைமேல் உள்ள கோவில் சுமார் 10 கி.மீ தூரமாகும்.

ஒரு சமயம் கருடன் கடும்தவம் செய்து பகவானிடம், "முன்பு செய்த ந்ருஸிம்மாவதாரத்தை இப்பொழுது மீண்டும் விபவத்தில் காண வேண்டும்" என்று வரம்கேட்டு, அவருக்காக காடுகள் நிறைந்த 2 அஹோபில மலையில் ஸ்ரீந்ருஸிம்ஹனாக அவதரித்து, ஹிரண்ய ஸம்ஹாரம் செய்தும், ப்ரஹ்லாதனை காத்தும், காட்டில் அர்ச்சா ரூபமாக ஒன்பது விதத் திருக்கோலங்களில் கோயில் கொண்டு விட்டதாகவும், கருடன் இங்கு இருந்து தவம் செய்தமையால், இந்த மலைக்கு கருடாத்ரி, கருடாசலம், காருடசைலம் என்று பெயர் வழங்கியதாக புராண வரலாறு. பகவான் ஸ்ரீவைகுண்டத்தையும் மறந்து இங்கேயே எழுந்தருளி விட்டபடியால், மஹாலக்ஷ்மியும் வேடர் குலத்தில் பிறந்து பகவானை மணந்ததாக ஸ்தல வரலாறு.

**மலை அடிவாரக் கோயில் (கீழ் அஹோபிலம்)**

**மூலவர்** : ப்ரஹ்லாதவரதன், லக்ஷ்மி ந்ருஸிம்ஹன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**உத்சவர்** : மாலோல ந்ருஸிம்ஹர் தவிர, 8 ந்ரஸிம்ஹர்களின் உத்ஸவ மூர்த்திகளும் இங்கே உள்ளனர். மாலோல உத்ஸவர் அஹோபில மடத்து அழகிய சிங்கரின் திருவாராதனத்தில் எழுந்தருளி உள்ளார்.

தாயார் : அம்ருதவல்லி, செஞ்சுலக்ஷ்மி

தீர்த்தம் : இந்த்ர, ந்ரஸிம்ஹ, பாபநாச, கஜ, பார்க்கவ தீர்த்தங்கள்

விமானம் : குகை விமானம்.

ப்ரத்யக்ஷம் : அஹோபில மடத்து முதல் அழகிய சிங்கருக்கு யோகி ரூபத்தில் ப்ரத்யக்ஷம்

**மலையின் மேல் உள்ள கோவில் (மேல் அஹோபிலம்)**

மூலவர் : அஹோபில ந்ருஸிம்ஹர்

தாயார் : லக்ஷ்மி

தீர்த்தம் : பாவநாசினி

விமானம் : குகை விமானம்

ப்ரத்யக்ஷம் : ப்ரஹ்லாதன், கருடன்.

**சிறப்புக்கள்:**

1. இங்கு மொத்தம் 9 ந்ரஸிம்மர் கோவில்கள் உள்ளன. எனவே இதனை நவந்ருஸிம்ஹ க்ஷேத்ரம் என்பர்.

   1. அஹோபில ந்ருஸிம்ஹன் 2. வராஹ ந்ருஸிம்ஹன் 3. மாலோல ந்ருஸிம்ஹன் 4. யோகாநந்த ந்ருஸிம்ஹன் 5. பாவன ந்ருஸிம்ஹன் 6. காரஞ்ச ந்ருஸிம்ஹன் 7. சக்ரவட ந்ருஸிம்ஹன் 8. பார்கவ ந்ருஸிம்ஹன் 9. ஜ்வாலா ந்ருஸிம்ஹன். மலைமீது ப்ரஹ்லாத ந்ருஸிம்ஹர், வராஹ ந்ருஸிம்ஹர், உக்ர ந்ருஸிம்ஹர் ஸந்நிதிகள் உண்டு.

2. இங்கு ந்ருஸிம்ஹன் வேடுவனாக வந்து லக்ஷ்மி தேவியை மணந்ததாக ஐதீகம்.

3. இங்கு மலையின் மேல் பாவநாசினி என்னும் நீர்வீழ்ச்சி உள்ளது. அதன் கரைவழியாக மலைமேல் ஏறிச்சென்று, வராஹ ந்ருஸிம்ஹனை சேவித்துவிட்டு, இன்னும் மேலே சென்று செங்குத்தான மலைமேல் ஒரு சிறிய சந்நிதியில்

உள்ள மாலோல ந்ருஸிம்ஹனைச் சேவிக்கலாம். அங்கிருந்து மேலும் 4 கி.மீ தூரம் சென்று ஸ்ரீந்ருஸிம்ஹன் வெளிப்பட்டதாகக் கூறப்படும் தூண் உள்ளது. "அஹோ, என்ன பலம்" என்று தேவர்கள் வர்ணித்ததால் ஸ்தலத்திற்கு "அஹோபலம்" என்று ஏற்பட்டு, இப்போது மருவியுள்ளது. இங்கு தகுந்த துணையுடன் செல்ல வேண்டும். காட்டு மிருகங்கள் நடமாடக்கூடிய பகுதியாகும்.

6. ஸீதா தேவியைத் தேடிவரும் ராமன் தம்பி லக்ஷ்மணனுடன் அஹோபிலம் வந்து ஸ்ரீலக்ஷ்மி ந்ருஸிம்மனை ஐந்து ஸ்லோகங்களால் துதித்ததால், ஸீதை கிடைத்து விட்டதாக ஐதீகம். ஆஹோபில மடத்தின் மூலவர் ஸ்ரீலக்ஷ்மி ந்ருஸிம்மராகவும், உத்சவர் சக்கரவர்த்தி திருமகனாகவும் ஸேவை சாதிக்கிறார்கள்.

7. இத்தலத்தில் முதலாவது அழகிய சிங்கர், அஹோபில மலையில் எழுந்தருளியிருக்கும் ந்ருஸிம்ஹனை ஸேவிக்கும் தருணம், பெருமாள் சந்யாசி ரூபத்தில் வந்து, கடாக்ஷித்து பின்னர் அவருக்கு ப்ரேஷ மந்திரத்தைத் தானே உபதேசித்தருளி, அவரைத் துறவறத்தில் சேர்த்து, அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமானுஜ சந்நிதியிலிருந்து காஷாய வஸ்திரங்களையும், த்ரிதண்டத்தையும் அனுக்கிரகித்து, ஸ்ரீசடகோபஜீயர் என்று நாமமிட்டு, ஒரு வைஷ்ணவ ஸ்தாபனத்தை நிறுவுமாறு நியமித்தருளியதாக புராண வரலாறு.

பதினேழு வயதான சடகோப ஜீயர் எந்த உத்சவ மூர்த்தியை தான் ஸ்வீகரிப்பது என்று தெரியாமல் திகைத்து பெருமாளை த்யானம் செய்ய, ஸ்ரீபெரிய பிராட்டியாருடன் விளங்கும் ஓர் உத்சவ மூர்த்தியான மாலோல ந்ருஸிம்ஹன் அவர் கையில் வரப்பெற்று, அன்று முதல் அஹோபில மடத்து ஜீயர்கள் பரம்பரை பரம்பரையாக இந்த மூர்த்தியைத்தான் தாங்கள் செல்லும் இடங்களுக்கெல்லாம் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு ஆராதித்து வருகிறார்கள்.

8. அஹோபில மடத்து ஜீயர்களில் ஒருவரான 6-வது பட்டம் அழகிய சிங்கர் ஸ்ரீஷஷ்ட பராங்குச யதீந்த்ர மகாதேசிகன் இங்குள்ள மலைமேல் உள்ள ந்ருஸிம்மன் சந்நிதியில் (அஹோபில ந்ருஸிம்ஹர்) ஒரு குகையினுள் சென்று இன்னும் த்யானத்தில் இருப்பதாக ஐதீகம். தற்போது அந்த குகை சிமெண்டினால் மூடப்பட்டுள்ளது. அங்கே சிரஞ்சீவியாக இருக்கிறார் என்று பெரியவர்கள் சொல்கின்றனர்.

9. கீழ் அஹோபிலம் ராஜகோபுரத்துக்கு எதிரில் 80 அடிகளுக்கு மேலான உயரத்தில் ஒரே கல்லாலான தூண் இருக்கிறது. பூமிக்குக் கீழேயும் 30 அடி ஆழத்திற்குப் புதைந்துள்ளது. இதை "ஜெய ஸ்தம்பம்" என்று கூறுகிறார்கள்.

10. சுற்று வட்டாரத்தில் பல குளங்கள், மண்டபங்கள் உள்ளன. ஆதிசங்கர பகவத்பாதாளை இந்த மலையில் ஒரு காபாலிகன் கொலை செய்ய முயன்றபோது, ஸ்ரீந்ருஸிம்ஹப் பெருமாளே அவரைக் காப்பாற்றினார் என்பது ஸ்தல வரலாறு.

11. இத்தலத்தை திருமங்கையாழ்வார் மட்டும் மங்களாசாசனம் செய்துள்ளார்.

## 104. திருவதரியாச்ரமம் (பத்ரிநாத்)

*ஏனமுனாகி இருநிலமிடந்து அன்று இணையடி இமையவர் வணங்க*
*தானவனாகம் தரணியில் புரளத் தடஞ்சிலை குனித்த என் தலைவன்*
*தேனமர் சோலைக் கற்பகம் பயந்த தெய்வநல்நறுமலர் கொணர்ந்து*
*வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல் வதரியாச்*
*சிராமத்துள்ளானே.*

- **பெரிய திருமொழி** - 1-4-1

கடல் மட்டத்திலிருந்து சுமார் 10,500 அடி உயரத்தில் இமயமலையில் பனிக்குன்றுகட்கு மத்தியில் பனிபடர்ந்த சூழலில் இலந்தை மரக்காடுகள் நிறைந்து விளங்கும் இடத்தில் அமைந்துள்ளது. ரிஷிகேசில் இருந்து 300 கி.மீ பஸ்ஸில் ஹிமாலய மலையில் பிரயாணம் செய்து, இத்தலத்தை அடையலாம்.

மகாலக்ஷ்மிக்கு பிடித்தமான பத்ரி (இலந்தை) எனப்படும் மரத்தின் கீழே அமர்ந்ததால் பத்ரிகா ஆஸ்ரமம் - பத்திரகாச்ரமம் - என்பர். இங்குதான் பெருமாள் தாமே குருவாகவும், சீடனாகவும் இருந்து கொண்டு திருமந்திர உபதேசம் செய்தருளினார். "ஓம் நமோ நாராயணாய" என்ற மந்திரத்தை நாராயணன் என்ற திருநாமத்துடன் வந்து நரன் ஆகிய உலகத்திற்கு உகந்தருளின இடம் இத்தலமாகும்.

**மூலவர்** : பத்ரி நாராயணன் - வீற்றிருந்த திருக்கோலம் - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : அரவிந்தவல்லி

**தீர்த்தம்** : தப்த குண்டம்

**ஸ்தல வ்ருக்ஷம்** : பத்ரி வ்ருக்ஷம்

**விமானம்** : தப்த காஞ்சந விமானம்

**ப்ரத்யக்ஷம்** : நரன்

**சிறப்புக்கள்:**

1. 108 திவ்ய தேசங்களிலேயே, பகவான் இங்குதான் ஆச்சாரியன் ரூபத்தில் எழுந்தருளியுள்ளார். திருமந்திரத்தை உபதேசம் செய்ய தன்னை ஆச்சார்யனாக வெளிப்படுத்திய ஸ்தலம். எனவேதான் தனது இடது கைகளை யோக முத்திரையாகக் கொண்டு, ஒரு தபஸ்வியின் வடிவில் இலந்தை மரத்தடியில் பத்மாசனத்தில் எழுந்தருளியுள்ளார்.

2. ஸ்ரீபத்ரிநாராயணன் பத்ரி மரத்தின்கீழ், ஜடாபரிதனாய் சதுர்புஜனாய் மேல் வலக்கையில் சக்கரமும், மேல் இடக்கையில் சங்கும் தரித்து கீழ் வலது, இடது கைகளை யோக முத்திரையாகக் கொண்டு ஸேவை சாதிக்கிறார்.

3. பகவானின் வலப்புறம் தனபதிகுபேரனும், கருடனும் அமர்ந்திருக்கிறார்கள். இடப்புறத்தில் தேவரிஷி, நாரதர், உத்தவர், நாராயணர், நரர் முதலியோர் உள்ளனர்.

4. இங்கு செல்வதற்கு, முதலில் டெல்லியிலிருந்து ஹரித்வார் வந்துவிட வேண்டும். அங்கு ப்ரஹ்மகுண்டம் என்ற ஸ்நான கட்டத்தில் நீராடி, 24 கி.மீ தொலைவிலுள்ள ரிஷிகேசம் சென்று, அங்கிருந்து பத்ரிநாத் போகும் பஸ்மூலம் தேவப்ரயாகையை அடைய வேண்டும். இதுதான் "கண்டமென்னும் கடிநகர்" என்ற திவ்யதேசம்.

அளகாநந்தாவும், தோலி கங்காவும் சங்கமமாகும் இடத்தில்தான் பத்ரிநாத் அமைந்துள்ளது. மஹாவிஷ்ணு கோயில் கொண்டுள்ளார். நாரத மஹரிஷி அஷ்டாக்ஷர மந்திரத்தினால் விஷ்ணுவை பூஜை செய்த புண்யஸ்தலம்.

5. பத்ரிநாத் கோயிலிலுள்ள உத்சவமூர்த்திகள், பனிமூடிய 6 மாதகாலம், இங்குள்ள வாஸுதேவர் கோயிலில் வைத்து பூஜிக்கப்படுகின்றனர். இது பாண்டவர்களின் ஜன்ம ஸ்தானமாகவும், பாண்டு மஹாராஜா தவம் செய்த இடமாகவும் கருதப்படுகிறது.

6. கங்கையின் எதிர்கரையில் தப்த குண்டம் என்ற வென்னீர் ஊற்றும், எதிரே பத்ரி நாராயணன் ஆலயமும் உள்ளன. ஆலயத்திற்கு எதிர்புறம் நரநாராயண பர்வதங்களும், வலப்புறம் நீலகண்ட பர்வதமும் உள்ளன. தப்த குண்டத்திலிருந்து சிலபடிகள் மேலேறி கருடாழ்வானுக்கு அஞ்சலி செலுத்திவிட்டு கோயில் பிராகாரத்தை அடைய வேண்டும். கோயிலில் ஸ்ரீபத்ரி நாராயணன், அரவிந்த வல்லித்தாயார், கருடன், நாரதர், நரநாராயணர்கள் முதலானோர் பேரெழில் வாய்ந்தவர்கள்.

7. இங்கு பெருமாள் சாளக்ராம மூர்த்தியாக (ஸாளக்கிராமச் சிலையாக) எழுந்தருளியுள்ளார்.

8. இப்பெருமாளுக்கு எதிரில் திரைபோடுவது இல்லை. திருமஞ்சனம், சாத்துப்படி, நைவேத்யம், எல்லாம் மக்கள் எதிரிலேயே நடக்கின்றன.

9. இரவில் வடநாட்டு பிராமணர்கள் சாஞ்சி பஞ்சகம் போன்ற மந்திரங்களை ஸேவிக்க, ஆடைகளையும், மாலைகளையும் களைந்து, சிறிய துண்டு சார்த்தும் காட்சிக்கு கீதகோவிந்தம் என்று பெயர். கோயில் பூஜை விதிமுறைகளை நன்றாகக் கற்றறிந்தவர்களாகவும், ஸம்ஸ்க்ருத பாஷையில் தேர்ந்தவர்களாகவும், நல்லொழுக்கம் பூண்டவர்களாகவும் உள்ளவர்களே இந்த ஸ்தானத்திற்கு நியமிக்கப்படுகிறார்கள். இந்த பூஜையை அருகில் இருந்து பார்க்க தனிக்கட்டணம் உண்டு.

10. கோயிலுக்கு சிறிது வடக்கே கங்கைக் கரையில் ப்ரஹ்ம கபாலம் என்ற பெரிய பாறை இருக்கிறது. இங்கு பித்ருக்களுக்கு ச்ராா்த்தம் செய்தால் நம் முன்னோர்களின் அனைத்து தலைமுறையினர்க்கும் மோக்ஷம் கிடைப்பதாகவும், அதற்குப் பிறகு சிரார்த்தம் செய்ய வேண்டியதில்லை என்பதும் ஐதீகம்.

11. கோயில் ப்ராகாரத்திற்குள் லக்ஷ்மி தேவிக்கும், ஆதிசங்கரருக்கும் தனிக்கோயில்கள் உள்ளன.

12. கோயிலின் பின்புறம் லக்ஷ்மி ந்ருஸிம்ம மந்திர் என்கிற தனிக்கோயிலில் ஸ்ரீஸ்வாமி தேசிகன், ஸ்ரீமத் ராமானுஜர் முதலியோருக்கு ஸந்நிதிகள் உள்ளன.

13. இவ்வூரில் வஸுதாரா என்ற பனிமலை நீர்வீழ்ச்சியின் திவலைகள் தன்மேல் பட்டுப் புனிதமாவதற்குப் பல யாத்ரிகர்கள் அங்கு செல்வதுண்டு.

14 இத்தலம் குளிர்காலமான 6 மாதத்திற்கு மூடப்பட்டு, சித்திரைமாதம் சித்ரா பௌர்ணமியன்று மீண்டும் திறக்கப்படும். யாத்திரைக்கு மே, ஜுன் மாதங்கள் உகந்தவை.

15. பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் இத்தலத்தை மங்களாசாசனம் செய்துள்ளனர்.

## 105. திருஅயோத்தி

*ஆலினிலைப் பாலகனாய் அன்று உலகமுண்டவனே!*
*வாலியைக் கொன்று அரசு இளையவானரத்துக்கு அளித்தவனே!*
*காலின் மணிகரையலைக்கும் கணபுரத்து என் கருமணியே!*
*ஆலிநகர்க்கு அதிபதியே! அயோத்திமனே! தாலேலோ.*

- **பெருமாள் திருமொழி** - 8-7.

லக்னோ ரயில் மார்க்கத்தில் பைசாபாத் ஸ்டேஷனிலிருந்து சுமார் 5 கி.மீ தொலைவில் அயோத்தி உள்ளது.

ப்ருஹ்மாவின் முதல் பிள்ளையாகிய ஸ்வாயம்புவமனுக்கு ஸ்ரீமந்நாராயணன் வைகுண்ட மத்தியிலிருந்து அயோத்தி என்னும் பாகத்தை ப்ருஹ்மா மூலமாக மனு சக்ரவர்த்தி கையில் கொடுக்க, அவர் அதை பூலோகத்துக்குக் கொண்டு வந்து ஸரயு நதியின் தென்கரையில் ஸ்தாபித்தார் என்பது ஸ்தல வரலாறு. அதனால்தான் "அம்புயத்தோன் அயோத்தி மன்னருக்கு அளித்த கோயில்" என்னும்படி ஆயிற்று. முத்தி தரும் ஏழு நகரங்களில் இதுவும் ஒன்று.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | ஸ்ரீராமன், சக்கரவர்த்தி திருமகன், ரகுநாயகன் - வீற்றிருந்த திருக்கோலம் - வடக்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | சீதாபிராட்டி |
| **தீர்த்தம்** | : | பரமபதஸத்ய புஷ்கரிணி, ஸரயு நதி |
| **விமானம்** | : | புஷ்கல விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | பரதாழ்வான், தேவர்கள், முனிவர்கள் |

**சிறப்புக்கள்:**

1. ஸரயு நதிக்கருகில் தென்னிந்திய பாணியில் கட்டப்பட்டுள்ள அம்மாஜி மந்திர் என்ற கோயில் அதே பழைய இடத்தில் இருக்கிறது. ஸ்ரீரங்கநாதன் சந்நிதியுடன் கூடிய ஸ்ரீராமர் ஸந்நிதி அதே பாணியில் உள்ளது.

2. ராம, லக்ஷ்மண, சீதை, அனுமார் ஆகியவர்கட்கும் எண்ணற்ற சின்னஞ்சிறு கோவில்கள் உண்டு. எங்கு நோக்கினும் ராமபிரான் சந்நிதிகளே.

3. அநுமான்கடி என்றழைக்கப்படும் மிகப்பெரிய ஆஞ்சநேய மூர்த்தி கோவில் ஒன்று இந்த ராமஜென்ம பூமிக்கருகில் உள்ளது.

4. பெரியாழ்வார், குலசேகராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய 5 ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும்.

## 106. திருப்பிரிதி
## (ஜோஷிமட், நந்தப்ரயாக்)

*இரவு கூர்ந்திருள் பெருகிய வரைமழை இரும்பசியது கூர*
*அரவம் ஆவிக்கும் அகன்பொழில் தழுவிய அருவரை இமயத்துள்*
*பரமனாதி எம்பனிமுகில் வண்ணனென்று எண்ணிநின்று இமையோர்கள்*
*பிரமனோடு சென்று அடிதொழும் பெருந்தகைப்பிருதி சென்றடை*
*நெஞ்சே!*

- **பெரிய திருமொழி** - 1-2-8.

ரிஷிகேசத்திலிருந்து பத்ரிநாத் செல்லும் வழியில் உள்ள ஜோஷிமட் என்ற இடந்தான் திருப்பிருதி என்பது பொதுவான அபிப்ராயம். ஹரித்வாரிலிருந்து 240 கி.மீ. இன்னொரு பிரிவினர் நந்தப் பிரயாகைதான் திருப்பிரிதி என்றும் கூறுவர். இவ்விரண்டும் இல்லை. அது எங்கோ இமயமலையின் உட்புறப் பகுதிகளில் எங்கோ இருக்கிறது என்றொரு கருத்தும் உண்டு.

ஆதி சங்கரர் இவ்விடத்தில் ஜ்யேஷ்டிஷ் பீடத்தை ஸ்தாபனம் செய்து ஒரு முசுக்கட்டை மரத்தடியில் தவமிருந்து திவ்ய ஞானம் பெற்று, சங்கர பாஷ்யத்தை இயற்றியதாக ஐதீகம்.

**மூலவர்** : பரம புருஷன் - புஜங்க சயனம - கிழக்கே திருமுக மண்டலம்.

**தாயார்** : பரிமளவல்லி நாச்சியார்

**தீர்த்தம்** : இந்த்ர தீர்த்தம், கோவர்த்தன தீர்த்தம், மானஸஸரஸ்

**விமானம்** : கோவர்த்தன விமானம்

**ப்ரத்யக்ஷம்** : பார்வதி

**சிறப்புக்கள்:**

1. திருமங்கையாழ்வார் முதன் முதலில் மங்களாசாசனம் செய்த தலம். இங்கிருந்து தான் அவர் மங்களாசாசனத்தை தொடங்கினார்.

2. இப்போது ஆதிசங்கரரால் கட்டப்பட்ட ந்ருஸிம்மர் ஆலயமும், வாஸுதேவர் ஆலயமுமே உள்ளன. வாஸுதேவர் நின்ற திருக்கோலத்தில் ஸேவை சாதிக்கின்றார். இப்பெருமாளைத்தான் ஆழ்வார் பாடியுள்ளதாகக் கூறுகின்றனர். இக்கோயிலுக்கு சுமார் 1 கி.மீ தூரம் படியிறங்கிச் செல்ல வேண்டும்.

3. திருமங்கையாழ்வாரால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

**நில உலகில் பார்க்க முடியாத ஸ்தலங்கள் - 2**

| அமர்ந்த திருக்கோலம் | கிடந்த திருக்கோலம் |
| --- | --- |
| **தெற்கு** | **தெற்கு** |
| 108. திருப்பரமபதம் (ஸ்ரீவைகுண்டம்) | 107. திருப்பாற்கடல் |

## 107. திருப்பாற்கடல் (வ்யூஹம்)

*அரவத்த மளியினோடும் அழகிய பாற்கடலோடும்*
*அரவிந்தப் பாவையும் தானும் அகம்படி வந்துபுகுந்து*
*பரவைத்திரை பலமோதப் பள்ளிகொள்கின்ற பிரானை*
*பரவுகின்றான் விட்டுசித்தன் பட்டினம் காவற்பொருட்டே.*

- **பெரியாழ்வார் திருமொழி** - 5-2-10.

*ஒண்பவள வேலையுலவு தண்பாற்கடலுள்*
*கண்துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்கு*
*பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்து*
*செண்பகமாய் நிற்கும் திருவுடையெனாவேனே.*

- **பெருமாள் திருமொழி** - 4-4

*பள்ளியாவது பாற்கடல் அரங்கம் இரங்கவன் பேய்முலை*
*பிள்ளையாய் உயிருண்ட எந்தை பிரானவன் பெருகுமிடம்*
*வெள்ளியான் கரியான் மணிநிற வண்ணனென் றெண்ணி நாள்தொறும்*
*தெள்ளியார் வணங்கும் மலைத்திருவேங்கடம் அடை நெஞ்சமே!*

- **பெரிய திருமொழி** - 1-8-2.

*பரிசுநறுமலரால் பாற்கடலான் பாதம்*
*புரிவார் புகப்பெறுவர் போலாம் - புரிவார்கள்*
*தொல்லமரர் கேள்வித் துலங்கொளிசேர் தோற்றத்து*
*நல்லமரர் கோமான் நகர்.*

- **இரண்டாம் திருவந்தாதி** - 3.

*பயிலும் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக் கண்ணனை*
*பயிலஇனிய நம்பாற்கடல் சேர்ந்த பரமனை*
*பயிலும் திருவுடையார் யவரேனும் அவர்கண்டீர்*
*பயிலும் பிறப்பிடைதோறு எம்மையாளும் பரமரே.*

- **திருவாய்மொழி** - 3-7-1

திருப்பாற்கடல் என்பது இந்நிலவுலகில் இல்லை. பரமபதம் போன்று அதுவும் விண்ணுலகிலேயே உள்ளது. இந்த ஸ்தூல சரீரத்துடன் அங்கு செல்ல முடியாது. ஸூக்ஷ்ம சரீரம் பெற்ற பிறகே

செல்லலாம். 106 திவ்ய தேசங்களை சேவித்தபின், அவர்கள் பரமபதித்தபின், பகவானே இந்த திவ்ய தேசத்துக்கு அழைத்துச்சென்று ஸேவை ஸாதிக்கின்றார் என்பது பெரியோர்கள் நம்பிக்கை.

| | | |
|---|---|---|
| **மூலவர்** | : | பாற்கடல் வண்ணன் - க்ஷீராப்தி நாதன் (வ்யூஹ நிலை) - ஆதிசேஷ சயனம் - தெற்கே திருமுக மண்டலம். |
| **தாயார்** | : | கடல்மகள் நாச்சியார் - ஸ்ரீ பூதேவி |
| **தீர்த்தம்** | : | அம்ருத தீர்த்தம், திருப்பாற்கடல் |
| **விமானம்** | : | அஷ்டாங்க விமானம் |
| **ப்ரத்யக்ஷம்** | : | ப்ரும்மா, சிவன், ருத்ராதி முதலிய தேவர்கள் |

**சிறப்புக்கள்:**

1. இந்நிலவுலகில் இல்லாத இந்த திருப்பாற்கடலை பத்து ஆழ்வார்களும் 51 பாக்களினால் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

2. வராகம், கூர்மம், மச்சம் என்னும் மூன்று அவதாரங்களை பாற்கடலில் கிடந்த வண்ணத்திலிருந்தே பெருமாள் மேற்கொண்டார் என்கிறார் பெரியாழ்வார்.

3. ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பஞ்ச வ்யூகங்கள் இங்குதான் ஆரம்பமாகிறது.

   1. க்ஷீராப்தி நாதன் 2. வாசுதேவன் 3. அநிருத்தன்
   4. ப்ரத்யும்னன் 5. ஸங்கர்ஷணன்.

## 108. திருப்பரமபதம் (திருநாடு, பரம்) (வைகுண்டம்)

*சூழ்விசும் பணிமுகில் தூரியம் முழக்கின*
*ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின*
*ஏழ்பொழிலும் வளமேந்திய என்னப்பன்*
*வாழ்புகழ் நாரணன் தமரைக் கண்டுகந்தே.*

- **திருவாய்மொழி** - 10-9-1

*பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்*
*கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல் - வண்டு*
*வளங்கிளரும் நீள்சோலை வண் பூங்கடிகை*
*இளங்குமரன் தன் விண்ணகர்.*

- **மூன்றாம் திருவந்தாதி** - 61

*வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத*
*பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் நான்கிடத்தும்*
*நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே*
*என்றால் கெடுமாம் இடர்.*

- **முதல் திருவந்தாதி** - 77

*ஏன்றேன் அடிமை இழிந்தேன் பிறப்பிடும்பை*
*ஆன்றேன் அமரர்க்கமராமை - ஆன்றேன்*
*கடன்நாடும் மண்ணாடும் கைவிட்டு மேலை*
*இடநாடு காண இனி.*

- **நான்முகன் திருவந்தாதி** - 95.

*தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய*
*தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்*
*மாமான்மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்*
*மாமீர்! அவளையெழுப்பீரோ? உன்மகள்தான்*
*ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?*
*ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ?*
*மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று*
*நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய்.*

- **திருப்பாவை** 9.

பரம பதத்திலிருந்து தன்னை வ்யூகப்படுத்தி விபவ, அர்ச்சாதவதாரங்களில் தன்னைக் காட்டிக் கொடுத்து இவைகளே பரத்தினும் மேலானவை என்று எண்ணி ஆட்பட்ட அடியவர்களை பூவுலகில் அவர்களுக்கு விதிக்கப்பட்ட காலம் முடிவுற்றபின் அவனே வந்து அழைத்துச் செல்கிறான்

இது பூலோகத்தில் இல்லை. இது வைஷ்ணவர்களின் லக்ஷ்யமான மோக்ஷ நிலையாகும். எம்பெருமானின் பரத்வம் விளங்குமிடம். இங்கு ஜீவாத்மாக்கள் பகவானைப் போலவே ஸ்வரூபம் பெற்று, ஆனால் அவனுடன் இரண்டறக் கலக்காமல் அவனுக்கு கைங்கர்யம் செய்வார்கள். ஸ்ரீமத் ராமானுஜர் தமது வேதாந்த ஸங்க்ரஹம் என்ற க்ரந்தத்தில் திருநாட்டைப் பற்றித் தெளிவாகவும், நேரில் பார்ப்பது போலவும் அருள்கிறார். அவரது வைகுண்டகத்யத்தில் பரமபத வர்ணனை சிறப்பாக இருக்கும்.

**மூலவர்** : பரமபதநாதன் - வீற்றிருந்த திருக்கோலம் - தெற்கே திருமுக மண்டலம்

**தாயார்** : பெரிய பிராட்டியார்

**தீர்த்தம்** : விரஜாநதி, அயிரமத புஷ்கரிணி

**விமானம்** : அநந்தாங்க விமானம்

**ப்ரத்யக்ஷம்** : ஆதிசேஷன், கருடன், நித்ய ஸூரிகள், முக்தர்கள்

**சிறப்புக்கள்:**

1. இங்கே சென்றவர் யாரும் திரும்புவது இல்லையாகையால், "தெளி விசும்பு திருநாடு", "நலமந்தமில்லாதோர் நாடு" "சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி" என்றெல்லாம் ஆழ்வார்கள் வர்ணித்திருப்பதே நமக்குச் சான்று.

2. 106 திவ்ய தேசங்களையும் ஸேவித்த பக்தர்களை அவர்கள் பரமபதித்த பின் பகவானே இந்த திவ்ய தேசத்தை அவர்களுடைய நிரந்தர வாசஸ்தலமாக்கி மகிழ்விப்பான் என்பது பெரியோர் வாக்கு.

3. வாசுதேவன், வாழும்படியான இருப்பிடமாதலால், வைகுந்தம் என்று பெயர்.

4. எம்பெருமானின் சகல ரூபங்களுக்கும் ஆதியானதாக, மூலமானதாக, உற்பத்தி ஸ்தானமாக பரமாய் இருப்பதால் பரமபதம் என்று பெயர்.

5. எட்டு ஆழ்வார்களால் 36 பாசுரங்களில் மங்களா சாசனம் செய்யப்பட்ட நாடாகும். நம்மாழ்வார் வைகுந்தம் செல்லும் காட்சிகளை 10 பாசுரங்களில் விளக்குகிறார்.

## Reference:


1. 108, வைணவ திவ்ய தேச ஸ்தல வரலாறு - by டாக்டர். வைணவச் சுடராழி ஆ. எதிராஜன் அவர்கள், காரைக்குடி.

2. 108 ஸ்ரீ வைஷ்ணவ திவ்ய தேச வைபவமும் புராண - அபிமான ஸ்தலங்களும் - லிப்கோ.

3. திவ்ய தேச தர்சனம் - மாயன் பதிப்பகம், சென்னை.

4. ஸப்தகிரி - திருமலை - திருப்பதி தேவஸ்தான சமயமாத இதழ்.

5. ஸ்ரீ வேங்கடாத்ரி க்ருபா - வைஷ்ணவ மாதப் பத்திரிகை - கோயம்புத்தூர்.

6. பாஞ்சஜன்யம் - மாத இதழ் - ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ வெளியீடு, ஸ்ரீரங்கம்.

7. "108 திருப்பதிகள்" - கட்டுரை by ப்ரியா கல்யாணராமன் - குமுதம் பக்தி ஸ்பெஷல் மாத இதழ்.